சென்னையில் வேலை பார்த்த 'போ:.பர்ஸ்' குவாட்ரோச்சி!
— ருசிகரமான புதிய தகவல்

# கல்கி

KALKI 9.3.97 ரூ. 3.00



"அழகான ஆண் மாடல்களே இல்லையே...!"

— விளம்பரப் படத் தயாரிப்பாளர் ஸ்ரீமதி

# காலமெல்லாம் காதல் வாழ்க

தமிழ் சினிமாவுக்கும் உய்வில்லை; தமிழ் சினிமா ரசிகர்களுக்கும் உய்வில்லை! - படத்தைப் பார்த்துவிட்டு வெளியே வரும்போது ஏற்படும் பலமான வருத்தம் இது.

பின்னே என்ன சார்!

ஊதுவதற்கு வாய் குவித்தாலே பறந்து போய்விடக்கூடிய கனத்தில் ஒரு திரைக்கதை! உப்புப் பெறாத ஒன்றரையணா சஸ்பென்ஸ்; நாடக மேடைகளில் கேட்டுப் பழகிய துணுக்குத் தோரணை டயலாக்...

இந்தப் படத்துக்கு ஹவுஸ்ஃபுல்! 'தேவிகலா தேவிகலா' - ஸ்டேஷனில் சாய் விற்கிற மாதிரி பினாக்கிள் டிக்கெட் அமர்க்களப்படுகிறது!

கண்டதும் காதல், காணாமலே காதல், என்று சினிமா காதல் வரிசையில் சேர்த்துக் கொள்ள வேண்டிய டெலிபோன் காதல்!

வெங்கல கூஜா போல் பளபளக்கும் பவுடர் முகத்துடன் ஹீரோ! பார்பி பொம்மைக்குப் புடவை சுற்றியது போல் ஹீரோயின்.

நடிப்பு...? - அதெல்லாம் எதற்கு? சும்மா வந்து போகிறார்கள். நிறைய பாட்டு பாடுகிறார்கள்... (இப்போதெல்லாம் தமிழ் சினிமா ஹீரோ அல்லது ஹீரோயின் பாடகராக இருக்க வேண்டும் என்பது கம்பல்ஸரி!) காமெராவை சாய்த்து, நிமிர்த்தி, கவிழ்த்து, பச்சை, நீலம் என்று ஃப்ரேம் ஃப்ரேமாக வண்ணத்தால் நிரப்புகிறார்கள். கூடவே 'டைமிங் காமெடி' என்ற பெயரில் முக்கால்வாசி ஜொள்ளு ஜோக்ஸ் கொண்டு கதையை நெம்பித் தள்ளி... ஒருவழியாக ஹீரோவுக்குக் காதல் பித்துப் பிடித்து ஆஸ்பத்திரியில் சாகக் கிடக்க, அது ஹீரோயினுக்குத் தெரிய வர... ஆஸ்பத்திரி வார்டில் இருக்கும் போனில் அதே அறையில் இருந்தபடி செல்போன் மூலம் 'அவன்' பேச... அந்த அபத்த கிளைமேக்ஸ் முடிவதற்குள் தியேட்டரில் விசில் காது கிழிகிறது!

இளமை, ஜோக்ஸ், வண்ணம், இசை, நடனம், நோகடிக்காத நெல்லிக்காய் சைஸ் கதை - இதுதான் இன்றைக்கு விலை போகும் என்றால் - இதையெல்லாம் வைத்துக் கொண்டும் நம்பும்படியான, புத்துணர்ச்சியுள்ள படத்தை எடுக்க லாமே... அடுத்த முறையாவது இயக் குனர் பாலு முயன்று பார்க்கட்டும்.

மாறாக, இதே ரகமான 'காதல்' படங்கள்தான் தொடர்ந்து வருமானால் - 'காலமெல்லாம் காதல் வாழ்க' என்று கட்சி மாறும் அளவுக்கு நமக்கு காதல் பேரிலேயே வெறுப்பு வந்துவிடும்!

- தாமணி

போஃபர்ஸ் ஊழல் பற்றித் தெரியாதவர்களே இருக்க முடியாது. அதில் பெருமளவு சம்பந்தப்பட்டிருப்பவராகப் பேசப்படுபவர் குவாட்ரோச்சி. இப்போது மலேஷியாவில் தங்கியிருக்கும் அவரை இந்தியாவுக்குக் கூட்டிவர சி.பி.ஐ. முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிறது. குவாட்ரோச்சி என்பவர் யார்? அவரது பின்னணி என்ன? விளக்குகிறார் எஸ்.எஸ். மாரிசாமி.



# சென்னையில் வேலை பார்த்த குவாட்ரோச்சி!

'அந்த ஊர்க்காரனை நம்பாதே; இந்த ஊர்க்காரனை நம்பாதே' என்று சில ஊர்களைக் குறிப்பிட்டு நம் நாட்டில் பேசுவார்கள். அதேபோல் ஐரோப்பாவைப் பொறுத்த மட்டில் 'எந்த நாட்டானை நம்பினாலும் சிசிலிக்காரனை நம்பாதே' என்று சொல்லுவார்கள். ஐரோப்பியர்களுக்கு சிசிலிக்காரர்களைக் கண்டால் அப்படியொரு அலர்ஜி!

இத்தாலியைச் சேர்ந்த சிசிலி மத்தியதரைக் கடலில் மிதக்கும் தீவு. மாஃபியா என்ற பயங்கரக் கும்பல் ஜனனம் எடுத்த இடம். கொலை, கொள்ளை, போதை மருந்து கடத்தலில், உலகெங்கிலும் ஈடுபடும் வல்லமை உடையவர்கள் சிசிலி மாஃபியாக்காரர்கள். இந்த ஊரைச் சேர்ந்தவர்தாம் ஆட்டோவியா குவாட்ரோச்சி (OTTAVIO QUATTROCHI).

வியாபாரத் தந்திரங்கள் தெரிந்தவர் இவர். எங்கு தட்டினால் கதவு திறக்கும் என்ற வித்தை அறிந்தவர். குவாட்ரோச்சி இருக்கும் இடம் கலகலப்பாக இருக்கும். லன்ச், டின்னர், ஆல்கஹால் என்று தூள் பறக்கும்.

சோனியாவின் தாயார் மியோனா குடும்பத்தோடு நெடுநாளைய பழக்கம் குவாட்ரோச்சிக்கு. ராஜீவ் - சோனியா கல்யாணத்துக்கு டெல்லி வந்திருந்தார் மியோனோ. அவருக்கு இத்தாலிய மொழி மட்டுமே தெரியும். இந்திரா வீட்டிலோ இந்தி, ஆங்கிலம் மட்டுமே! ஆகவே மியானோ கொஞ்சம் சகஜமாகப் புழங்கவும் பேசவும் யாராவது இத்தாலியர் ஒருவர் வீட்டில் தங்க வைக்கலாமா என்று யோசனை கிளம்பியது. அப்போது மரியோ என்ற இத்தாலியப் பெண்மணி, மியோனோ தமது வீட்டில் தங்கலாம்

என்று அழைப்பு விடுத்தார். அந்த மரியோ யார் தெரியுமா? குவாட்ரோச்சியின் அருமை மனைவிதான்!

அப்போது குவாட்ரோச்சி, டெல்லியில் ஸ்நாம் பிரகதி என்ற கம்பெனியின் தொழில்நுட்ப ஆலோசகராக இருந்தார். பிறகு நைஜீரியா போன்ற ஆப்பிரிக்க நாடுகளிலும் பணிபுரிந்திருக்கிறார். இடையில் சென்னை எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையில் (MRL) இரண்டு வருடம் ஆலோசகராக இருந்த அனுபவமும் குவாட்ரோச்சிக்கு உண்டு.

இந்திராகாந்தி மரணம் அடைந்தபின் ராஜீவ் குடும்பத்தோடு அவருக்கு நெருக்கம் அதிகரித்தது. ராஜீவ் பிரதமரான பின் ஒருநாள் குவாட்ரோச்சியிடமிருந்து போன். தங்கள் குழந்தைக்குப் பெயர் சூட்டு விழா வைத்திருப்பதாகவும் அதற்கு வரவேண்டுமென்றும் அழைப்பு விடுத்தார். குவாட்ரோச்சியிடம் பேசி முடித்தவுடன் சோனியாவிடமிருந்து ராஜீவுக்கு போன் வந்தது. கண்டிப்பாக பெயர் சூட்டு விழாவுக்குப் போக வேண்டுமென்று சொன்னார் சோனியா. குவாட்ரோச்சி தம் குழந்தைக்கு வைத்த பெயர் : 'அனா மரியோ ப்ரியங்கா குவாட்ரோச்சி!

ராஜீவ் காந்தியின் ஆட்சிக் காலத்தில் இத்தாலியோடு நூற்றுக்கணக்கான வியாபார ஒப்பந்தங்களை இந்தியா போட்டது. இதற்குக் காரணம் , குவாட்ரோச்சிதான் என்று அப்போதைய எதிர்க்கட்சித் தலைவர்கள் மேடையிலும், பாராளுமன்றத்திலும் பேசினார்கள்.

ஒருமுறை ஸ்வீடன் பிரதமர் பாம்மியும் (Palme) ராஜீவும் வாஷிங்டனில் சந்தித்துப் பேசினார்கள். பாம்மி ஒரு உண்மையான சோஷலிஸ்ட். 'போஃபர்ஸ் ஒப்பந்தத்தில் எந்தவித இடைத்தரகரும் இருக்கக் கூடாது' என்று இரு பிரதமர்களும் கூட்டாக அறிக்கை விட்டனர். பின்னர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றபின் ஒருநாள் கடைத் தெருவில் பாம்மி சுட்டுக் கொல்லப்பட்டார். 'இந்தக் கொலைக்கு போஃபர்ஸ் விவகாரம் ஒரு காரணமாக இருக்கலாம்' என்று ஸ்வீடன் ரேடியோ கூறியது. சிசிலி மாஃபியாக்காரர்கள் எதற்கும் தயங்காதவர்கள் என்ற பேச்சும் அப்போது பரபரப்பாக அடிபட்டது.

சந்திப்பு : **ஆரெஸ்வீ.**



"இவர் எழுதற சிரிப்பு எல்லாம் சிந் தனையைத் தூண்டும்!"

"அப்படியா...!"

"ஆமா! ஏன்தான் இப்படியெல்லாம் எழுதுறாங்களோ...ன்னு சிந்திக்க வைக் கும்!"

— தேனி எஸ். மாரியப்பன்



"என் மகன் ஒரு 'ஐ.ஏ.எஸ்.' அதிகாரி யாயிருக்கார்னு பெண் வீட்டுக்காரரிடம் சொன்னது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"எந்த ஊழல் வழக்கிலும் அவன் சிக்கலேன்னு சர்டிபிகேட் கொண்டு வந்தால் தான் பொண்ணே கொடுப்போம்னு கண் டிஷனா சொல்லிட்டாரு!"

— மல்லிகை மன்னன்



"கலைஞர் சொல்லுற விலைவாசிப் பட்டியல் சரியா? எதிர்க்கட்சிக்காரங்க சொல்லுற விலைவாசிப் பட்டியல் சரியா?"

"நீ மளிகைக் கடையில போய் சாமான் வாங்கும்போது கடைக்காரர் உன் கையில தருவாரே ஒரு பட்டியல், அதுதான் சரி!"

— டி. செல்வன்

# கவிதை பாடும் கட்டடங்கள்!

சென்னையிலிருந்து, மகாபலிபுரம் செல்லும் சாலையில், சிரமத்தைப் பார்க்காமல் ஒரு முப்பது கிலோமீட்டர் பயணம் செய்ய வேண்டும்...

பத்து ஏக்கர் நிலப்பரப்பில் ஒரு குட்டி தென்னிந்தியாவைப் பார்த்து விடலாம் - 'தட்சிண சித்ரா!'

நகரத்துக்கு வந்துவிட்ட பிறகு, ஊர்ப் பக்கம் போய் அந்த நாளில் கட்டப்பட்ட, தூண்களும் திண்ணையுமான அழகான வீடுகளை யார் நினைவு வைத்திருக்கிறார்கள்?

"சுமார் 120 வருடங்களுக்கு முன் கட்டப்பட்ட நகரத்தார் வீடு ஒன்றை, அரியக்குடியை அடுத்த



• திருவாங்கூர் கிறிஸ்தவர் வீடு

கண்டனூரில் அது எப்படி இருந்ததோ, அப்படியே பெயர்த்து எடுத்து வந்து கட்டியிருக்கிறார்கள்! அந்த வீட்டைப் படமெடுத்து, டாகுமென்டேஷன் (நுணுக்கமாகக் குறிப்புகள்) செய்து எடுத்துக் கொண்ட பிறகு, அந்த வீட்டை இடித்து விட்டோம். அதன் மரக்கதவுகள், சட்டங்கள், சன்னல்கள் எல்லாவற்றையும் இங்கே கொண்டு வந்து பாலிஷ் செய்து கண்டனூரில் இருந்த வீடு போலவே இங்கே அமைத்து விட்டோம்!" என்றார் சென்னை கிராஃப்ட் ஃபவுண்டேஷன் ஊழியர் ராஜ்குமார்.

நம் முன்னோர்கள் எப்படி வாழ்ந்தார்கள்? அவர்கள் வசித்த சூழ்நிலை எப்படி இருந்தது? பாரம்பரியம் என்பது பேச்சளவில் இல்லாமல், பார்த்து மகிழவும் ஒரு வாய்ப்பாக இருக்க வேண்டித்



தொடங்கப்பட்டதுதான் இந்த தக்ஷிணசித்ரா.

அரசாங்கம் மற்றும் பல தனியார் நிறுவனங்களின் நிதி உதவியுடன் உருவான தக்ஷிண்சித்ரா - தென்னகத்துக்கு - குறிப்பாக சென்னைக்கு வரும் சுற்றுலாப் பயணிகளுக்கு ஒரு திகட்டாக விருந்து!

திண்டுக்கல் பூட்டும், கணக்குப்பிள்ளை மேசையும், குடையுமாக அந்தச் சூழலை அப்படியே கண்முன் நிறுத்துகின்றன, முதலில் நம் கண்களில் பட்ட கண்டனூர் வீடு. தூண்களும் அன்னபூரணியின் சிற்ப முகப்பும் முழுக்க முழுக்க பர்மா தேக்கு.

திருநெல்வேலி பிராமணக் குடும்ப வீடும், அதை ஒட்டிய ஹாலும், வெளியே கோசாலாவும் தனி அழகு.

மாயூரத்திலிருந்து விவசாயக் குடும்பத்து வீடு, கவிதையே பாடுகிறது. தூளியும், தொட்டிலும், ஊஞ்சலும், முற்றத்துக்கு அப்பால் நெல் மூட்டையும், மரக்கால், பக்காப் படிகளும், இன்னொருபுறம் குடும்பத்துப் 'பெரிய தெய்வ'த்துக்கு ஏற்றி வைத்த விளக்குமாக, மிராசுதாரர் வீட்டைக் கண் முன் நிறுத்துகிறது. வீட்டுக்கு வெளியே, அதற்கு உரிய இடத்தில் ஒரு மாட்டு வண்டி!

எதிர்ப்புறத்தில் தேர், காஞ்சிபுரத்திலிருந்து வரவழைத்து நிறுத்தியிருக்கிறார்கள்.

திருவள்ளூர் குயவனார் வீடும், திருநெல்வேலி பனையோலைக் குடிசையும் எளிமையிலும் தெரியும் அழகை அடக்கமாகச் சொல்லு கின்றன...

• நாயுடு வீடு

புதுக்கோட்டையிலிருந்து வந்து இரண்டு மாதங்களாக இங்கே தங்கியிருந்து அழகான டெர்ரகோட்டா (சுட்டமண் சிற்பங்கள்) செய்து கொண்டிருக்கும் ராமு வேளார், பிரம்மாண்டமான அன்னம் ஒன்றைச் செய்து கொண்டிருந்தார். "...லலி பிரகதி மைதானத்தில் ஐயனார் கோயில் அமைச்சுக் கொடுத்தேனுங்க!" என்கிறார் ராமு வேளார். தட்சிணசித்ராவின் வரவேற்பறைக்கு நேரே உள்ள பரிசுப் பொருள்கள் விற்பனைக்கூடத்தில் இருக்கும் கிராமத்துக் குதிர்கள் இவர் உருவாக்கியவை. வடிவழகைப் பார்த்தால் பிரமிப்புத் தட்டுகிறது. கையில் கற்பனையைக் குழைத்து மண்ணால் கவிதை படைக்கும் கலைஞர்



• ராமு வேளார்





• குழந்தைகளுக்கான
மாட்டு வண்டிப் பயணம்

இவர்.

"ஸ்டேட் அவார்ட், சென்ட்ரல் கவர்ன்மென்ட் அவார்டு ஏதும் வாங்கியிருக்கீங்களா?"

"அதெல்லாம் இல்லீங்க!"

**கா**ஞ்சிபுரத்துப் பட்டு நெசவாளரின் வீடும், தறியும், நூல் காய நீண்ட தாழ்வாரமும், அதையடுத்த கைத்தறி மியூசியமும், நூறு வருடத்துப் பட்டுச் சேலைகளும், மதுரை சுங்கடியும், செட்டிநாட்டுச் சேலையும், பார்த்துப் பார்த்துச் சேர்த்துச் சேர்த்து வைத்திருக்கிற அழகு ரசிக்க மட்டுமல்ல, பிரமிக்கவும் வைக்கின்றன.

அழகான வெள்ளைநிற ஐயனார் சிலைகளும், கிராமத்துக் கோயிலும் அப்பட்டமான கிராமியச் சூழலைத் தருகின்றன.

நடுவே குறுக்கிடும் 'புழை'யைத் தாண்டினால் திருவாங்கூர் பாணியில் கிறிஸ்தவ வீடு.

அடுத்து நாயர்களின் 'தரவாடு' வீடு. கோழிக்கோட்டிலிருந்து பெயர்த்து எடுத்து வந்த வீடு. மர வேலைப்பாடு மட்டுமே அசர வைக்கும்.

தாண்டினால் நம்பூதிரி 'இல்லம்'. கேரள கோயில் பாணியிலேயே உருவான வீடு.

புகழ் பெற்ற பிரிட்டிஷ் ஆர்க்கிடெக்ட் லாரிபேக்கரின் டிசைன்களை, அவரது மாணவர் பின்னி குரியாகோஸ்தான் வடிவமைத்தாராம்.

**க**ர்நாடகமும், ஆந்திரமும் கலைஞர்களை விரைவில் அனுப்பி வைக்க இருக்கிறார்கள். விரைவிலேயே அந்த மாநிலங்களின் பாரம்பரியக் கலை அமைப்போடு உருவாகும் வீடுகளையும், கைவினைப் பொருட்களையும் இங்கு காணலாம்.

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்று தமிழகத்தின் நில அமைப்பைக் காட்டும் காட்சியகத்தில் அகமும் புறமும் கைகோத்துக் கொண்டு கவிதைகள் சொல்லுகின்றன.

பரத் ராமாமிருதத்தின் பெரிய பெரிய வண்ணப் புகைப்படங்களில் உயிர்த்துடிப்பே தெரிகிறது!

மாதம் ஒரு 'தீம்!' ஜனவரியில் பொங்கல், பிப்ரவரியில் மழலைச் செல்வம், மார்ச்சில் 'களரிப்பயத்து'. ஏப்ரலில் இந்திய கிறிஸ்தவ சமயம்... ஆகஸ்டில் இந்து-முஸ்லிம் ஒற்றுமையைக் காட்ட 'ஒப்பனப் பாட்டு!'

எல்லா கல்லூரி - பள்ளி முதல்வர்களுக்கும் மாணவர்களை அனுப்பி வைக்கக் கடிதம் அனுப்பியிருக்கிறது தட்சிணசித்ரா.

தட்சிணசித்ராவுக்குள் சுற்றிப் பார்க்க நுழைவுக் கட்டணம் உண்டு.

(நபருக்கு 100 ரூபாய். மாணவர்களுக்கு ரூ. 25 தான்)

ஆனால், வெளியேறும்போது அது ஒரு பொருட்டாகவே தெரியாது!

**— சாருகேசி**

---



"இவர் போலி டாக்டரா இருக்கணும்!"

"எப்படி தெரிஞ்சுது?"

"காதிலே சதா இரைச்சலா இருக்குன்னு சொன்னதுக்கு 'சைலன்ஸர்' வாங்கிப் பொருத்திக்கோன்னு சொல்றார்!"

— செய்யார் து. பூவராகன்

# நனவாகிறது சோப்ராஜின் கனவு!

முன்னாள் மத்திய வனத்துறை மற்றும் சுற்றுச் சூழல் துறை அமைச்சர் கமல்நாத் குடும்பத்துக்குச் சொந்தமானது ஸ்பான் ரிசார்ட்ஸ் என்ற நிறுவனம். இதற்காக, சிம்லா அருகே, குலூ-மணாலி சாலையில் அதற்குக் குத்தகைக்குக் கொடுத்திருந்த சுமார் முப்பது ஏக்கர் நிலத்தை, இமாசலப் பிரதேச அரசு திரும்ப எடுத்துக் கொண்டு விட்டது. அரசுக்குச் சொந்தமான வனத்துறை நிலத்தையும் சேர்த்து ஆக்கிரமித்துக் கொண்டு விட்டதாக, கமல்நாத் குடும்பத்தின் மீது குற்றம் சாட்டியிருந்தது அரசு. அவர் மத்திய அமைச்சராக இருந்தபோதுதான் இந்த நிலம் அவர் குடும்பத்தாருக்கு ஒதுக்கப்பட்டது என்பது இன்னும் சுவாரசியம்!

● தில்லி பள்ளிக்கூடங்கள் மாணவ- மாணவிகளுக்காக வைத்திருக்கும் பஸ்களில் பல, பயணம் செய்யவே லாயக்கு அற்றவை என்று இப்போதுதான் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். ரியர்வியூ மிர்ரர் இல்லாமல், பஸ்ஸைப் பின்னோக்கி ஓட்டியபோது, சென்ற வாரம் பள்ளி பஸ்ஸில் ஏற வந்த பாயல் என்ற பெண் குழந்தை, ஸ்தலத்திலேயே நசுங்கி மாண்டு போனாள். இந்தப் பள்ளிக் கூட பஸ்கள் எல் லாமே தில்லி நகரப் போக்குவரத்துக் கழகங்களிடமிருந்து வாங்கப்பட்டவை!

● டாக்டர் பிரதீப் சேத்தும், டாக்டர் முகமது ஷரீப் சித்திக்கும், தில்லி AIIMS மருத்துவர்கள். முன்னவர் மைக்ரோபயாலஜி துறைத் தலைவர். இரண்டு பேருமாகச் சேர்ந்து எய்ட்ஸ் நோயைக் கண்டறியும் பரிசோதனைச் சாதனங்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதற்கு 'எலிசா கிட்' என்று பெயர். இதன் பேட்டன்ட் உரிமை கிடைத்தவுடன் விற்பனைக்கு வந்துவிடும்.

● மத்திய நிதியமைச்சர் ப. சிதம்பரத்துக்குத் தொண்டைக் கட்டு. தில்லி குளிரில் செமையாகச் சிக்கிக் கொண்டிருக்கிறார் மனிதர். நாடாளுமன்றத்தில் கேள்வி நேரத்தில் பதில் சொல்ல முடியாமல், எழுதிக் காட்டினார்.

● தொழிலாளர் நலத்துறை அமைச்சர் எம். அருணாசலம் குழந்தைத் தொழிலாளர் தடுப்பு மாநாட்டில் கலந்து கொள்ள ஆம்ஸ்டர்டாம் போயிருக்கிறார். மாநிலங்களில் குழந்தைத் தொழிலாளர் தடுப்புக்குப் போதிய நிதி ஒதுக்காத சூழ்நிலையில் இவர் எதற்கு ஆம்ஸ்டர்டாம் போகவேண்டும் என்ற கேள்வி எழுந்திருக்கிறதாம்!

● சர்வதேச கொலை - கொள்ளை - தப்பித்தல் நிபுணன சார்ல்ஸ் சோப்ராஜை, திஹார் சிறையிலிருந்து அவரது சொந்த நாடான பிரான்சுக்கு அனுப்பப்போகிறார்கள். அவரை வைத்து 20 மிலியன் டாலர் செலவில் ஒரு திரைப் படம் தயாரிக்கிறார் அவர் நண்பர். ''அவர் வந்து என்னை ஏர்போர்ட்டில் வரவேற்பார்!'' என்று பெருமையாகச் சொல்லுகிறார் சோப்ராஜ். ஆனால் ஒரு சுவாரஸ்யமான விஷயம் தெரியுமா? மறுபடி இந்தியாவுக்கு வர விரும்புகிறார் சார்ல்ஸ் சோப்ராஜ்!

• சோப்ராஜ்

• அருணாசலம்

• ப. சிதம்பரம்

● சி.பி.ஐ. இயக்குநர் ஜோகிந்தர்சிங் போஃபர்ஸ் ஆவணங்களை எல்லாம் அரசிடம் சமர்ப்பித்து விட்டார். ''எனக்கு ஒன்றும் தெரியாது. அரசு விரும்பினால் நாடாளுமன்றத்தில் வெளியிடலாம். நான் வாயைத் திறக்கப் போவதில்லை!'' என்று சொல்லிவிட்டார் ஜோகிந்தர் சிங்.

— நியூஸ்வாலா

## கட்சியைக் கலைப்பதா?

●● நாங்களெல்லாம் டாக்டர் சிவசாமி தலைமையிலுள்ள தமிழக விவசாயிகள் சங்கத்தினர். 89-ல் தேர்தலில் நாங்கள் போட்டியிட்ட 40 இடங்களிலும் தோற்றதால் மனம் சோர்ந்து போனோம். அப்போது நடந்த ஊழியர் கூட்டத்தில் பேசிய சிவசாமி, 'தோல்வி என்பது அரசியலில் சகஜம். தோற்றுவிட்டோமே என்று கட்சியைக் கலைத்து விட்டும் போக முடியாது. அப்படிச் செய்தால் விவசாயிகளுக்காகக் குரல்கொடுப்பது யார்? எனவே எப்போதும் போல் வேலை செய்யுங்கள்!' என்றார். உற்சாகம் வந்து வட்டது எங்களுக்கு.

மு.தவசியப்பன், தவிட்டுப்பாளையம்.



## பிரிவும் சந்தோஷம்!

●● திருமணமான புதிது. நானும் அவரும் வேறு வேறு ஊர்களில் ஆசிரியர்கள் என்பதால் வாரத்துக்கு ஒருமுறை தான் சந்திப்பு. புதுமணத் தம்பதியான எங்களை விதி இப்படிப் பிரித்து வைத்திருக்கிறதே என்று தோழியிடம் கூறி வேதனைப்பட்டேன்.' அப்போது அவள், 'பிரிவு என்பது அன்பை மிகைப்படுத்தும் ஆயுதம். உன் கணவரை காதலராக எண்ணி நேசி. பிரிவும் கூட மனதைக் கொள்ளை கொள்ளுகிற , சந்தோஷமாகிவிடும்!' என்றாள். அன்றிலிருந்துதான் கணவரை மானசீகமாகக் காதலிக்கத் தொடங்கினேன். இன்று வரை தொடர்கிறது, அந்தக் காதல்!

கு.சி.கோமதி, கோரணம்பட்டி.

## அவர்களுக்கல்லவா கவலை?

●● வங்கி வேலைக்கான நேர்முகத் தேர்வு. ஆறு இடங்களுக்கு முப்பது பேர் போட்டி. எனக்கு அதுதான் கடைசி சான்ஸ் என்பதால் எங்கே கிடைக்காமல் போய்விடுமோ என்கிற கவலை. நண்பர் ஒருவரிடம் கூறியபோது, 'உங்களுக்குத் தேவை ஓர் இடம். மற்ற ஐந்து இடங்களைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? அதுபற்றி மற்ற 29 பேரல்லவா கவலைப்பட வேண்டும்! அந்த ஓரிடத்திற்கு நீங்கள் நிச்சயம் தேர்வாகி விடுவீர்கள்!' என்றார். நம்பிக்கையோடு போனேன். வெற்றியும் பெற்றேன்.

கே.எஸ். நாராயணசுவாமி, திருச்சி - 1.

## இது புனிதம்!

●● நான் செவிலியர் பயிற்சியில் சேர்ந்த புதிது. அப்போது ஒரு நாள் உடல் முழுவதும் தீக்காயங்களுடன் இருந்த ஒரு நோயாளியைப் பார்த்து நான் திகிலடைந்து போனேன். மனமே சரியில்லை. வகுப்பறையில் எங்கள் அனுபவங்களைக் கேட்ட ஆசிரியர், நாங்கள் யாருமே மன அமைதியுடன் இல்லை என்பதை உணர்ந்தார். 'செவிலியர் பணி என்பது புனிதமான பணி. உங்களைப் போல் எத்தனைபேர் இதற்கு விண்ணப்பித்திருப்பார்கள். அவர்களில் எத்தனை பேர் நேர்முகத் தேர்வுக்கு



அழைக்கப்பட்டிருப்பார்கள். அதில் எத்தனை பேருக்கு சீட் கிடைத்திருக்காது! இவை அத்தனையையும் கடந்து நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள் என்றால் என்ன அர்த்தம்? இந்தச் சேவைக்கு ஏற்றவர் நீங்கள்தான் என்பது கடவுளின் எண்ணம்!' என்று அவர் கூறியதும் அனைவரின் மனமும் தெளிவடைந்தது.

சி.ஸ்ரீதேவி, திண்டுக்கல் - 7.

# ஆன கணவர்!

## எழுத்தாளர் கொடுத்த உற்சாகம்!

●● என் தந்தை திடீரென இறந்த போது எனக்கு இருபது வயது. மூத்த மகனாகிய நான் இனி தம்பி, தங்கைகளை எப்படிக் கரை சேர்ப்பேன் என்கிற கவலையும் சேர்ந்து வாட்டியது. இந்த நிலையில் எழுத்தாளரான எனது சித்தப்பா, 'தலைமைப் பொறுப்பேற்க வேண்டிய நீயே இப்படிச் சோர்ந்து நம்பிக்கையிழக்கலாமா? இதை உன் தந்தை உனக்கு வைத்துச் சென்ற சவாலாக ஏற்றுக் கொள். முப்பது வயதில் உனக்கு அறுபது வயது அனுபவம் கிடைக்கும். அதுவே உன் வாழ்வை வளமாக்கும்!' என்றார். இன்று குடும்பம் சிறப்பான நிலையில் இருப்பதோடு கடந்த 27 ஆண்டுகளாக அழகிய கூட்டுக் குடும்பமாகவும் இருக்கிறோம்.

ஆர். ராஜாராம், சென்னை - 29.

## காதலியை இழந்தபோது....

●● எல்லாத் தகுதிகளும் இருந்த போதும் நான் உயிருக்குயிராகக் காதலித்த பெண்ணை என்னால் மணக்க முடியாத சூழ்நிலை. உலகமே வெறுத்துப் போனது எனக்கு. அப்போது எனது தாயார், 'உனக்குக் கிடைப்பதாக இருந்தால் அதை யாராலும் எவராலும் தடுக்க முடியாது. உனக்கு இல்லையென்றால் யார் முயற்சி செய்தாலும் கிடைக்காது!' என்கிற திருக்குர்ஆன் வாசகத்தை எடுத்துக் கூறினார். நான் கவலை மறந்தேன்.

எச். ஷாகுல்ஹமீது, திருச்சி - 12.





## ஆற்றோடு போச்சு!

●● நான் பூமுட்லூர் அரசு கல்லூரியில் பிஎஸ்ஸி படித்துக் கொண்டிருந்தேன். வெள்ளாற்றைக் கடந்துதான் கல்லூரிக்குச் செல்ல வேண்டும். தேர்வுக்கு ஒரு வாரம் இருக்கும்போது, எனது ரெகார்டு நோட்டு ஆற்றில் தவறி விழுந்து விட்டது. என்ன செய்வது என்று என் அறையில் புகுந்து கொண்டு அழுதேன். அப்போது என் தங்கை மனப்பாடம் செய்வதற்காக, 'தெய்வத்தால் ஆகாதெனினும் முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும்' என்ற திருக்குறளைச் சத்தம் போட்டுப் படித்துக் கொண்டிருந்தாள். அதைக் கேட்டதும் புத்துணர்வு பெற்று அன்றே புதுரெகார்டு நோட்டைத் தயார் செய்தேன்.

ஆர். மாணிக்கவேல், பு. முட்லூர்.

## எனக்கு நீ அழகு!

●● நான் சுமாரான தோற்றமுடையவள். என் கணவரோ அழகு என்று சொல்வதை விட, கவர்ச்சியான தோற்றமுடையவர். இருவரும் சேர்ந்து வெளியில் செல்லும் போது, என் தோற்றம் குறித்து மற்றவர்கள் கேலியும் கிண்டலும் பேசுவார்கள். அப்போது என் கணவர், 'யார் என்ன பேசினால் என்ன? எனக்கு நீ அழகுதான். அழகு என்பது தோற்றத்தில் இல்லை. நடத்தையில் இருக்கிறது. நீ கவலைப்படாதே!' என்பார். எனக்கு அந்தச் சொற்கள் டானிக்காய் இருக்கும்.

ஆ. பத்மாவதி, சென்னை - 78.

## ஹோமர் கொடுத்த டானிக்!

●● நான் ஒரு விபத்தில் கால் முறிவுற்று சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த சமயம், இர்விங்வாலஸின் தி பிளாட் (The plot) என்ற நாவலைப் படிக்க ஆரம்பித்தேன். முதல் பக்கத்திலேயே 'Patient my soul thou hath suffered worse than this' என்ற ஹோமரின் காவிய வரிகளை ஆசிரியர் குறிப்பிட்டிருந்தார். தமது பொறுப்பிலுள்ள ஒரு விஞ்ஞானியைச் சூழ்நிலை காரணமாக வெளிநாட்டுக்குத் தப்பி ஓட விட்டு விடுகிறார், ஓர் அதிகாரி. அதனால் மக்களின் மதிப்பையும் பதவியையும் இழந்து விடுகிறார். பல ஆண்டுகளுக்குப் பிறகு அமெரிக்க-ரஷ்ய அதிபர்களின் உயிரை கொலை முயற்சியொன்றிலிருந்து காப்பாற்றி மீண்டும் மக்கள் மதிப்பில் எப்படி உயருகிறார் என்பதே கதை. என்னை உற்சாகப்படுத்திய கதை. கூடவே ஹோமரின் வரிகளும்.

ஜோசப் குமார், தஞ்சாவூர் - 1.

## ஸ்டியரிங்

●● நட்பிலும் உறவிலும் பலவித எதிர்பார்ப்பினால் எனக்கு ஒரு சமயம் ஒரே ஏமாற்றம். மனமுடைந்த நிலையில் டி.வி.யை ஆன் செய்தேன். பேட்டியளித்த டாக்டர் ஒருவர், 'நம் வண்டியின் ஸ்டியரிங்கால் பிறர் வண்டியைக் கன்ட்ரோல் பண்ண நினைப்பது முடியாத காரியம். அதுபோல நம் எண்ணங்களால் நம்மை மாற்றிக் கொள்ள வேண்டுமே தவிர பிறரை மாற்ற நினைப்பது முட்டாள்தனம்' என்றார். அதைக் கேட்ட பிறகு என் வாழ்க்கை முறையே மாறிவிட்டது!

வி. பானுமதி, பூனா.

ஒரு சவரன் பரிசு பெறுபவர்:
சி. ஸ்ரீதேவி,
56, முனிசிபெல் காலனி,
நேருஜிநகர்,
திண்டுக்கல் - 624 007.

# பூக்கள் நாளையும் மலரும் 19

கோழிக்குத் தீனி போட்டுக் கொண்டிருந்தாள் பிலோமினா. பள்ளிக்கூடம் விடுமுறை என்றால், அவளுக்குத்தான் எத்தனை வேலை வந்து விடுகிறது? புடைவை, கவுன், உள்ளாடைகள், ஆல்பர்ட்டின் சட்டை பேண்ட்டுகள் என்று ஒரு அம்பாரமே இருந்தது. எல்லாவற்றுக்கும் சோப் போட்டு ஊற வைத்திருந்தாள். அதற்குள் கோழி, ஒரு தினுசாகக் கூவியது. அப்படிக் கூவினால், அது முட்டை போட்டிருக்கிறது என்று அர்த்தம். அதோடு, தின்னவும் ஏதோ கேட்கிறது என்றும் பொருள்.

'ஆண்டவன் படைப்பில், கோழி கூட, மனுஷ குலத்துக்கு எத்தனை பிரயோஜனப்படுது' என்று வியந்து கொண்டு நிமிர்ந்தாள், பிலோமினா. தோட்டத்து முருங்கை மரத்து அடியில், முட்டை இட்டிருந்தது. எடுத்தாள். சூடு மாறாமல், சற்று அனலாக இருந்தது, முட்டை. அப்படியே, நீண்டு விட்ட விரல் மாதிரி தொங்கிய முருங்கைக் காய்கள் சிலதைப் பறித்தாள். முருங்கைக்காய்க் காரக் குழம்பும், இறால் வறுவலும் என்றால், ஆல்பர்ட்டுக்குப் பிடிக்கும். முந்தின நாளே, இறால் வாங்கி, தோலை உரித்து, சாந்து பிசிறி, அரை வறுவல் வறுத்து, ஃபிரிஜ்ஜில் வைத்திருந்தாள். ஷராப் கடையில் இருக்கிற மோதிரங்கள் போல, இறால்கள் சாந்துச் சட்டையோடு சுருண்டு சுருண்டு கிடந்தன.

பிரிஜ்ஜைத் திறந்து, தட்டில் இறால்களை எடுக்கையில், அழைப்பு மணி ஒலித்தது. தட்டை, ஃபிரிஜ் மேலேயே வைத்துவிட்டு வந்து கதவைத் திறந்தாள். ஓர் இளம்பெண், நெற்றியில், நெய்க் கிண்ணத்தின் கைப்பிடி மாதிரி திருநீறும், பினகாய் பழம் போலக் குங்குமமும் இட்டவளாக நின்றாள்.

"யாரும்மா, நீ?" என்றாள் பிலோமினா.

எதைஎதையெல்லாமோ, நினைத்துக் கொண்டு வந்தவள், தனக்கும் ஆல்பர்ட்டுக்கும் என்ன உறவென்று நினைத்துக் கொண்டு வரவில்லைதான். தடுமாறிப் போனாள், ஜனனி. கழுத்துச் செயினை பல்லால் கடித்தபடி, "என் பேர் ஜனனி. ஆல்பர்ட்டோட ஃபிரண்ட்..."

சட்டென்று வெளிச்சத்தில் ஒளிர்ந்தது, பிலோமினாவின் முகம்.

"நீதானா அது. ரொம்பத் தாமதமா வந்திருக்கியே, அம்மா."

"என்ன தாமதம்?" புரியாமல் நின்றாள், ஜனனி.

"உள்ளே வா. நீ அல்லவா முதல்லே வந்திருக்கணும், என்னண்டை. யாரு யாரோ, உனக்காகப் பரிஞ்சு பேசிக்கிட்டு வந்தாங்களே, பிந்துவோ, இந்துவோ, அப்புறம் ஒரு வயசான பெரியம்மா..."

"பிந்துக்காகவும், ஜானுப் பாட்டியும்."



"வா. நீ வருவேன்னு எனக்குத் தெரியும். காதலிக்கத் தெரிஞ்ச பெண்ணுக்கு, அந்த உரிமையை எடுத்துக்கவும் தெரியணும். உனக்குத் தெரியுமோன்னு நினைச்சேன். உனக்குத் தெரியுதுன்னு இப்போ, எனக்குப் புரியுது. உட்காரு..."

"இருக்கட்டும், மாமி."

"சும்மா உக்காருப்பா... என்ன மரியாதை வேண்டிகிடக்கு. மரியாதைன்னா, விலகல்னு அர்த்தம். அன்புல, அந்நியோன்யம்தான் இருக்கும். உக்காருடி பெண்ணே."

பிலோமினா சண்டை போட்டிருந்தாள் என்றால், அது ஜனனிக்குச் சௌகர்யமாக இருந்திருக்குமோ? அவள் அப்படித்தான்

நினைத்தாள். இந்த வரவேற்பு, அவளைத் திக்கு முக்காடச் செய்தது.

"காலையிலே டிபன் சாப்டியோ?"

"ஆச்சு..."

"ரெண்டு இட்லி தின்றயோ? நேத்திக் குழம்பு இருக்கு. கண்டை மீன் குழம்பு. அதுவும், நெத்திலிமீன் குழம்பு. நல்லா திக்கா வகையா வாச்சிருக்கு. தின்னறயா?"

"ஐயோ வேணாம்."

"சரி. மதியம் இங்கேயே சாப்பிடு. ஆல்பர்ட்டுக்கு முருங்கைக் குழம்பும், இறா வறுவலும் பண்ணறேன். பொன் வறுவலா, முறமுறன்னு பண்ணிடறேன். இரண்டு கவளம் சாப்பிடு. நல்லா சோறு எடுக்கும்."

"ஐயோ வேணாம், மாமி."

"ஏன் வேணாமாம்? என்னது, எல்லாமும் வேணாம்னு சொன்னா என்ன அர்த்தம்?"

"சாரி, மாமி. நான், வெஜிடேரியன் மாமி. பியூர் வெஜிடேரியன். முட்டை மட்டும் பழக்கமாயிடுத்து."

"அது என்னடி, பிராமின் கோழி போட்ட





'உள்ளே வரலாமா?' தொடரை எழுதியது யார் என்பதைக் கண்டுபிடித்துப் பரிசு பெற்ற மும்பாய் வாசகி ராஜீவி நரசிம்மன், அப்பரிசை தமது மாமியாருக்கு வழங்கப் போவதாகக் கூறியிருந்தார் அல்லவா? மருமகள் வழங்கிய அப்பரிசை கடந்த 22.2.97 அன்று லலிதா ஜுவல்லரி சேர்மன் எம்.எஸ். கந்தசாமியிடம் பெற்றுக் கொண்டார் ஜெயலட்சுமி ரங்கநாதன். அருகே இருப்பவர் நரசிம்மன்.

— படம்: யோகா

## இவர்தான் அந்த மாமியார்!

முட்டையா? முட்டையில உயிர் இல்லையோ?"

ஜனனி சிரித்தாள்.

"சரி, வெயில்லே வந்திருக்கே. என்ன சமாசாரம் சொல்லு. இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை இல்லையா? இந்தப் பையன், சர்ச்சுக்குக் கிளம்பினான். அப்படியே, எங்கேயாவது சுத்துவானா இருக்கும். இரேன். அவனும் வந்துடுவான். அவனையும் பார்த்துட்டுப் போயிடு."

"உங்களைத்தான் மாமி, நான் முக்கியமா பார்க்கணும்."

"சொல்லு."

"எனக்கும் ஆல்பர்ட்டுக்கும் ரொம்ப நாள் சினேகம். கல்யாணம் பண்ணிக்கிறதுன்னு முடிவு பண்ணி இருக்கோம்."

"நல்லா பண்ணிக்கோயேன். யார் வேணாம்கிறது. அந்தப் பெரியம்மா, ரொம்ப அழகா பேசிட்டுப் போச்சே. அன்னிலேர்ந்து உன்னை நான் எதிர்பார்த்துக்கிட்டு இருந்தேன். ஏன் தாமதம்?"

"அவரே உங்ககிட்ட பேசி, முடிவு பண்ணு வாருன்னு இருந்தேன்."

"பைத்தியக்காரப் பெண்ணா இருக்கையே. ஆம்பிளைப் பசங்க, வீசிட்டு ஓடற காத்து மாதிரி, பெண்ணே. நாம், பொம்பிளைக. மரம் மாதிரி. நாம், சும்மா இருக்க நினைச்சாலும், காத்து, நம்மை சும்மா இருக்க விடறது இல்லையே. நாம் அல்லவா கூடுதலா கவலைப் படணும்."

"அன்பு, நேசம் எல்லாம் ஒரு கை ஓசையா, மாமி? எனக்கு நானே வக்கீலா மாதிக்கிறது எனக்கு அவமானமா இருக்கு."

பிலோமினா, ஜனனியின் அருகில் வந்து அவள் கன்னத்தில் கிள்ளினாள். சிரித்துக் கொண்டு சொன்னாள்.

"இல்லை. நிச்சயமா இல்லைதான். பைபிளில், ஒரு அழகான வாக்கியம் வருது. மனிதனும் மனுசியும், 'ஒரே மாமிசமாய்' இருப்பார்கள், அப்படின்னு. ஒரே மாமிசமாய் இருக்கிறதுன்னா, என்ன? ஒரு வகையான உணர்ச்சியும், ஒரு வகையான மனசும், மரியாதையும், கௌரதையும், சினேகமுமா இருக்கணும்னு அர்த்தம். நீ அப்படி இருக்கிறதுதான் சரி. காதலிச்சவன், அதுக்கு ஒரு வழி பண்ணட்டும்னு இருக்கிறே பாரு. அதுதான் நம்பிக்கை. ரொம்ப சந்தோஷம்டி., பெண்ணே."

பிலோமினா, டீ போட்டுக் கொண்டு வந்து தந்தாள். சுக்கு மிளகு மணத்தோடு கூடிய தேநீர்.

"இரு. கொஞ்சம் துணி துவைக்கணும்... சித்தே நாழியில சமையலையும் முடிச்சுட றேன். சாப்டுட்டு, சாவகாசமா மதியானம் போலாம் இல்லையோ...?"

"போலாம்."

அந்த அக்கா, இடப்பக்கமாகப் பாவாடையைத் தூக்கிச் செருகிக் கொண்டு, குளியல் அறைக்குள் நுழைவதைப் பார்த்தபடி இருந்தாள். அப்புறம் சுவர்ச் சித்திரங்களை நோட்டம் இட்டபடி இருந்தாள். ஏசுவும், மரியும் ஏந்த குழந்தை ஏசு, சிரித்தபடி, இரட்டை விரல் காட்டி ஆசீர்வதித்தபடி இருந்தது. அந்தக் குழந்தை என்ன சொல்ல ஆசைப்படுகிறது? குழந்தையின் முகம், சட்டென மாறி, கொண்டையும், மயிலிறகுமாய், கையில் பிடித்த குழலுமாக, ஒரு நொடிக்குள் கிருஷ்ணனாக மாறுவதை அதிசயத்துடன் கண்டாள், ஜனனி. கிறிஸ்துவும், கிருஷ்ணனும் ஒன்றா, வேறு வேறா? ஒன்றுதான். ஒன்றின் இரு வேறு தோற்

றங்கள். பிரமைகள். கிறிஸ்துவின் மலைப் பிரசங்கமும், கிருஷ்ணனின் கீதைப் பிரசங்கமும், ஒன்றிச் சங்கமித்தது போல, ஒரு பாட்டை இரண்டு பேர் பாடுவது போல, திருவையாற்று கோஷ்டி கானம் போல இருந்தது அவனுக்கு...

காலம் கரைந்து போனதையே அறியாதவளாக அமர்ந்திருந்தாள் ஜனனி. ஆல்பர்ட்டின் குரல் உலுக்கியது.

"ஏய். எப்போ வந்தே, நீ..." என்றபடி அவள் எதிரில் வந்து அமர்ந்தான், ஆல்பர்ட்.

"அரைமணிக்கு முந்தி."

அவன், அவள் கையைப் பற்றி இலேசாக அழுத்தினான். 'சீ' என்றாள் ஜனனி. சற்று கூடுதலான இறுக்கத்துடன் அழுத்தினான், அவன். ஜனனிக்குத் தேவைப்பட்டதும் இதுதான்.

"அக்கா என்ன சொல்லிச்சு?"

"முன்னமேயே வந்திருக்கணும்னு சொன்னாங்க."

"கோவிக்கலையே."

"என்ன இருக்கு கோவிக்க? அவங்க வேலை சுலபமாயிருச்சே?"

"என்ன வேலை?"

"தம்பிக்குப் பெண் பார்க்கிற வேலை."

"கொஞ்சம் கிட்ட வாயேன்."

"எதுக்கு?"

"ஒரு ரகசியம் சொல்லணுமே."

"இங்கதான் யாரும் இல்லையே. அப்புறம் என்னத்துக்கு கிட்டக்க?"

"சுத்த அசடாட்டம் இருக்கியே..."

"என்ன நடக்கப் போகிறது என்பதை முன் கூட்டியே அறியும் அறிவுள்ள ஞானிகள், சில வேளைகளில், அசடு மாதிரி காணப்படுவார்கள்."

"இது யார் வாக்கு? ரஜனீஷ் வாக்கா?"

"ஜனனீ வாக்கு."

அவன், முட்டிக்கு மேல் சதைப் பகுதியில் கிள்ளினான்.

"ஆ". சப்தம் அதிகமாயிற்று போலும்.

"என்னம்மா" என்றபடி பிலோமினா வந்து சேர்ந்தாள். பாவாடையை இழுத்து சரிபண்ணிக் கொண்டாள். கீழ்ப்பகுதி, தண்ணீரில் நனைந்து, ஈரம் சொட்டிக் கொண்டு இருந்தது. நனைந்திருந்த கைகளை இடுப்புப் பக்கம் துடைத்துக் கொண்டாள்.

"நீ எப்போடா வந்தே."

"இப்பத்தாங்க்கா..."

"என்ன பையன் நீ. ஒரு பெண்ணை நேசிக்கத் தெரியுது. அவள், வீடு தேடி வந்து கல்யாணம் பண்ணிக்கச் சொல்லிக் கேட்கிற அளவுக்கு, பாராமுகமா இருக்கிறது. என்ன மரியாதை ஆல்பர்ட்? இதுதான் நீ படிச்ச படிப்போட லட்சணமா? இது, உன் சிநேகிதியை அவமானப்படுத்தற மாதிரி ஆகாதா?"

அவன் தலை கவிழ்ந்து கொண்டு சொன்னான்.

"சொல்லலாம்னுதாங்க்கா இருந்தேன்."

"சொல்ல வேண்டியதுதானே. என்ன தயக்கம்? காதலிக்க இல்லாத தயக்கம், அதைச் சொல்ல மட்டும் எதுக்கு? கல்யாணம்கிறது உன் உரிமையாச்சேடா. அதைச் செயல்படுத்த என்ன சங்கடம்? உன்னோட தயக்கத்தாலே, அந்தப் பொண்ணு, என்ன கவலைப்பட்டிருப்பா? அவங்க வீட்டார் பயந்திருப்பாங்களே? இதெல்லாம் மனித நாகரீகமா, தம்பி?"

"தப்புதாங்க்கா... நான் முட்டாள்தனம் பண்ணிட்டேன்."

"பரவா இல்லை. உறவுகளை ஒழுங்கா வச்சுக்கிடணும். கேளாமல் கெட்டது கடன், காணாமல் விட்டது உறவுன்னு சொல்லுவாங்க. அந்தப் பொண்ணு பாவம், நமக்கு என்னத்துக்கு. அதுக்கோசரம் சொன்னேன். சீக்கிரமா கல்யாணத்தை முடிப்போம். நான், பள்ளிக்கூடத்துல 'லோன்' அப்ளை பண்ணி, அம்பதாயிரம் வாங்கிடலாம். பெண்ணே, கல்யாணம் என்ன வழியில பண்ணலாம்? கிறிஸ்துவ முறைமையிலா, இந்துமுறைமையிலா? சொல்லு."

"ரெண்டுமே வேணாம் மாமி. ரெஜிஸ்டிரார் ஆபீசுல பதிவுத் திருமணம் பண்ணிக்குவோம். சின்னதா, ரொம்ப முக்கியமானவங்களுக்கு வரவேற்பு கொடுத்திடுவோம்..." என்றாள் ஜனனி.

"இது ரொம்ப அழகா இருக்கே. இப்படியே பண்ணிப்புடுவோம். நாளைக்கே, நீங்க ரெண்டு பேரும் போய் பதிவாளரைப் பாருங்கோ. அந்த ஆபீஸ் சடங்கையெல்லாம் முடிச்சுடுங்க. கர்த்தருக்குச் சம்மதமானா, அடுத்த அஞ்சாம் தேதி, ஞாயிற்றுக்கிழமை வரவேற்பை வச்சுக்கிடலாம்."

ஆல்பர்ட், ஜனனியிடம் கேட்டான்.

"இந்த மாதிரிக் கல்யாணத்துக்கு உங்க

---

**"ஜெயிலுக்கு போய்ட்டு வந்துலேயிருந்து தலைவரோட போக்கு அடியோடு மாறிப் போச்சு...!"**

**"என்னாச்சு...!"**

**"பக்கத்து ஸ்கூல் மணியடிக்கிற சத்தம் கேக்கும் போதெல்லாம் தட்டைத் தூக்கிட்டு சாப்பிட உக்காந்துடறாரு...!"**

**–கே.ஜி.எஸ். கோவிந்தன்**





**"டேய் ராமு... டி.வி.யை ஆஃப் பண்ணிட்டு பரீட்சைக்குப் படி!"**

**"இல்லேப்பா. நான் லைட்டை ஆஃப் பண்ணிட்டு டி.வி. வெளிச்சத்திலேயே பரீட்சைக்குப் படிச்சிக்கிட்டு இருக்கேன்!"**

**– கே. அனிதா**

அம்மா சம்மதிப்பாங்களா?"

"சம்மதிப்பாங்கன்னுதான் நினைக்கிறேன். முக்கியமா, இது சிப்பா, செலவு அதிகம் இல்லாமே இருக்கிறதால."

"அவ சொல்றது சரிடா. பணத்துக்கு முன்னாலே, எல்லா சாஸ்திரமும், சடங்கும் வளைஞ்சு கொடுத்திடும். கல்யாணத்துக்கு முன்னாள் சாயங்காலமே வரவேற்பு வைக்கிறாங்களே, அது எந்த சாஸ்திரத்தோட அனுமதியிலே? கழுத்துல தாலி ஏறாம, கணவன் மனைவி ஆகாமே, எந்த சடங்கோட அனுமதியிலே, பக்கத்துல பக்கத்துல மாப்பிள்ளையும் பெண்ணும் உக்கார்றாங்க?"

ஜனனி சிரித்தாள்.

"மாமி. நீங்க சொன்னபடியே, அடுத்த மாதம் 5-ம் தேதியே, எங்கள் திருமண வரவேற்பா இருக்கட்டும்."

"கர்த்தரின் சித்தம்."

ஜனனிக்கு என்று தனியாக அப்பளம் கட்டு, சாம்பார் வைத்துப் பரிமாறித்தான் அனுப்பி வைத்தாள், பிலோமினா.

"ஆல்பர்ட், வெயில் அதிகம் காயறது. குழந்தையைக் கொண்டு போய் அவ வீட்டுல விட்டுட்டு வா."

ஆல்பர்ட், தன் ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு, அவளை ஏற்றிக் கொண்டு புறப்படும் சமயம், 'கொஞ்சம் இருடி பெண்ணே' என்று விட்டு, ஜனனியின் மோதிர விரல் அளவை எடுத்துக் கொண்டாள் பிலோமினா.

"எதுக்கு மாமி..."

"என் செல்லக்குட்டிக்கு நான் கல்யாண மோதிரம் பண்ண வேண்டுமோ, இல்லையோ."

வெயில் என்றா சொன்னாள் பிலோமினா? டிசம்பர் கோடைக்கானல் குளிரில் பயணம் செய்வது போல் இருந்தது ஜனனிக்கு.

"ஏய். ஏன் அடிக்கடி 'சடன் பிரேக்' போடறே. அனாவசியமா?"

"அப்போதான், என் முதுகில மோதுவே."

"சீ... மோசம்பா, நீ. ரொம்ப வல்கரான பையன்."

வழியில் ஒரு ஐஸ்கிரீம் பார்லரில் அவர்கள் ஐஸ்கிரீம் சாப்பிட்டார்கள்.

"ஆல்பர்ட். எனக்கு ஒரு உதவி பண்ணுவியா?"

"சொல்லு, ஜனனி."

"எனக்கும் எங்கேயாவது ஒரு வேலைக்கு ஏற்பாடு பண்ணேன்."

"வேலைக்குப் போகணுமா, நீ...?"

"அவசியம். எனக்குன்னு நான் ஏதாச்சும் சம்பாதிக்கணும். அப்போதான், எனக்கே என் மேலே மதிப்பு ஏற்படும். கல்யாணத்துக்கு அப்புறம், நம் அன்பு குறையாமே இருக்கும். பணம் முக்கியம், ஆல்பர்ட். ஒரு பழமொழி தெரியும் இல்லையா? முத்தம் கொடுத்துப் பசி ஆற முடியாது."

அவர்கள் வீடு சேர்கையில், கீழே, வேப்ப மரத்து அடியில், கோண்டு நின்றிருந்தான்.

"ஆல்பர்ட். அவன்தான் என் முறை மாமன், கோண்டு. உனக்கு வில்லன் இல்லை. ரொம்ப நல்லவன். அவன் பக்கம் நிறுத்து."

ஸ்கூட்டரில் இருந்து, இறங்கும் ஆல்பர்ட்டையே கூர்மையாகப் பார்த்தான் கோண்டு.

"மாமா. இவர்தான் மிஸ்டர் ஆல்பர்ட். இவரைத்தான் நான் கல்யாணம் பண்ணிக்க இருக்கிறேன்."

கோண்டு, ஆல்பர்ட்டுக்குக் கைகொடுத்தான்.

"உங்களைப் பார்த்ததுல ரொம்ப சந்தோஷம் சார். உங்களைப் பற்றி, ஜனனி ரொம்ப சொல்லி இருக்கா..." என்றவன், ஜனனியிடம் சொன்னான்.

"நீ வந்தா உடனே வந்து பார்க்கச் சொன்னாங்க, வள்ளி."

"என்னவாம்?"

"தெரியலை. சூழ்நிலை சரின்னு தோணலை, அந்த அம்மாவைப் பார்த்தா."

"அப்படீன்னா?"

"அவங்க ஆபீஸ் மானேஜர் வந்து அந்த அம்மாவோட பேசிக்கிட்டு இருக்கச்சே, அவங்க புருஷன் வந்துட்டாராம்..."

"இரு... இரு. இது உனக்கு எப்படித் தெரியும்?"

"பீடா போட... வெற்றிலைக் கடைக்குப் போனேனா... கடைக்காரன்தான் சொன்னான்."

"ஸ்காட்லாந்த் யார்டு கூட தோற்றுடும்பா, தமிழ்நாட்டுக்காரன்கிட்டே..." என்றபடி, வள்ளியின் வீடு நோக்கிச் சென்றார்கள், ஜனனியும் ஆல்பர்ட்டும்...

(தொடரும்)

சரக்குக் கட்டண உயர்வு

மக்கள்



1997 மார்ச் 9
தாது மாசி 26
மலர் : 55
இதழ் : 32

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சிதம்பரத்துக்குத் தெரிந்த ரகசியம்!

'எல்லா தரப்பினருக்கும் மகிழ்ச்சி அளிப்பது எப்படி?' என்கிற 'சிதம்பர ரகசியம்' நிதியமைச்சருக்குத் தெரிந்திருக்கிறது!

வருமான வரியைக் கணிசமாகக் குறைத்துள்ளார். டிவிடண்டுகள் பேரில் விதிக்கப்பட்ட இரட்டை வரி முறையை நீக்கியிருக்கிறார். பல அன்றாட உபயோகப் பொருள்கள் மீதான வரி குறைக்கப்பட்டிருக்கிறது - நடுத்தர வர்க்கத்தினர் சந்தோஷப்படுகிறார்கள்.

கம்பெனிகளுக்கான வரி, சுங்கத் தீர்வை போன்றவையும் குறைக்கப்பட்டுள்ளன. தங்கள் நெடுநாளைய கோரிக்கைகள் பலவும் நிறைவேற்றப்பட்டுள்ளதை தொழில், வர்த்தகப் பிரிவினர் வரவேற்றிருக்கிறார்கள். வரவேற்பதோடு நிறுத்திக் கொள்ளாமல் இந்தப் புதிய ஆரோக்கிய சூழலைப் பயன்படுத்தி தங்கள் முயற்சியையும் முனைப்பையும் இப்பிரிவினர் அதிகப்படுத்த வேண்டும்.

'பொருளாதார வளர்ச்சிக்கான அஸ்திவாரத்தைப் பலப்படுத்தும் முயற்சிதான் இந்த பட்ஜெட்' என்கிறார் பிரதமர். காங்கிரஸ் கூட 'ஆமாம் ஆமாம்!' என்று தலையசைக்கிறது!

பல வகைகளிலும் மகிழ்ச்சிதரக்கூடிய இந்த பட்ஜெட், மன்மோகன் சிங் வகுத்த புதிய பொருளாதாரக் கொள்கையின் தொடர்ச்சி என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

வரிகள் கணிசமாகக் குறைக்கப்பட்டுள்ளதால் அதிக மக்கள் நேர்மையாக வரிசெலுத்த

முன்வருவார்கள்; அரசுக்கு வருவாய் அதிகரிக்கும்; வரிக் குறைப்பு காரணமாக மக்கள் கையில் மிச்சமாகும் பணம், தொழில் முயற்சிகளில் முதலீடாகும் என்பது எதிர்பார்ப்பு.

நிதிநிலை அறிக்கை நாடாளுமன்றத்தில் படிக்கப்படுகையிலேயே ஷேர் மார்க்கெட் புத்துயிர் பெற்றிருக்கிறது. இதனால் முதலீட்டாளர்களும் புத்துணர்ச்சி பெறுவார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

புதிய முதலீடுகளினால் வேலை வாய்ப்புப் பெருகும்; வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள மக்களின் எண்ணிக்கை குறையும்; அதன் காரணமாக அரசாங்கத்தின் மானியச் செலவுச் சுமையும் குறையும்; எனவே இந்தியப் பொருளாதாரம் ஸ்திரப்பட்டு முன்னேற ஆரம்பிக்கும் என்பது சிதம்பரம் போட்டிருக்கும் கணக்கு.

'அவர் நினைப்பது அப்படியே நடக்குமா?' என்பதுதான் மில்லியன் டாலர் கேள்வி!

சற்று ஆழமாக யோசித்தால் சிதம்பரத்தின் நன்னம்பிக்கைக்குக் குறுக்கே நிற்கும் முட்டுக் கட்டைகள் புலனாகும்.

ரயில்வே பட்ஜெட்டில் ஏற்கெனவே சரக்குக் கட்டணங்களும் உயர்வகுப்புக் கட்டணங்களும் ஏற்றப்பட்டுவிட்டன. ஏ.ஸி., முதல் வகுப்புக் கட்டணங்கள், விமானக் கட்டணங்கள் ஏற்றப்படுவதால் ஏழை எளியோருக்கு பாதிப்பு இல்லை என்று சொல்ல முடியாது. இவற்றில் பெரும்பாலும் அரசு அதிகாரிகள், அமைச்சர்கள் மற்றும் தொழிலதிபர்களே பயணம் செய்வதால் கட்டண உயர்வு கம்பெனி அல்லது அரசாங்கச் செலவாகத்தான் கணக்கிடப்படும். சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் தயாரிக்கும் பொருள்களின் விலை உயர, அந்தச் சுமை சராசரி மக்களைத்தான் வந்தடையும்!

பெட்ரோலியப் பொருட்கள், சர்க்கரை, மின்சாரம் என்று முக்கிய பொருட்களின் விலை பட்ஜெட்டுக்கு முன்பே ஏற்றப்பட்டு விட்டன. விரைவிலேயே மீண்டும் பெட்ரோலியப் பொருட்கள் விலை உயரும் என்பதும் உறுதி.

ஆக, மேலும் விலைவாசி உயர்வதென்பது தவிர்க்க முடியாத விளைவாக இருக்கும். வரி




குறைப்பினாலும் ஒழிப்பினாலும் மக்கள் கையில் மிச்சப்படும் பணம், இந்த விலைவாசி உயர்வை ஒப்புநோக்க, யானைப் பசிக்குச் சோளப் பொறியாகத்தான் இருக்கும்! எனவே அந்தத் தொகை, தொழில்-வர்த்தக முயற்சிகளில் முதலீடாகும் என்கிற நிதியமைச்சரின் கணக்கு பிசகிப் போகிற வாய்ப்புகள் மிக அதிகம்.

நீண்ட நாட்களாக எதிர்பார்த்த வரி சீர்திருத்தங்கள் அமுலான மகிழ்ச்சியில் நாம் ஒரு முக்கியமான விஷயத்தை மறந்துவிடலாகாது. கடந்த ஆண்டு 63,131 கோடி ரூபாயாக இருந்த பட்ஜெட் பற்றாக்குறை, இவ்வாண்டு 65,454 கோடியாக உயர்ந்திருக்கிறது.

கடந்த ஆண்டுகளைப் பார்க்க, இந்த உயர்வு விகிதம் குறைவாக இருக்கலாம். ஆனால், பற்றாக்குறையை ஈடுசெய்ய நோட்டுகள் அச்சடிக்கப்படும்போது மீண்டும் விலைவாசி உயரும். ஏற்கெனவே விலைவாசி உயர்வால் கூனிக் கிடக்கும் நடுத்தர வர்க்கம்தான் இந்தச் சுமையையும் சேர்த்து தாங்கவேண்டியிருக்கும்.

நிதிப் பற்றாக்குறையைச் சீர்செய்யும் முகமாக, அரசு செலவினங்களைக் குறைப்பது மிக மிக அவசியம். எந்த அரசாங்கமும் இது குறித்து யோசித்ததில்லை; விவாதித்ததில்லை; திட்டமிட்டதுமில்லை.

அரசின் அனாவசிய செலவினக் கணக்குகள் ஸ்விஸ் வங்கிக் கணக்குகளை விட ரகசியமாகப் பாதுகாக்கப்படுகின்றன! அவற்றை உடைத்துச் சொல்லி, வெட்டவெளிச்சமாக்கி, நாடு தழுவிய விவாதம் நடத்தி, குறைக்க முற்படுவது ஆரோக்கியமான திருப்புமுனையாக அமையும்.

பொருளாதார வளர்ச்சிக்கான அஸ்திவாரத்தைப் பலப்படுத்த உழைத்திருக்கும் நிதியமைச்சர், அரசாங்க செலவினக் கட்டுப்பாட்டுக்கும் அஸ்திவாரம் அமைக்க முன்வரட்டும். ஏனெனில், உண்மை யில் பொருளாதார வளர்ச்சியின் பின் இருக்கும் 'சிதம்பர ரகசியம்' இந்தச் சிக்கன நடவடிக்கைதான்! அது சிதம்பரத்துக்குத் தெரிந்த ரகசியமும் கூட!

# தாமரைக்கனியை விளாசுகிறார் சொக்கர்!



**"த.மா.கா. எம்.எல்.ஏ. சொக்கரைப் பயன்படுத்தி, த.மா.காவைப் பிளக்கப் பார்க்கிறார் கலைஞர்" என்று சமீபத்தில் ஒரு தனியார் தொலைக்காட்சிப் பேட்டியில் தாமரைக்கனி குற்றம்சாட்டியிருந்தார். இதற்கு சொக்கர் என்ன பதில் சொல்கிறார்?**

"இந்தக் குற்றச்சாட்டில் கடுகளவாவது உண்மை இருக்குமானால் அதற்கு பதில் சொல்ல முடியும். அரசியல் காழ்ப்புணர்ச்சி காரணமாக அபாண்டமாகப் பழிசுமத்துபவர்களுக்கு என்ன பதில் கூற முடியும்? என்னைப் பற்றித் தெரிந்தவர்கள் இது தாமரைக்கனி அடிக்கும் வழக்கமான அரசியல் ஸ்டண்டுகளில் ஒன்று என்பதை நன்றாகவே புரிந்து வைத்திருக்கிறார்கள்."

"நெருப்பில்லாமல் புகையுமா?"

"வெறும் தூசியையும், மலைப் பிரதேசத்துப் பனி மூட்டங்களைப் பார்த்தும், சிலர் புகை என்று எண்ணுவதுண்டு. அந்த அடிப்படையில் நெருப்பைத் தேடினால் ஏமாற்றமே மிஞ்சும். அது போலத்தான் தாமரைக்கனியின் குற்றச்சாட்டும்!

"த.மா.கா. பிளவுபட வேண்டும் என்பது தாமரைக்கனியின் ஆசையா அல்லது த.மா.காவிலிருந்து சொக்கரைப் பிரித்துவிட வேண்டும் என்பது அவரது நோக்கமா?"

"அவருடைய நோக்கம், த.மா.காவைத் தாக்குவதுதான். காரணம், த.மா.கா.வின் வளர்ச்சியால் இன்று முழுமையாக பாதிக்கப்பட்டிருக்கிற கட்சி அ.தி.மு.க.தான். காங்கிரஸிலிருந்து த.மா.கா. பிரிந்து வந்திருக்காவிட்டால் சென்ற தேர்தலில் அ.தி.மு.க.வுக்கு சாதகமான சூழல் இருந்திருக்கக்கூடும்! இந்த ஒரு ஆதங்கம்தான் அவருக்கு. அதனால், வலுவான ஓர் அரசியல் கட்சியில் ஏதாவது குழப்பத்தை உண்டாக்கி, அதன் மூலம் அரசியல் ஆதாயம் தேட

முயல்வது இயற்கை."

"தனிப்பட்ட முறையில் உங்கள் மேல் அவருக்கு என்ன விரோதம் இருக்க முடியும்?"

"என்னைப் பொறுத்தவரை தாமரைக்கனி ஒரு மூத்த உறுப்பினர். அவர் மீது எனக்கு மிக்க அன்பும் மரியாதையும் உண்டு. ஒரு வேளை, அவர் சட்டமன்றத்தில் எழுப்பும் சில பிரச்னைகள் தொடர்பாக நான் குறுக்கே புகுந்து 'எந்த விதிப்படி தாமரைக்கனி இதை எழுப்புகிறார்' என்று கேள்வி கேட்பது அவருக்கு எரிச்சலை ஏற்படுத்தி இருக்கலாம். 'ஆளும்கட்சி எதுவாக இருந்தாலும் அதற்கு ஜால்ரா அடிப்பவர் சொக்கர்' என்று தாமரைக்கனி குற்றம்சாட்டினார். அதற்கு உதாரணம் போல, ஜெயலலிதா ஆட்சிக்கு வந்த புதிதில் மதுரையில் நான் அவரைச் சந்தித்ததாகவும், அதற்கு ஆதாரமாக போட்டோ உள்ளதாகவும் சொன்னார். இந்தக் குற்றச்சாட்டை நான் மறுத்ததோடு அல்லாமல், 'அந்தப் புகைப்படத்தை சட்டமன்றத்தில் தாக்கல் செய்ய முடியுமா' என்று சவால் விட்டேன். இந்தப் பிரச்னை இப்போது உரிமைக் குழுவிடம் இருக்கிறது. 'புகைப்படம் இருக்கிறது' என்று சொன்ன தாமரைக்கனி இப்போது உரிமைக் குழுவிடம், புகைப்படத்தைத் தாக்கல் செய்ய முடியாமல் தவிக்கிறார். அப்படியொரு புகைப்படம் இருந்தால் தானே தாக்கல் செய்ய முடியும்! இந்த விவகாரம் காரணமாக தாமரைக்கனி தடுமாறிக் கொண்டிருக்கிறார். 'உரிமைக் குழு என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறதோ' என்று பயப்படுகிறார். அந்த பயத்தில்தான் அபத்தமான குற்றச்சாட்டுக்களை அள்ளி வீசுகிறார்!"

"நீங்கள் தொழிலதிபராக இருப்பதால், சில சலுகைகளுக்காக ஆளுங்கட்சிக்கு ஆதரவாகச் செயல்படுவதாக, பரவலாக ஒரு குற்றச்சாட்டு இருக்கிறதே?"

"ஆசிரியர் பணி இடங்களை நியமனம் செய்யும்போது அதில் ஊழல் சிறிதும் இருக்கக்கூடாது என்று சட்டமன்றத்தில் கேள்வி எழுப்பினேன். கல்வி அமைச்சர் அவர்கள் எனக்கு முறையான விளக்கம் தந்து, இப்போது ஆசிரியர் பணி நியமனம், நேர்மையான முறையில் நடந்து முடிந்து இருக்கிறது. மதுவிலக்குப் பிரசாரத்திற்கு என்று 25,000 பெண்களை நியமிப்பது என்பது வீண் செலவு என்று தக்க விளக்கங்களுடன் எடுத்துரைத்தேன்.

"என்னுடைய வாதத்தில் உள்ள நியாயத்தைப் புரிந்து கொண்டு, அதற்காக ஒதுக்கப்பட்ட பணம் ஆக்கபூர்வமான பணிகளுக்குத் திருப்பிவிடப்பட இருக்கிறது. தென் மாவட்டங்களில் நிலவி வருகிற கடுமையான வறட்சியைப் போக்க பம்பா - அச்சன்கோவில் ஆகிய ஆறுகளில் இருந்து 23 டி.எம்.சி. தண்ணீர் திருப்பி விட முடியும் என்பதையும், அழகர் அணைத் திட்டத்தின் மூலமாக 3 டி.எம்.சி. தண்ணீர் பெற முடியும் என்றும் நான் எடுத்துச் சொன்ன யோசனை ஏற்கப்பட்டு, கேரள அரசோடு இதுபற்றிப் பேச அரசு இசைவு தெரிவித்திருக்கிறது. இந்த பிரச்னைகளெல்லாம், தொழிலதிபர்களுக்கு ஆதரவாகக் கேட்கப்பட்டவையா? மேலும், தொழிலதிபர்களுக்கு ஏதாவது கோரிக்கை இருப்பின், அதை அரசின் முன் எடுத்து வைப்பது புதிதும் அல்ல; தவறும் அல்ல. ஏனெனில் தொழில் வளம் பாதுகாக்கப்பட்டால்தான் வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியும்; பொருளாதாரம் உண்மையான, நிரந்தர வளர்ச்சியைப் பெறும்!"

# த.மா.கா.வை உடைக்கிறேனா?

"இந்த சட்டமன்றத் தொடரில் எதிர்க்கட்சியான த.மா.கா.வின் செயல்பாடுகள் எப்படி இருக்கும்?"

"ஆளும் கட்சிக்கும், அனைத்து எதிர்க்கட்சிகளுக்கும் இந்த நாட்டை வளமாக மாற்றும் பொறுப்பு சம அளவில் உண்டு. ஆளும்கட்சி நல்லது செய்யும்போது அதனை வரவேற்று உற்சாகப்படுத்துவோம். தவறு செய்யுமேயானால் உரிய முறையில் அதனை எடுத்துச் சொல்லி தடுத்து நிறுத்தும் அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்வோம். இதில் கூட்டணிக் கட்சியா, தோழமை கட்சியா என்ற வேறுபாட்டிற்குச் சிறிதும் இடமில்லை!"

சந்திப்பு : **இளங்கோவன், ஸ்ரீநிவாசன்.**

என் கணவருக்கு சென்னைக்கு மாற்றலாயிற்று; மாம்பலம் ஏரியாவில் வீடு பார்த்துக் கொண்டால் டெலிபோன் கனெக்ஷன் உடனே கிடைக்கிறது என்று கேள்விப்பட்டோம்; அதனால், அந்த ஏரியாவிலேயே அலைந்து திரிந்து ஒரு ஃப்ளாட்டைப் பார்த்து குடியேறினோம். பால்கார்டு, கேஸ் கனெக்ஷன், ரேஷன் கார்டு என்று ஒவ்வொரு முக்கியமான வேலையையும் முடித்து ஒருவழியாக, குடும்பத்தோடு செட்டில் ஆனோம்.

அடுத்த வாரமே, டெலிபோன் கனெக்ஷனுக்கு அப்ளை செய்து வரப் போனேன்.

"ஏம்பா, மாம்பலத்தில் இந்த ஏரியாவுக்கு, ரெஜிஸ்டர் பண்ணா அடுத்த மாசமே டெலிபோன் கனெக்ஷன் குடுத்துடறீங்களாமே?"

"மொதல்ல நீங்க எந்தத் தெருவுல இருக்கீங்க... அதைச் சொல்லுங்க..."

நான் குடியிருக்கும் விலாசத்தைச் சொல்லி முடிப்பதற்குள்,

"நெனைச்சேன் மேடம்! உங்க தெருவும், அதுக்கு அடுத்த தெருவும் மவுண்ட்ரோடு எக்சேஞ்சுல வருது... இப்ப புக் பண்ணீங்கன்னா, அடுத்த வருசம்தான் கனீக்ஸன் கெடைக்கும்... அவ்ளோ வெயிட்டிங்ல இருக்குது... உங்களுக்கு அர்ஜண்ட்டுன்னா எடத்த மாத்தி அடையாறு, மந்தவெளின்னு பாத்து குடிபோயிருங்க!"- என்றான்!

எவ்வளவு முன்யோசனையுடன் நான் இங்கு குடியேறினேன் என்பதை எண்ணியவுடன் சிரிப்புத்தான் வந்தது! இருந்தாலும் என்ன செய்வது? வேறுவழியின்றி, பணத்தைக் கட்டி பெயரைப் பதிவுசெய்து விட்டு வந்தேன்.

நான் திரும்ப வீட்டுக்குள் நுழையும் போதுதான் அந்த நல்ல சமாசாரம் நடந்தது.

பக்கத்துப் போர்ஷனில் குடியிருக்கும் மாமி எங்களை அன்புடன் அழைத்து, "நீங்க, எப்போ வேணாலும் இங்கே வந்து எங்க டெலிபோனை யூஸ் பண்ணிக்கலாம்; உங்களுக்கு வெளிலேர்ந்து போன் கால் வந்தாலும் நாங்க உடனே கூப்பிட்டுச் சொல்றோம்!" என்று சொன்னவுடன் நாங்கள் சந்தோஷத்தால் பூரித்துப் போனோம்.

"இத பாருங்கோ! அவா சொல்றாங்கறதுக்காக, நாம பக்கி மாதிரி பல்லை இளித்துக் கொண்டு அடிக்கடி அங்கே போய் அந்த டெலிபோன் கிட்ட நிக்கப்படாது. அதே மாதிரி நமக்கும் வெளிலேர்ந்து அடிக்கடி போன்கால் வர மாதிரி நாம வெச்சுக்கக் கூடாது" - என்று நாங்களும் எங்களுக்குள் கூடிப் பேசி தீர்மானம் செய்து கொண்டோம்.

முதலில் கொஞ்ச காலம் எங்களுக்குள் எல்லா உறவும் ரொம்ப சுமுகமாகவே இருந்து வந்தது. அப்படியே இருந்திருந்தால் இந்தக் கதையும் வந்திருக்காது... எங்கள் கஷ்டங்களைப் பற்றி சுவாரஸ்யமாகப் படிக்க உங்களுக்கும் ஒரு சான்ஸ் கிடைத்திருக்காது!

# டெலிபோன் மணிபோல்...

ஒருநாள் காலை ஆறு மணிவாக்கில் எனக்கு ஒரு போன் கால் வந்தது. நானும் உடனே அடுத்த போர்ஷனில் போய்ப் பேசிவிட்டு ரிஸீவரை வைத்தேன். நான் திரும்புவதற்குள் அந்த மாமி என்னிடம்,

"பொழுது விடியறச்சே போன் மணி அடிச்சாலே என்ன சேதியோ என்னவோன்னு பயந்துண்டே போனை எடுக்க வேண்டியிருக்கு, விமலா... ஆமா... யாரு அவ்ளோ அர்ஜெண்டா போன் பண்ணா?" - என்றாள்.

"ரொம்ப வேண்டியவா ஒத்தருக்கு உடம்புக்கு முடியாம நர்ஸிங் ஹோம்ல அட்மிட் பண்ணியிருக்கு... நான் உடனே போய்ப் பாக்கணும்... அந்த விஷயத்தை சொல்லத்தான் போன் வந்தது..." என்று நான் சொல்வதைக் காதில் வாங்காமலே அந்த மாமி குறுக்கே புகுந்து, "அவ்வளவுதானே, நான் யாருக்கு

திருமை விஜி



என்னமோன்னு பயந்துட்டேனே... அதனால நீ இனிமே, யாரையும் காலங்கார்த்தாலே போன் இனெல்லாம் பண்ணச் சொல்லாதே... என்ன?!" – என்று கூறி நிறுத்தினாள்.

நான் பொங்கி வந்த ஆத்திரத்தைக் கட்டுப் படுத்திக் கொண்டு கூச்சத்துடன், "சரி மாமி" என்று சொல்லிவிட்டு நகர்ந்தேன்.

எப்பேர்ப்பட்ட கஷ்டமும், அடுத்தவர் களுக்கு வந்தால் அதில் எந்த எமர்ஜென்ஸியும் இருக்கக் கூடாது போலும்!... இதுவே தன்னு டைய வீட்டுக்காரர் ஆபீஸ் வேலையாக ஒண்ணரை நாள் ஓங்கோல்வரை போனால் கூட, அவர் அங்கேயிருந்து போன் பண்ணி இந்த மாமியிடம், "பல் தேய்ச்சு காப்பி சாப் பிட்டாச்சா" என்று கேட்பதும், திரிசூலம் சினிமா சிவாஜி ஜோடி மாதிரி ரெண்டு பேரும் சேர்ந்து டெலிபோனைக் கட்டிக் கொண்டு மணிக்கணக்கில் அழுறதும் நமக்குத் தெரியாதா என்ன? இருந்தாலும் என்ன செய் வது...? நமக்கென்று போன் கனெக்ஷன் வரும் வரையில் அங்கும் இங்கும் ஓடி இடிபட வேண்டியதுதான்!

இன்னொரு சமயம், மத்தியானம் இரண்டு மணி இருக்கும். போன் வந்திருப்ப தாக மாமிதான் கூப்பிட்டாள். நானும் உடனே போய் சுருக்கமாகவே பேசிவிட்டு ரிஸீவரை வைத்தேன். ஆனால் மாமியோ படக்கென்று பிடித்துக் கொண்டாள்.... "இதபாரு விமலா, வீட்டுக்காரியமெல்லாம் முடிஞ்சதும், நான் மத்யான வேளைலதான் வழக்கமா கொஞ்சம் கண் அசரும்வேளை. அந்தச் சமயத்துல ஒரு சின்ன சப்தம் வந்தாக்கூட தூக்கம் டக்குனு கலைஞ்சுடும். மேலேர்ந்து ஃபேன் சுத்தினா கூட கிர்ரக், கிர்ரக்னு சத்தம் வரதேன்னு, நான் ஃபேன் கூடப் போட்டுக்கறதில்லை; இப்போ திடீர்னு போன் மணி அலறித்தா? நடுமண்டை யில இடி விழுந்தா மாதிரி பொசுக்குனு முழிப்பு வந்துடுத்து... ஏற்கெனவே கொஞ்சம் 'பிரஷர்' வேற இருக்கா... தலையை வேற சுத்த ஆரம்பிச்சுடுத்து... இனிமே பாரு... நான் நார் மலா நடமாட நாழிப்போது ஆயிடும்" – என்று முடித்தாள்.

எனக்கு இதைக் கேட்டதும் மனசுக்கு ரொம்பக் கஷ்டமாகி விட்டது. எனக்கே எப் போதாவது போன் கால் வருகிறது. அதிலும் இப்படி ஒரு கஷ்டமா என்று எண்ணிக் கொண்டேன். "ரொம்ப ஸாரி மாமி...! நான் வேணுமானால் உங்க தலையைக் கொஞ்சம் பிடிச்சு விடட்டுமா? என்று (மனசுக்குள் பல் லைக் கடித்தபடி) கேட்டேன். ஆனால், மாமியோ அதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாமல்,

"அதனால நான் என்ன சொல்றேன்னா, இனிமே மத்யான வேளைல உனக்கு போன் வராம பாத்துக்கோ... வேணும்னா அவாளை சாயங்கால வேளைல பண்ணச் சொல்லு... ஏன்னா, ராத்திரி வேளைல கொஞ்சம் டீ.வி., வீ.வி. பாப்போம்... அப்போ கொஞ்சம் ஒனக் கும் பேச இடைஞ்சலா இருக்கும்... இல்லியா?!" – என்று நறுக்காகச் சொல்லி நிறுத்தி விட்

• சன் டீ.வி.யில், அரசியல் சிக்கு சிக்குகளை மிஸ்டர் கழுகு என்ற நிகழ்ச்சியின் மூலம் வழங்கப் போகிறார்களாம்! 'அட நாராயணா'!

• "நம்பிக்கைக்கும், வரலாற்றுக்கும் இடையே" என்று அமெரிக்க அதிபர் கிளிண்டன் ஒரு புத்தகம் எழுதினார். மொத்தம் ஐந்து லட்சம் பிரதிகள் அச்சடித்தார்கள். ஒன்றரை லட்சம் தான் விற்றது! மீதி போணியாகாமல் தேங்கி, பதிப்பாளரின் வயிற்றில் புளியைக் கரைத்திருக்கிறது.

• அண்மையில் சென்னை நகர தியேட்டர் ஒன்றில் தேவதாஸ் படம் திரையிடப்பட்டது. போஸ்டரில் '1952 லவ் ஸ்டோரி' என்று நயமுடன் குறிப்பிட்டிருந்தார்கள்.

• பிரிட்டனில் உள்ள இந்திய உணவகங்களின் எண்ணிக்கை 8000. இவற்றின் மூலமாக ஆண்டுக்கு பத்தாயிரம் கோடி ரூபாய்க்கு பிசினஸ் நடக்கிறது. பிரிட்டனில் இருக்கும் இந்திய உணவகங்களிலேயே மிகப் பழைமையானது தி வீராசாமி ரெஸ்டாரன்ட்தான். 1927ல் இது ஆரம்பிக்கப்பட்டது.

• பிஸினஸ் செய்வதற்கு மிகவும் சிறந்த இந்திய நகரம் எது என்று பிசினஸ் டுடே பத்திரிகை ஒரு சர்வே எடுத்தது. அதன்படி சர்வேயில் முதலிடம் பெற்ற நகரம் எது தெரியுமா? பெங்களூர். அடுத்து மும்பாய். சென்னைக்கு மூன்றாமிடம் டெல்லிக்கு. நான்காம் இடம். ஐந்தாம் இடம்: பூனா. பத்தாம் இடம் கோவை.

தொகுப்பு: கௌதம்

டாள்.

நான் அந்த மஹாவிஷ்ணு, நரஸிம்மாவதாரத்தின்போது பட்ட கஷ்டத்தை நினைத்துப் பார்த்தேன்! இரண்யனைக் கொல்ல, காலையும் இல்லாமல், நடுப்பகலும் இல்லாமல், இரவிலும் இல்லாமல் அந்தி நேரத்தைத் தேர்ந்தெடுத்தாரல்லவா? அவர் கடவுளானதால் அந்தக் கஷ்டத்தை எளிதாய் மேனேஜ் செய்து விட்டார்! என் நிலைமை?

இப்படியாக ஒரு வருஷத்தைத் தள்ளி விட்டோம்! நாங்கள் வந்த புதிதில் அவர்கள் செய்த உபசாரத்துக்கும், நிஜத்துக்கும் சம்மந்தமே இல்லாமல் போனது! என் கணவரும் நானும் கூடி ஒரு தீர்மானம் செய்து கொண்டோம்... "நமக்கு மட்டும் டெலிபோன் கனெக்ஷன் வந்தால், இவ்வளவு 'கஞ்சூஸாக' இருக்கவே கூடாது... முடிந்தவரை அடுத்தவர்களுக்கு ஒத்தாசையாக இருக்க வேண்டும்" என்று.

கடைசியில் அந்த நல்ல நாளும் வந்து விட்டது... ஆமாம்! எங்களுக்கு இன்று டெலிபோன் கனெக்ஷன் வந்து விட்டது. ஒரே குதூகலம்... கொண்டாட்டம்தான்!

பக்கத்துப் போர்ஷன் மாமியும் வந்து கை குலுக்கி வாழ்த்திவிட்டுத் திரும்பும்போது, என்னிடம், "என்ன விமலா, இப்பதான் டெலிபோன் வந்துடுத்தேன்னு எங்களை வந்து எட்டிப் பாக்காம இருந்து விடாதே... அடிக்கடி வந்து போயிண்டு இரு... என்ன?" என்று சொல்லிவிட்டுப் போனது எனக்கு இன்னும் பற்றிக் கொண்டு வந்தது... என்னமோ தினம் தினம் இவர்கள் வீட்டு டெலிபோனிடமே பழி கிடந்தா மாதிரி சொல்லிவிட்டுப் போகிறாளே இந்த மாமி... என்ன வாய் ஜாலக்கு...!

என் கணவருக்கும் ஒரே சந்தோஷம்... "விமலா... இனிமே நாமும் திரிசூலம் சினிமா சிவாஜி மாதிரி போன்லயே மணிக்கணக்காகப் பேசலாம்..." என்றார்.

இதற்குள்... டெலிபோன் மணி அடித்தது. அது எங்கள் காதில் தேனாகப் பாய்ந்தது... குழந்தை போல் துள்ளி ஓடிப் போய் ரிஸீவரை எடுத்த என் கணவர், குன்று முட்டின குருவி போலத் திரும்ப வந்து, சட்டை எடுத்து மாட்டிக் கொண்டு, "அதுக்குள்ளே எப்படி இந்த போன் நம்பர் இவ்வளவு தூரம் போச்சுன்னு தெரியலையே" என்று இரைந்தவாறே தெருவில் இறங்கினார்.

"யாரு போன்ல?" – என்றேன்.

"யாருன்னே தெரியலை... தெரு முக்குல இருக்கற மெக்கானிக் மணியைக் கொஞ்சம் கூப்பிடணுமாம்!"

காலேஜ் ஸ்டார்:

# இதில் என்ன வெட்கம்?

• ஷண்முக ராஜசேகர்



**பா**ளையங்கோட்டை நகரத் தெருக்களின் ஓரம் யாராவது பேண்ட்-ஷர்ட் போட்ட டீஸண்ட்டான இளைஞர் "மூணு பத்து ரூபா! மூணு பத்து ரூபா" என்று கூவிக் கூவி பழம் விற்றாலோ, வீடு வீடாக இருபத்தைந்து ரூபாய்க்கு வால்போஸ்டர் விற்றாலோ ஆச்சர்யப்படாதீர்கள்! அதே இளைஞரை பிற்பகல் வேளைகளில் டைகட்டி 'மெடிகல் ரெப்'பாக டாக்டர் வீடுகளிலும் பார்க்கலாம்! அப்போதும் ஆச்சர்யம் வேண்டாம்! தூய யோவான் கல்லூரியில் இதே இளைஞர் ஆங்கில இலக்கியம் படிக்கிறார். மட்டுமல்ல; இவரது அப்பா ஒரு தாசில்தார்! 'முற்றிலும் மாறுபட்ட' என்கிற வாக்கியத்துக்கு முற்றிலும் பொருத்தமான இளைஞர் இந்த ஷண்முக ராஜசேகர்!

"படிப்பில் நான் சுமார் ரகம்தான்" என்று அவரே ஒப்புக் கொள்கிறார். ஆனால் சாதிக்கிற கனவுகள் நிறைய வைத்திருக்கிறார். "எனக்குப் பிடித்த பழமொழி "If not you, then who? — If not now, then when?" அதனால் நம்பிக்கையோடு எந்த ஃபீல்டிலும் இறங்குகிறேன். கடவுள் புண்ணியத்தில் தோல்வியில்லை."

இவர் சம்பாதிக்கும் பணத்தில் என்ன செய்கிறார்?

"அடுத்த பிஸினஸுக்கு முதலீடு வேணுமில்லையா? மற்றவர்களைப் போல தகப்பனின் காசில் வாழ்வைத் துவக்க நான் விரும்பவில்லை. என் வாழ்க்கையின் எல்லைகளை நானே தீர்மானித்து விட்டேன்."

பெரிய பிஸினஸ் புள்ளியாக வர விரும்



• எட்வர்ட் சுந்தர்



# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்

இணைந்து வழங்கும்

# வாரம் ஒரு சவரன்!

## போட்டி-9

உடும்புப் பிடியாக ஏதாவது ஒரு விஷயத்தைப் பிடித்துக் கொண்டு விட மாட்டாதவர்களாக இருப்பீர்களே! (அது நல்லதாக இருந்தாலும் கெட்டதாக இருந்தாலும்) யாராவது ஒருவர் சொல்லியோ, அல்லது ஏதாவது ஓர் எதிர்பாராத அனுபவம்- சம்பவம் மூலமோ மனம் மாறி இருக்கக் கூடுமல்லவா? அப்படி மனம் மாறிய அனுபவத்தை கூப்பனில் எழுதி, 17.3.97க்குள் அனுப்பிவிடுங்கள். பிரசுரமாகும் அனுபவங்களுக்கு சன்மானம் உண்டு. மிகச்சிறந்த ஓர் அனுபவத்துக்கு ஒரு சவரன் பரிசு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**சவரன் போட்டி - 9**

**மனம் மாறினேன்:**

பெயர்:..........................................................

முகவரி:..........................................................

..........................................................

..........................................................

பும் இவர், மேடைப் பேச்சிலும் வல்லவர். கவிஞர் இளந்தேவனிடமிருந்து ஷொட்டுகள் வாங்கியிருக்கிறார்.

"அம்மாவுடன் திருவிளக்குப் பூஜையில் பாடப் போகும்போது ஏற்பட்ட பழக்கங்கள் என்னை பேச்சுப்போட்டிகளில் கலந்து கொள்ள வைத்தன" என்கிறார்.

விவேகானந்தரின் கருத்துக்களில் எக்கச்சக்க நம்பிக்கை. அதனாலேயே தெருவோரம் நின்று விற்பதைக் கேலி செய்யும் நண்பர்களை நம்பிக்கையோடே எதிர்கொள்கிறார். "பழ வியாபாரி, மூன்று பத்து ரூபாயா" என்று கிண்டலடிப்பார்கள். அதையெல்லாம் சிரித்துக் கொண்டே ஒதுக்கி விடுவேன்" என்று சொல்லும் இவரை, இவர் அப்பாவே தெருவில் விற்க வேண்டாம் என்று தடுத்ததுண்டாம்!

"ராஜசேகரிடம் ப்ளஸ் பாயிண்டாக இருப்பதே அவரது சிரித்த முகம்தான். உண்மையான உழைப்பும்கூடத்தான்" என்கிறார் அவருடன் படிக்கும் அருண்.

சரி. மத்தியானத்துக்கு மேல் மெடிக்கல் ரெப் வேலை என்றால் படிப்பு பாதிக்கப்படாதா?

"நிச்சயமாக. ஆனால் எப்போதுமே நான் படிப்பில் சுமார்தான். படிப்பை விட நான் தொழிலில் 'ஷைன்' பண்ணுகிறவன். என் திறமை படிப்பில் இல்லை என்பது எனக்குத் தெரிந்தது. ஆனாலும் ஒரு டிகிரி அவசியம். அதனால் இரவில் பத்து மணியிலிருந்து என் படிப்பு" என்கிறார்.

எதிர்காலத்தில் முத்துக்களில் வியாபாரம் பண்ண நினைக்கிறார். "டிரக்ஸ் அது இது என்று பசங்க கெட்டுக் கிடக்கும் இந்தக் காலத்தில் உழைத்து முன்னேறணும்கிற அந்த நினைப்பே ராஜசேகரை வித்தியாசமாகக் காட்டுகிறது இல்லையா?" என்கிறார் எட்வர்ட் சுந்தர். ராஜசேகரின் ஆசிரியர்.

"வியாபாரம் என்றால் பிக்னிக்கூட வர மாட்டான். இந்த வயசில் இத்தனை பொறுப்புணர்ச்சி ஆச்சர்யம் தருகிறது."

இவரது கிரியாஊக்கி?

"அம்மா ராஜலெஷ்மிதான். நான் செய்யும் எதையுமே ஊக்குவிப்பவர். ஆண்டவனின்றி உலகம் இல்லைபோல் அம்மாவின்றி நானில்லை" - கொஞ்சம் சீரியசாக சொல்கிறார்.

ராகிங், ஈவ்-டீசிங் என்று அலையும் இந்த உலகம் இவரை எப்படி சொல்லும்? "அம்மா கோண்டு" - அதற்கும் சிரிப்பே பதிலாக வருகிறது.

"இருக்கட்டுமே. அம்மாவால் முன்னேற முடியும் என்கிற நம்பிக்கை இருக்கும்போது நான் ஏன் வெட்கப்பட வேண்டும்? நம்பிக்கைதான் என் வாழ்க்கை. அதன்படியே என் வாழ்க்கை செல்லும்!"

நெல்லையிலிருந்து: **தமயந்தி**

புகைப்படங்கள் - **DAK**

குமுறல்

●● நெய்வேலி அனல்மின் நிலையங்கள் மற்றும் நகர அபிவிருத்திக் கெல்லாம் மூல காரணமானவர் ஜம்புலிங்க முதலியார். இவர்தான் போர்வெல்லில் தட்டுப்பட்ட நிலக்கரியை நேர்மையாக நில ஆய்வுக்குக் கொண்டு சென்றவர். எத்தனையோ தலைவர்களின் சிலைகளை நெய்வேலி நகரில் காண்கிறோம்; ஆனால் இவருக்கு ஒரு சிலை இல்லையே?
குடந்தை-1, பாலாஜி.

●● சென்னை தீவுத்திடல் சுற்றுலா பொருட்காட்சியில் சென்னை மாநகராட்சி அரங்கம் பார்த்தேன். ரிப்பன் காலத்திலிருந்து வரலாற்று நிகழ்வுகளைத் தொகுத்து வழங்கியிருந்தால் சிறப்பாக இருக்கும். ஆனால் அரங்க அமைப்பாளர்கள் சென்னை மாநகராட்சியை ஸ்டாலின் மாநகராட்சியாக மாற்றியிருந்தது வேதனை அளித்தது.
தூத்துக்குடி, விஜயலதா.

●● தூர்தர்ஷன் பொங்கல் சிறப்பு நிகழ்ச்சிகளில் ஒன்று "ஒன் மினிட் ராஜகுமாரி". நடிகை மீனாவை ராணியாக்கி, இளைஞர்கள் புகழ்ந்து பாட வேண்டும். மீனாவை ஓவராகப் புகழ்கிறவர் மீனாவின் மனத்துக்குப் பிடித்தவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு மாலை சூட்டப் படுவார்! பொழுதுபோக்குதான் என்றாலும் இளைஞர்களை இப்படியா கேவலப் படுத்துவது?
திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

●● தூத்துக்குடி மூன்றாம்கேட் பகுதியில் ரயில் வரும் நேரம், இருபுறமும் ரயில் நீளத்துக்கு வாகனங்கள் சேர்ந்து விடுகின்றன. கேட் திறந்ததும் கடந்து செல்ல அரைமணி நேரமாகிறது. ஒரு மேம்பாலம் இன்றி அமையாதது.
தூத்துக்குடி, எஸ். செண்பகவல்லி.

●● தி.மு.க. அரசு பொறுப்பேற்ற பிறகு பொது விநியோக முறை ஓரளவு சிறப்பாகச் செயல்படத் தொடங்கியது. ஆனால் உள்ளாட்சித் தேர்தல்கள் நடந்து முடிந்த பிறகு, ஊழல்களும் குழப்பங்களும் மீண்டும் ஆரம்பமாகி விட்டன. திருப்பூரில் பல ரேஷன் கடைகளில் பாமாயில், மைதா, ரவை வழங்கப்படவில்லை. மண்ணெண்ணெய் வழங்குவதிலும் குறைபாடுகள். மக்கள் போராட்டத்தில் இறங்கினர். திருப்பூர் எம்.எல்.ஏ. சுப்பராயன் அரசு அதிகாரிகளைக் கண்டித்து முதல்வருக்கு மனு அனுப்பியுள்ளார். கேரள மாநிலத்துக்கு அரிசி கடத்துவது தங்கு தடையின்றி நடக்கிறது.
திருப்பூர், ந. ரவிச்சந்திரன்.



●● சென்னை தொலைக்காட்சி 'ஏன்' நிகழ்ச்சியில் நடிகை ரேவதி பெண்கள் ஷார்ட்ஸ் போட்டுக் கொள்வதை நியாயப்படுத்திப் பேசினார். எனது நண்பர் ஒருவர் (ஆண்மகன்தான்) எத்தனை சொல்லியும் கேளாமல் ஷார்ட்ஸ் போட்டுக்கொண்டிருந்தார். உறவினர் வீட்டில் பிள்ளைகள் அவரை "செந்தில்", "செந்தில்" என்று கேலி செய்த பிறகுதான் விட்டுத் தொலைத்தார். நன்கு வளர்ந்த பிறகு ஷார்ட்ஸ் போட்டுக் கொள்வதன் மூலம் இருபாலாரும் என்ன சாதிக்கிறார்கள்?
திருவண்ணாதபுரம், தி.சு. ராமகிருஷ்ணன்.

●● சென்னை மேற்கு ஆர்.டி.ஓ அலுவலகம் கே.கே. நகரில் உள்ளது. இங்கு ஓட்டுனர் உரிமம் புதுப்பிக்கக்கூட இடைத் தரகரை அணுக வேண்டியுள்ளது. விண்ணப்பப் படிவம்கூட தர மறுத்து, தரகரிடம் ரூ.5/- கொடுத்து வாங்குமாறு துரத்துகிறார்கள்!
சென்னை - 33, ஆர். ஹரி.

## ஸ்டாலின் மாநகராட்சி!

●● ஒரு திருமண வரவேற்பில் சென்னை சக்தி சினி கலா சேவா குழுவினரின் திரைப்பட நடன நிகழ்ச்சி இடம் பெற்றது. ஓர் இளைஞர் பாம்பை விழுங்கியும் விஷப் பாம்பைப் பல்லால் கடித்தும் இன்னும் பல விதமாகவும் சித்ரவதை செய்தார். இப்படி வதைப்பதும் ஒரு சாதனையா?
சீர்காழி, ஆர். ராஜதுரை.

●● திருச்சி, தீரன் சின்னமலை போக்குவரத்துக் கழகத்தில் நடத்துனர், ஓட்டுனர்கள், இலவச அனுமதி அட்டையுடன் பேருந்துகளில் பயணம் செய்யும் மாணவ, மாணவியரை அவமானப்படுத்தும் வகையில் நடத்துகின்றனர். இது அரசு ஆணையைக் குப்பையில் எறிவதற்கு ஒப்பாகும்.
பொன்மலை, எச். கௌஸ் பெய்க்.

ஸப் இன்ஸ்பெக்டராக நான்கு ஆண்டு கள் பணிபுரிந்துவிட்டு, ஆக்கபூர்வமாக ஏதேனும் செய்ய வேண்டும் என்ற உந்துதலுடன் **'Soft Expressions'** ('மென்மையான வெளிப் பாடுகள்') என்ற வித்தியாசமான பெயரில் விளம்பர நிறுவனம் ஒன்றைத் துவக்கி ஆணாதிக்கம் மிகுந்த விளம்பரத் துறையில் துணிந்து போராட வந்திருக்கிறார் ஸ்ரீமதி! (இயற்பெயர் உஷா). சினிமா சார்ந்த சாட்டி லைட் டீ.வி. யுகத்தில் வித்தியாசமான தொலைக் காட்சி நிகழ்ச்சிகள் தயாரிக்க வேண்டும் என்கிற உந்துதலும் இருக்கிறது. இவருக்கு...


• ஸ்ரீமதி

**"போலீஸ் அதிகாரியாக இருந்த நீங்கள், அதற்குத் துளியும் தொடர்பில்லாத 'விளம்பரத் துறை'யைத் தேர்ந்தெடுக்க குறிப்பாக ஏதேனும் காரணம் உள்ளதா?"**

"நான் சிறு வயதில் விளையாட்டுகளில் மிகவும் பிரகாசித்தேன். போலீஸ் துறைக்கேற்ற உடல்வாகும், மனோ தைரியமும், சிறு வயது முதலே என்னிடம் இருந்ததாலும், என் பெற் றோர் அளித்த உற்சாகத்தாலும், நான் தென்னிந்தியாவின் முதல் பெண் ஸப்இன்ஸ் பெக்டராக கலைஞரால் நேரடியாகத் தேர்வு செய்யப்பட்டேன். ஆயிரத்துக்கும் மேற்பட் டோர் மனுச் செய்திருந்தும் கலைஞரால் நான் தேர்ந்தெடுக்கப்பட்டது என்னால் மறக்க முடியாத ஓர் அனுபவம்.

"தமிழகத்தின் முதல் பெண் போலீஸ் அதிகாரி என்பதால் எனக்கு 'மீடியா' நிறைய முக்கியத்துவம் கொடுத்தது. நான்கு வருடங் கள் பணியாற்றிய பிறகு எனக்குள் ஒரு சின்ன குரல் 'உனக்கு ஏற்ற துறை நிச்சயமாக இது தானா?' என்று ஒலித்துக் கொண்டேயிருந்தது. என்னைப் பொறுத்தவரையில் சுயமாக முடி வெடுக்கும் திறமையை—ஆணாகட்டும் பெண் ணாகட்டும்- இருபத்தைந்திலிருந்து முப்பது வயதிற்குள்தான் அடைகிறோம். சிறு வயதில், கல்லூரி நாட்களில் பெற்றோர்கள் இந்தத் துறையில்தான் உனக்கு நல்ல எதிர் காலம் இருக்கிறது' என்று சொல்ல, நாம் அதைப் பின்பற்றுகிறோம். போலீஸ் அதிகாரியாக, நான் திருப்தியாகத்தான் இருந்தேன் என்றாலும் அடிமனத்தில், 'என்னை முழு மையாக வெளிப்படுத்திக் கொள்ள உகந்த துறை இதுவல்ல' என்ற எண்ணம் தோன்றிக் கொண்டேயிருந்தது. ஒரு கட்டத்தில் தயங்கா மல் வேலையை ராஜினாமா செய்தேன்.

"பல கோணங்களில் சிந்தித்துப் பார்த்த போது விளம்பரத் துறை மனத்திற்கு திருப்தி ஏற்படுத்தக் கூடிய, அதே நேரத்தில் திறமைக் குச் சவாலாகவும் இருக்கக் கூடியது என்று புரிந்து. 'ஸாஃப்ட் எக்ஸ்ப்ரெஷன்ஸ்' என்ற விளம்பர நிறுவனத்தை ஏழு வருடங்களுக்கு முன்பு துவங்கினேன். ஆரம்பிக்கும்போதே வெறும் விளம்பரத் துண்டுப் படங்கள் மட்டு

மில்லாமல் 'இரியேட்டிவாக'வும் ஏதேனும் செய்ய வேண்டும் என்ற முடிவோடுதான் செயல்பட்டேன்.

"நிறுவனம் தொடங்கியவுடன் முதன்முதலாக 'யுனைடெட் இண்டியா இன்ஷ்யூரன்ஸ்' நிறுவனத்திற்காக ஒரு கார்பரேட் படம் தயாரித்துக் கொடுத்தேன். பல பெரிய விளம்பர நிறுவனங்கள் இந்த வாய்ப்புக்காக போட்டி போட்டபோது என்னுடைய ஸ்கிரிப்டைப் பார்த்துப் பாராட்டி, அந்த வாய்ப்பு என்னைத் தேடி வந்தது. அதைத் தொடர்ந்து IHFD போன்ற பல நிறுவனங்களுக்கு படங்கள் எடுத்திருந்தாலும், விளம்பரப் படங்கள் எடுக்கப் பயிற்சி வேண்டும் என்பதற்காக புட்டண்ணா கனகல், ஹரிஹரன் போன்ற இயக்குநர்களிடம் முழு நேர உதவியாளராக இல்லாமல் அவ்வப்போது சென்று விஷயங்களைக் கேட்டு சேகரித்து வந்தேன்."

முதன்முதலாக தனியார் தொலைக்காட்சிக்கு நிகழ்ச்சி தயாரிக்க நான் முடிவு செய்தபோது, 'எல்லோரும் பெண்களை வைத்தே நிகழ்ச்சி தயாரிக்கிறார்கள்; ஒரு மாறுதலுக்காக நாம் ஏன் ஆண்களை வைத்து நிகழ்ச்சித் தயாரிக்கக் கூடாது' என்ற எண்ணம் தோன்றியதன் விளைவே 'அசத்தல் ஆண்கள்' என்ற நிகழ்ச்சி. சுதா சந்திரன் தொகுத்து வழங்கிய 'ஸ்டைல்' பலரது பாராட்டுதல்களுக்கும் சிலரது கண்டனங்களுக்கும் உள்ளானாலும் நிகழ்ச்சி ஒட்டு மொத்தமாக மக்களின் கவனத்தை ஈர்த்தது."

**"நீங்கள் ஒருவர்தான் தமிழில் 'ஸாடிலைட் ஷாப்' என்ற பெயரில் துவக்கினீர்கள்? அந்த நிகழ்ச்சி உங்களுக்கு வெற்றியா? அதாவது வர்த்தக ரீதியில்?"**

"இந்த 'ஸாடிலைட் ஷாப்' நிகழ்ச்சியை நடத்த நான் தீர்மானம் செய்தபோது முதலில் எனக்குச் சற்று பயமாகத்தான் இருந்தது. காரணம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் இன்றும் கணவனோடு 'ஷாப்பிங்' போவதென்பது பெண்களுக்கு ஓர் இனிய அனுபவம். அப்படியிருக்க, இதை இந்த நிகழ்ச்

# இங்கே அழகான ஆண் மாடல்களே இல்லையே...!

**"நீங்கள் அதிகமாக விளம்பர தொழில் நிறுவனங்கள் தொடர்பான படங்களில் தான் கவனம் செலுத்துகிறீர்களா?"**

"அப்படிச் சொல்வதற்கில்லை. நான் 'Corporate' படங்கள் நிறைய எடுத்திருந்தாலும் சமூகப் பிரச்னைகளை மையமாக வைத்து பல டாக்குமெண்டரிகளும் எடுத்துள்ளேன். குறிப்பாக 'கண் தானம்' பற்றி நான் எடுத்த துண்டுப் படம் மிக அதிகமாகப் பேசப்பட்டது. பலமுறை தூர்தர்ஷனில் திரையிடப்பட்டது."

**"நீங்கள் தனியார் தொலைக்காட்சிக்கு நிகழ்ச்சித் தயாரிப்பாளரானது எப்படி?"**

"விளம்பர நிறுவனம் என்றாலும் வெறும் விளம்பரப் படங்களோடு நிறுத்திக் கொள்ளாமல் பொழுது போக்குச் சித்திரங்களும் கொடுக்க வேண்டும் என்பதே என் ஆசை. எல்லாவற்றிலும் முதலாக இருக்க வேண்டும் என்பது சிறு வயது முதல் என் இலட்சியம். அந்த வகையில்



சியை அவர்கள் விரும்பி ஏற்றுக் கொள் வார்களா என்ற அச்சம் என்னுள் இருந்தது. ஆனால் நான் எதிர்பார்த்ததைவிட மிக மிக அதிகமாக வெற்றி பெற்றுவிட்டது அந்த நிகழ்ச்சி. குறிப்பாக குழந்தைகள் மத்தியில். புதிய பொம்மைகளை நாங்கள் எங்கள் நிகழ்ச்சியில் அறிமுகம் செய்தால் மறுநாளே பல குழந்தைகளிடமிருந்து எங்களுக்கு போன் வரும். "எங்கம்மா பத்து மணிக்கு ஆபீஸ் போனப்புறம் நான், 'என் கிட்டி' பாங்கி லிருந்து பணம் தருகிறேன்" என்று! அதே போல் நான் எதிர்பார்த்ததைவிட பெண் களிடமிருந்தும் இந்த நிகழ்ச்சிக்கு நல்ல ஆதரவு இருந்தது. அதற்கு மூன்று காரணங் கள். முதலில் நாங்கள் எடுத்துக் கொள்ளும் பொருட்கள் மத்திய தர வர்க்கத்தினரின் பட் ஜெட்டிற்குட்பட்டவையாகவே இருக்கும். அடுத்து நிகழ்ச்சியை நாங்கள் வழங்கிய விதம். மிகவும் குடும்பப்பாங்காக, குடும்பத் தலை வியைக் கவரும் விதத்தில் வழங்கினோம். கடைக்குச் சென்றால் அந்த சேல்ஸ்மேன் வற்புறுத்தி, அந்தப் பெண் தர்மசங்கடத் தினாலேயே வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டு விடுகிறது. அதோடு கடையில் 'லைவ் டெமான்ஸ்ட்ரேஷன்' கிடையாது. அப்படியே இருந்தாலும் அது ஒரு சில நிமிடங்களுக்குத் தான். ஆனால் இங்கு பிரத்யேகமாக உங்கள் டிராயிங் ரூமில் ஆர அமர அமர்ந்து அந்தப் பொருளின் உபயோகத்தைப் பார்க்கலாம். அதோடு வாரா வாரம் மீண்டும் மீண்டும் அதே பொருளைப் பற்றி நாங்கள் விளக்கும் போது அந்தப் பொருளைப் பற்றியும் அதன் தேவைகளைப் பற்றியும் அவருக்கு முழுமை யாகத் தெரிவதோடு நிதானமாக யோசித்து முடிவெடுக்கவும் முடிகிறது. எனவே என் 'ஸாடிலைட் ஷாப்' நிகழ்ச்சிக்கு நல்ல வர வேற்பு இருக்கிறது."

**"ஆனால் 'ஸாடிலைட் ஷாப்' நிகழ்ச்சி யின் மூலம் வாங்கும் பொருளில் பழுது இருப்பின் அதை மாற்றுவது கடினமாக உள் ளதே? அதை நிவர்த்தி செய்ய ஏதேனும் வழி உள்ளதா?"**

"பல சமயங்களில் நாங்களே சர்வீஸ் செய்து தருகிறோம். சில சமயங்களில் வாங் கிய பொருள்களில் பழுது இருந்தாலோ, உடைந்திருந்தாலோ நாங்கள் மாற்றியும் கொடுத்திருக்கிறோம்."

**"தமிழ்நாட்டில் தயாராகும் பெரும்பான் மையான விளம்பரப் படங்கள், மும்பை விளம்பரப் படங்களோடு ஒப்பிட்டுப் பார்க் கும்போது தரத்தில் மிகவும் குறைவாக உள் ளனவே... காரணம் என்னவென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?"**

"காரணம் ரொம்ப ஸிம்பிள். மும்பையில் ஒரு சாதாரண விளம்பரப் படத்திற்கு பதி னெட்டிலிருந்து இருபது லட்சங்கள் வரை தயங்காமல் செலவு செய்யத் தயாராக இருக் கிறார்கள். ஆனால் இங்கு மிகக் குறைந்த செல வில் மிக அதிக விளம்பரம் வேண்டும் என்று விரும்புபவர்களே அதிகம். பணம் செலவு செய்தால்தானே தரம் இருக்கும்? நம்மிடம் திற மைக்குக் குறைவு இல்லை. அவர்கள் செலவு செய்யும் அளவு நாமும் செய்தால் அதை விடப் பிரமாதமான விளம்பரப் படங்களைத் தமிழ் நாட்டிலிருந்து தயாரிக்கலாம். பி.சி. ஸ்ரீராம், ராஜீவ் மேனன் போன்றவர்களுக்கு 'பெயர்' இருப்பதால் அவர்கள் கொடுக்கும் பட்ஜெட்டைத் தயாரிப்பாளர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால் எங்களைப் போன்ற வர்களிடம் 'பேரம்' பேசுகிறார்கள். எங்கள் 'பட்ஜெட்'டிற்குள்தானே நாங்கள் தயாரிக்க முடியும்?"

**"டி.வி. நிகழ்ச்சித் தொகுப்பாளர்களை யெல்லாம் 'மாடல்'களாக்குமளவிற்கு 'மாடல்' பஞ்சம் வந்து விட்டதே தமிழ் நாட்டில்? அதிலும் ஆண் மாடல்கள் மிக மிகக் குறைவு...!"**

"இங்கு மாடல் பஞ்சம் இருக்கிறது என்பது வாஸ்தவம்தான். ஆனால் முன்பைவிட இப் போது எவ்வளவோ பரவாயில்லை. நிறைய அழகிப் போட்டிகளெல்லாம் பக்கம் பக்கமாக நடத்திய பிறகு, ஓரளவு பெண்கள் இப்போது முன் வருகின்றனர். சிவப்புத் தோல் இல்லா தது 'மாடலிங்'கிற்குத் தடை என்ற எண் ணத்தை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். மாடலிங்கிற்குத் தேவை 'flair'. அதாவது மிகவும் நேர்த்தியாக, நளினமாக, ஒயிலாக, இயல்பாக நடந்து கொள்ள வேண்டும். நம் நாட்டு ஆண்களும் பெண்களும் இது விஷயத் தில் இன்னும் கொஞ்சம் கற்றுக் கொள்ள வேண்டும். இப்பொழுது நிறைய வயதானவர் கள் கூட என்னிடம் 'மாடலிங்' செய்ய வாய்ப்பு கேட்பதைப் பார்க்க மகிழ்ச்சியாக இருக்கிறது; இந்தத் துறையில் எதிர்காலம் பிர காசமாக இருக்கும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது.

"ஆண்களைப் பொறுத்தவரை well, we don't have handsome men. பெங்களூர், மும் பையிலெல்லாம் சாதாரண பணியாளர்கள் கூட 'நீட்'டாக உடை உடுத் தியிருப்பார்கள். தமிழ்நாட்டு ஆண்கள் தங்கள் உருவத்தில் அதிக கவனம் செலுத்துவ தில்லை."

**"இன்றும் விளம்பர உலகம் கூட சினிமா நட்சத்திரங்களையே நம்பி இருக்கிறதே!"**

"என்ன செய்வது? என்னுடைய செட்டி நாடு சிமெண்ட் விளம்பரத்தில் ஹீரா விதவித மான ஆடையில் தோன்றும்போது விளம்பரம் மக்களிடையே பிரபலமாகிறது. கூடவே,

'ப்ராடக்ட்'டும் பிரபலமாகிறது இல்லையா? பணம் போடும் தயாரிப்பாளர்கள் வர்த்தக ரீதியாகவும் யோசிக்கத்தானே செய்வார்கள். திரைப்படத்தின் வெற்றிக்கு நட்சத்திரம் உதவுவது போல்தான் இதுவும்."

**"விளம்பரத் துறையில் பெண்கள் ஆபாசமாகச் சித்திரிக்கப்படுவதைப் பற்றி உங்கள் கணிப்பு?"**

"என்னைப் பொறுத்தவரையில் நான் பெண்களை அழகுணர்ச்சியோடுதான் சித்தி ரிக்கிறேன். விளம்பரத் துறை மட்டுமல்ல; வேறு பல துறைகளும் ஆபாசமாகப் பெண் களைச் சித்திரிக்கவே செய்கின்றன."

**"விளம்பரப் படம் இல்லாத வேறு நிகழ்ச்சி ஏதாவது தயாரித்து இருக்கிறீர் களா?"**



**"அரசியல்வாதியா இருந்தாலும் உண்மையை கடைபிடிக்கிறவங்களும் இருக்கத்தான் செய்றாங்க."**

**"எத வச்சி சொல்றே?"**

**"ரேசன் கார்டு விண்ணப்பத்துல தொழில் பற்றி குறிப்பிட வேண்டிய எடத்துலே ஒருத்தர் 'எப்பவும் ஆளுங்கட்சியிலே இருப்பது'ன்னு எழுதியிருக்கார்!"**

**- டி. செல்வன்**

'ஆன்மிகம்' பற்றிய நிகழ்ச்சிகள் எடுக்க வேண்டும் என்பது என் ஆசை. மறைந்த மணி யன் அவர்களுக்காக 'தர்ஷன்' என்ற பெயரில் ஓர் ஆன்மீக வீடியோ பத்திரிகையை நான் தயாரித்து இருக்கிறேன். 'ஆன்மிகம்' என்றால் கோவிலுக்குப் போவது, சுலோகம் சொல்லு வது, பூஜைகள் செய்வது- இதைப் பற்றிய நிகழ்ச்சி அல்ல. என்னைப் பொறுத்த வரை யில் 'ஆன்மிகம்' என்றால் மனிதன் தன்னைத் தானே புரிந்து கொள்வதுதான். காஞ்சி மடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சுவாமிகளுடன் இன்றைய கால கட்டத்தில் பகவத் கீதை நமக்கு வழங்கும் தெளிவைப் பற்றி கேள்வி பதிலாக கிட்டத்தட்ட 20 காஸெட்டுகள் தயார் செய்துள்ளேன். ஆனால் அதை ஒளி பரப்ப எனக்கு 'ஸ்பான்சர்' கிடைக்கவில்லை.

அதே போல வாழ்க்கையில் உணர்வு ரீதியாக இழப்பு, பிரச்னை, தீராத சோகம், ஏமாற்றம் போன்றவை ஏற்படும்போது அவற்றையெல் லாம் சமாளிப்பது எப்படி என்பது பற்றி குழந்தைகளுக்கான 'டாக் ஷோ' (talk show) ஒன்றையும் தயாரிக்கத் திட்டம். இந்தக் கரு வைச் சொன்னாலே 'ஸ்பான்ஸர்'கள் 'எதுக்கு மேடம் இதெல்லாம்... ஏதேனும் சினிமா நிகழ்ச்சி இருந்தா கொண்டு வாங்க' என்று தான் சொல்கிறார்கள். அதேபோல் இந்தியா விலுள்ள அனைத்து ஆசிரமங்களையும் மடங் களையும் பற்றி ஒரு சீரியல் எடுக்க விருப்பம். ஆனால் என்றாவது ஒரு நாள் இதற்கெல்லாம் ஸ்பான்ஸர்கள் கிடைப்பார்கள் என்ற நம் பிக்கை எனக்கிருக்கிறது."

**"எதிர்காலத் திட்டங்கள்...?"**

"குழந்தைகளுக்கான நிகழ்ச்சிகள் சிறப் பாகச் செய்ய வேண்டும். அனிமேஷன் படங் களை நாம் சொந்தமாகத் தயாரிக்க முடியாது. தயாரிப்புச் செலவு மிக மிக அதிகம். அதற்கு பதில் நம்முடைய பண்டைய இதிகாச, புராணக் கதைகளை குழந்தைகளுக்கான சிறு படங்களாக எடுக்க வேண்டும் என்பது என் இலட்சியம். தற்காலத்துக் குழந்தைகள் கொஞ்ச கொஞ்சமாக மனித நேயத்தை மறந்து வருகிறார்கள். காரணம் இன்றைய வேகமான வாழ்க்கை முறை. அதனால் பழைய கதை களைச் சொல்லி மனித நேயம், அன்பு, விட் டுக் கொடுத்தல் போன்ற உயர்ந்த உணர்வு களை அந்தச் சின்ன இதயத்திற்குள் பூக்கச் செய்ய வேண்டும். தமிழ்க் கலாசாரத்தைக் குழந்தைகளுக்குப் புரிய வைக்கும் வகையில் 'வேர்கள்' என்ற பெயரில் ஒரு முழுப்படம் தயாரிக்க முயன்று வருகிறேன்.

"அடுத்து நடுத்தர வர்க்கத்துப் பெண்களின் பிரச்னைகளை மையமாக வைத்து 'ஆதங்கம்' என்ற பெயரில் ஒரு தொடர் எடுக்க முடிவு செய்துள்ளேன்."

**"உங்கள் முயற்சிகளெல்லாம் தொலைக் காட்சி சார்ந்தே இருக்கின்றன. ஆனால் முழுக்க முழுக்க சினிமாவின் ஆதிக்கத்தில் தொலைக்காட்சி இருப்பதால் இதெல்லாம் நடைமுறையில் எத்தனை தூரம் சாத்தியம்?"**

"அது தான் சோகமான விஷயம். டீ.வி.க்கு சினிமாவின் சப்போர்ட் தேவையே இல்லை. சினிமா சார்ந்த நிகழ்ச்சிகளை விட்டுவிட்டு, ஆக்க பூர்வமான நிகழ்ச்சிகளுக்கு முன்னு ரிமை தரத் தொலைக்காட்சி முன்வர வேண் டும் என்பதுதான் என் விருப்பம்; வேண்டு கோள். அப்படியொரு காலம் வரும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!"

**- கிரிஜா ஜின்னா.**

அட்டை வண்ணப்படம், படங்கள்:

**ஸ்ரீஹரி.**

மீண்டும் மத்யமர் கதைகள் - 9

சுஜாதா

# வித்யாவின் மிழந்நு

அலுவலகத்தில் வித்யாவுக்கு போன் வந்தது. "சாயங்காலம் பர்மிஷன் கேட்டுக் கொண்டு சீக்கிரம் வந்து விடு."

"எதுக்கப்பா?"

"அந்த பெங்களூர் பையன் ஊர்ல வந்திருக்கானாம். உன்னை பார்த்துப் பேசணும்மாம். சும்மா இன்ஃபார்மலாத்தான். ஒண்ணும் கமிட் பண்ணிக்கலை. போட்டோ பார்த்துட்டு புடிச்சுப் போச்சாம்."

"போட்டோ அனுப்பிச்சிங்களா?"

"ஆமாம். பொண்ணுக்கும் பையனை புடிச்சாகணும்னு கண்டிஷனா சொல்லிட்டேன்."

"என்னால ஐதராபாத்துக்கு எல்லாம் மாற்றலாகிப் போக முடியாதுன்னு சொல்லிட்டியா?"

"ஐதராபாத் இல்லை. பெங்களூர். ஹாபிட்ஸ் எதும் இருக்கக்கூடாது எல்லாம் சொல்லிட்டேன். தங்கமான பையனாம். ஹெல்த் நட். ஜிம்ல போய் எக்ஸைஸ் பண்ணுவானாம்."

"ஆபீஸ்ல முக்கியமான க்ளையண்ட் மீட்டிங் இருக்கு. ஆறரைக்குத்தான் வர முடியும். மத்த விஷயத்தையும் சொல்லிட்டீங்களாப்பா?"

"அதை அப்புறம் பேசிக்கலாம். எடுப்பிலேயே பயங்காட்ட வேண்டாம். இன்னிக்கு ஒருநாளைக்கு பர்மிஷன் வாங்கிக்க முடியாதா? அப்படி என்ன ஆபீஸ்?"

"இல்லைப்பா என்னால வர முடியாது!"

"ஆபீஸ் முக்கியமா? லைஃப் முக்கியமா?"

"நீதாம்பா முக்கியம்."

"சரி சரி, அஞ்சரைக்கு வந்துரு. அதுவரை பேசிண்டிருக்கேன்"

போனை வைத்த வித்யா இது எத்தனாவது பையன் என்று மனசுக்குள் எண்ணிப் பார்த்தாள். அமெரிக்கா வேண்டாம். பம்பாய் வேண்டாம். ஆடிட்டர் வேண்டாம், வக்கீல் வேண்டாம், டாக்டர் வேண்டாம் என்று இதுவரை பத்து பேரை நிராகரித்திருக்கிறாள். ஒவ்வொரு முறையும் அப்பா தான் நீட்டி முழக்கி 'எங்க ஜோஸ்யர் ஜாதகம் பொருந்தலைன்னுட்டார். உங்க ஃபேமிலில பொண்ணு கொடுக்கறதுக்கு நாங்க குடுத்து வெக்கலை.' இப்படி ஏதாவது போனில் சமாதானம் சொல்லிக் கொண்டே வித்யாவை அடிபட்ட பார்வையால் அதட்டுவார். ஒரு முறை நிச்சயதார்த்தம் வரை போய், பையன் எப்போதாவது சிக்கன் சாப்பிடுவானாம் என்கிற சின்ன விஷயத்தில் நின்று போயிருக்கிறது. யோசித்துப் பார்த்ததில் வித்யா தான் தயங்கியிருக்கிறாள். எல்லாம் அப்பாவுக்காக!

இன்றைக்கு என்ன வயசு? இருபத்து ஒன்பது.

பரமானந்த் கூப்பிடுவதாக ஜென்னி சொன்னாள். அவர் அறைக்குச் சென்றபோது பரமானந்த் இன்னொரு பிள்ளையார் பொம்மை, மேசை மேல் சேர்த்திருந்தார். அது அவர் பொழுதுபோக்கு. "ஜேட் பிள்ளையார். என்ன விலை இருக்கும்ங்கறே?"

"பிள்ளையாரை விடுங்க சார். இன்னைக்குத்தான் ஆபீஸ்ல க்ளையண்ட் வரார். வீட்டில மாப்பிள்ளை பார்க்க வர்றார்."

"உனக்குப் பிள்ளையார் பக்தி இடையாதா?"

"எங்க அப்பாதான் சார் எல்லாம்."

"ப்ரசண்டேஷன் க்ராஃபிக்ஸ் தயார் பண்ணி வைச்சிருக்கியா?"

"எல்லாம் தயார்."

"இன்னிக்குத்தான் டிஸைட் பண்ணப் போறாங்க. பெரிய அக்கவுண்ட். இது கிடைச்சா மூணு வருஷத்துக்கு கவலை இல்லை. சின்ன கம்பெனியை நம்பி கொடுப்பாங்களான்னு தான் சந்தேகமா இருக்கு."

"பார்க்கலாமே! ஸ்விட்ச் ஆன் யுவர் சார்ம் வித்யா."

"எனக்கு சார்ம் இருக்குங்கறீங்க? ஐ ஃபீல் க்ளம்ஸி."

"அந்த சந்த்ரு க்ளையண்ட் மீட்டிங்ல உன்னையே பாத்துக்கிட்டு இருக்கான்."

"சே"

"ஐ திங், உன் மேலே ஒரு க்ரஷ்."

"சே! அவனுக்கு என் தம்பி வயசு ஸார்."

"உன் வயசு தெரியவே இல்லை. அதான் ப்ராப்ளம். கல்யாணம் பண்றதா இருந்தா மெட்ராஸ்லேயே மாப்பிள்ளை பார்த்துக்க. இந்த ஆபீஸ்லயே யாரும் இல்லையா காதல் பண்ண?"

பரமானந்தம் நேரடியாகப் புகழ்வார். இஷ்டப்பட்டபோதெல்லாம் சம்பளம் உயர்த்துவார். சபலம் காட்டாத நேர்ப் பார்வை.

"பெண் பார்க்கறது எப்படி? முதல்ல நமஸ்காரம் பண்ணுவீங்களா? வரவீணா பாடுவீங்களா? கேசரி பாத், சௌசௌ போண்டா எல்லாம் உண்டா?"

"அதெல்லாம் இல்லை. வி ஜஸ்ட் டாக். உங்க இண்ட்ரெஸ்ட் என்ன, என் இண்ட்ரெஸ்ட் என்ன என் காரியரும் உன் காரியரும் ஒத்துப் போகுமா?"



"பையன் எந்த ஊர்?"

"ஐ எஸ் ஆர் ஓ. பங்களூர்லயாம். சைன்டிஸ்ட்."

"சென்னைக்கு மாத்தி வருவாரா?"

"கேக்கணும்! அதைவிட என் கூட அப்பாவும் கடைசி வரை இருப்பார்ங்கறதை இப்பவே கேட்டாகணும்!"

"ஒரே பெண்ணா?"

"ஆமாம்."

மீட்டிங் முடிந்து அக்கவுண்ட் கிடைத்த சந்தோஷத்தில் பரமானந்த் வரவழைத்த கேக் முதலானவற்றை விழுங்கிவிட்டு, காகித கைக்குட்டையில் துடைத்துக் கொண்டு கிளம்ப ஆறரையாகி விட்டது.

வீடு சேர்ந்தபோது அப்பாவும் அந்தப் பையனும் "வயலும் வாழ்வும்" பார்த்துக் கொண்டிருந்தார்கள். கண்ணாடி போட்டுக் கொண்டு வழுக்கை அடையாளங்கள் தெரியும் தலையை அழுந்த வாரி, நல்ல நிறமாக இருந்தான். (ஒருகணம் அவன் பக்கத்தில் ரோஜா மாலையும் ரிசப்ஷன் கொண்டையும் போட்டுக் கொண்டு நின்றாள்) அவன் சாத்விகமாக முழங்காலில் கை வைத்து உட்கார்ந்திருந்தான். "'மைலாப்பூர் டைம்ஸை' மூன்று தடவை படித்து நொந்து போய்ட்டாங்க" என்றான்.

"சாரி, ரொம்ப சாரி. ஆபீஸ்ல மீட்டிங். இன்விக்குப் பார்த்து. அப்பா இவருக்கு எதாவது கொடுத்தீங்களா?"

"பால் மட்டும் சாப்ட்டார். காப்பி குடிக்க மாட்டாராம்" என்றார்.

"நல்லது உக்காருங்க. ஜல் சேஞ்ச் அண்கம்."

உள்ளே போய் முகங்கழுவி, கரும்பச்சை சாரியை அவசரமாக சுற்றிக் கொண்டு பவுடர் தீற்றிக் கொண்டு வந்தாள்.

அவன் அவளைப் பார்த்ததும் லேசாக எழுந்தான்.

"முப்பது ஆண்டுகளுக்கு முன் தியாகி ராமசாமியைப் பாராட்டிய இதே மேடையில், அவரது மகன் ஹவாலா ராஜாராமையும் பாராட்டுவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்"

—பூதபுரி பூங்குழலி

"என்ன எழுந்திருக்கறீங்க?"

"......"

"நீங்க ஐ.எஸ்.ஆர்.ஓ.வில வேலை பார்க்கறதா எழுதிருந்தீங்க. இங்க மெட்ராஸ்ல உங்க ஆபீஸ் இருக்கா?"

"இருக்கு. ஆனா என் போஸ்ட்டுக்கு இங்க மாத்த மாட்டாங்க. ஐம் எ சீனியர் பர்சன். ஒரு முழு ப்ராஜெக்ட் என் பொறுப்பில இருக்கு."

அப்பா குறுக்கிட்டு, "நீ வரதுக்கு முன்னால எல்லாம் பேசிட்டார்ம்மா. மிஸ்டர் தியாகராஜனுக்கு எல்லாத்துக்கும் சம்மதமாம்."

"ஒரு கல்யாணம் நிச்சயமாய் நின்று போனதையும் சொல்லிட்டார். எனக்கு எந்தவிதத் தயக்கமும் இல்லை."

"என்ன வேலை பார்க்கறீங்க?"

"அதுக்கு உங்களுக்கு விலாவாரியா 'ரிமோட் சென்சிங்' பத்திச் சொன்னா கல்யாணம் வேண்டாம்னுடுவீங்க" என்று சிரித்தான். வித்யாவை நேராகப் பார்க்காமலே அப்பாவையே பார்த்துக் கொண்டு பேசினான்.

"என்னைப் பத்தி சொல்றேன் சார். நான் ஒரு மல்ட்டி மீடியா மார்க்கெட்டிங் கம்பெனியில் அக்கவுண்ட் எக்ஸிக்யூட்டிவ்வா இருக்கேன். நல்ல சுவாரஸ்யமான வேலை. அதனால கல்யாணத்துக்காக விட்டுவிட எனக்கு இஷ்டமில்லை."

"பங்களூர்ல ப்ராஞ்ச் இருக்கா?"

"இருக்கு. ஆனா சின்ன ஆபீஸ்."

"பங்களூர்ல எத்தனையோ மல்ட்டி மீடியா கம்பெனி இருக்கு. அதில உங்களுக்கு வேலை வாங்கிக் கொடுக்க வேண்டியது என் பொறுப்பு."

"வேலை நானே கூட தேடிக்க முடியும். எங்கப்பா எங்கூடவே இருப்பார். அதை சொன்னாரா முதல்ல?"

"சொன்னார். ஐ டோண்ட் மைண்ட். பங்களூர்ல எனக்கு பெரிய பங்களாவே லீஸ் எடுத்துக் கொடுத்திருக்காங்க ஆபீஸ்ல."

"உங்க பேரண்ட்ஸ் உங்க கூட இருப்பாங்களா?"

"இல்லை. அவங்களுக்கு தனியா பசவங்குடில வீடு இருக்கு. அதை விட்டு வர மாட்டாங்க."

வித்யா அப்பாவைப் பார்த்தாள்.

"எல்லாம் சரியா இருக்கும்மா. நல்ல ஃபேமிலி! இவர் தாத்தா சர்வே ஆப் இண்டியாவில் டைரக்டர் ஜெனரலா இருந்தவராம், பிரிட்டிஷ் காலத்தில."

"டைரக்டர் ஜெனரல் இல்லை சார். ரீஜனல் டைரக்டர். மறந்துட்டீங்களா?"

"பங்களூர் போய் அப்பா அம்மாகிட்டே கேட்டுட்டுப் போன் பண்றீங்களா?"

"தேவையில்லை சார்! நான் பார்த்து புடிக்கறதுன்னு சொன்னா போதும். எல்லா பொறுப்பையும் எங்கிட்ட கொடுத்துட்டாங்க. உங்க டாட்டர் வெளிப்படையா பேசறது எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. நானும் வெளிப்படையா சொல்லிடறேன். ஐ லைக் ஹர். எனக்கு இஷ்டம்தான்."

"எங்களுக்கு கொஞ்சம் டயம் கொடுங்க. ஒரு வாரத்துக்குள்ள சொல்லிர்றோம்."

"தாராளமா, ஐ கேன் வெய்ட். நான் வரட்டுமா? நைஸ் மீட்டிங் யு."

அவன் போனதும் வித்யா டி.வி.யின் சப்தத்தை அதிகரித்தாள். அப்பா கோபத்தில் முகம் சிவந்து, "என்னம்மா நீ? டி.வி.யை நிறுத்து" என்றார்.

"என்னப்பா?"

"அருமையான பையன்! இந்த மாதிரி கணவன் கிடைக்க அதிர்ஷ்டம் பண்ணிருக்கணும். நாசாவில எல்லாம் ட்ரெய்னிங் எடுத்திருக்கான். வெளிநாட்டு சாட்டிலைட் நிறுவனமெல்லாம் இவனைக் கூப்பிடறானாம்."

"கூப்பிடட்டும். சந்தோஷம்."

"என்ன இப்படி விட்ட குறையா பேசறே. உனக்குக் கல்யாணம் பண்ணிக்க இஷ்டம் தானே."

"கல்யாணம் பண்ணிக்கணுமா?"

"என்ன இப்படிக் கேக்கறே? வாழ்நாள் பூரா ஸ்பின்ஸ்டரா இருக்கப் போறியா? வயசு என்ன ஆச்சு? என்னதான் கம்பெனி எக்ஸிக்யூட்டிவ், பத்து பதினைஞ்சாயிரம் சம்பளம்னாலும் இயற்கை உனக்கு ஒரு ரோல்தான் வெச்சிருக்கு! நீ கல்யாணம் பண்ண மறுத்தா, நீ ஜென்மமெடுத்ததோட பாதி பர்ப்பஸ் போயிடறது."

"சரிப்பா. முதல்ல பங்களூர் போகலாம். அங்க எங்க ப்ராஞ்சைப் பார்த்துர்றேன். அப்புறம் என்ன என்ன வேற வேலைக்கு, சந்தர்ப்பம் இருக்குன்னு விசாரிக்கறேன். அந்தப் பையன் அப்பா அம்மாவையும் சந்திக்கலாம்."

"தட்ஸ் எ குட் கர்ள்" என்று சந்தோஷமாக அவள் முதுகில் தட்டினார்.

பங்களூர் சிட்டி ரெயில் நிலையத்தின் அருகிலேயே ஒரு நல்ல ஓட்டலில் தங்கினார்கள். அப்பா, தியாகராஜனுக்கு போன்



செய்ததில் "என்ன சார், எங்க வீட்டுக்கு நேர வந்திருக்கலாமே. ஒட்டல்ல போய்த் தங்கிண்டு."

"எப்படியும் உங்க ஊருக்கும் உங்க வீட்டுக்கும் வரத்தானே போறோம்!"

"இப்பவே கார் எடுத்துண்டு வரேன்."

தடுத்தாலும் கேட்காமல் ஒருநாள் லீவு போட்டு விட்டு தியாகராஜன் வந்து எம்.ஜி. ரோடில் 'ரியல் இமேஜ்' ஆபீசுக்கு அழைத்துச் சென்று ஒரு காமத் ஒட்டலில் நல்ல டிபன் வாங்கிக் கொடுத்து, ரியல் இமேஜின் போட்டி கம்பெனியான ஆல்பா இமேஜஸ்ஸில் இன்டர்வ்யுவும் ஏற்பாடு செய்துவிட்டான். அவளுடைய 'ஸிவி'யை பார்த்து அந்த இளைஞன் "மிஸ் வித்யா, எப்ப ஜாயின் பண்றீங்க? அதான் கேள்வி. உங்க அனுபவத்துக்கு நீங்க எங்க கம்பெனிக்கு வரதா நினைக்கிறதே அதிர்ஷ்டம்" என்று சொன்னபோது வித்யாவுக்கு மிகவும் உற்சாகமாக இருந்தது.

பசவங்குடியில் தியாகுவின் பெற்றோரைச் சந்தித்தார்கள். பெரிய, பழைய காலத்து வீடு. இருபுறமும் பல மாடி ஃப்ளாட்கள் முறைத்துக் கொண்டிருக்க, பிடிவாதமாக 1918ஐ நினைவுபடுத்திய சுருள் ஓட்டு வீடு.

"தியாகு உங்களைப் பத்தி பூர்த்தி எல்லாம் சொல்லிட்டான். ரொம்ப ஓர்ஷமா தேடிக் கிட்டு இருந்த உடுகி? பொண்ணு இதாம்மா எந்து ஹேளிபிட்டா."

அப்பா திறந்த காலர் கோட்டும் மப்ளரும் பிரம்புத் தடியுமாக 'டெக்கான் ஹெரால்டு' படித்துக் கொண்டிருக்க, அம்மா இரண்டு மூக்கிலும் வைரம் ஜொலிக்க கிரணிப் பழம் போல சிவப்பாக இருந்தாள். "பா சொலே" என்று இப்போதே கூப்பிட ஆரம்பித்து, "தியாகு ஈக தானே சம்மதம் சொல்லியிருக்கான். அதிலயே எங்கள்க்கு தும்ப சந்தோஷா" என்றாள். அவர்கள் பேசும் தமிழும் வசீகரமாக இருந்தது. அவர்கள் வீட்டு நாய்க்குட்டி வித்யாவை சந்தேகமாக முகர்ந்து பார்த்து விட்டு, அங்கீகாரம் கொடுத்து மடியில் தாவி ஏறிக் கொண்டது.

"ஜூலியும் ஓகே சொல்லிட்டா. நீதாம்மா இந்த வீட்டுக்கு டாட்டர் இன்லா."

எளிய மனிதர்கள்.

சாயங்காலம் ஓட்டலுக்குத் திரும்பியபோது மனம் நிறைவாக இருந்தது. தியாகுவின் புத்தக அலமாரியில் நிறைய 'உட்ஹவுஸ்' இருந்தது. சந்தோஷமாக இருந்தது. "க்ராஸ்வோர்டும் போடுவீங்களா? என்ன ஒரு பொருத்தம்! அப்பாவுக்கு பைத்தியம். எனக்கும் ஒட்டிண்டுடுத்து."

ஓட்டல் அறையில் அப்பா எதிர் படுக்கையில் படுத்துக் கொண்டு, "என்னம்மா சொல்றே?"

"என்ன சொல்லணும்?"

"சம்மதம் சொல்லிடலாமா? நிச்சயதார்த்தம் மெட்ராஸ்ல வெச்சுக்கலாமா?"

"வெச்சுக்கலாம்பா."

"க்வார்டர்ஸ் பிரமாதமா இருக்கு. பெரிய தோட்டம். எனக்குன்னு தனி ரூம் காட்டினார் தியாகராஜன்."

"இப்பவே குழந்தை பிறந்தா அட்மிஷனுக்கு சொல்லி வெச்சிருப்பார் போல!" என்று சிரித்தாள்.

"சிஸ்டமாட்டிக் மேன்..."

"எனக்கு இன்னிக்குதாம்மா பரிபூர்ண சந்தோஷம். இதுநாள் வரைக்கும் என்னால உன் கல்யாணம் தள்ளித் தள்ளி..."

"அப்பா அதைப் பத்தி இப்ப பேச வேண்டாம்."

ராத்திரி சப்தம் கேட்டு எழுந்தாள். ஏசியை அப்பா அணைத்திருந்தார். அப்பா படுக்கையில் உட்கார்ந்து தலையைப் பிடித்துக் கொண்ட ஹஸ்ஸ் என்று களைத்துக் கொண்டிருந்தார்.

விளக்கைப் போட்டாள்.

"என்னப்பா?"

"ப்ரீதிங் ட்ரபிள். கொஞ்சம் மூச்சுவிட கஷ்டமா இருக்கு. சரியாப் போய்டும்."

அப்பாவின் முகம் முழுவதும் மூச்சிழுக்கும் முயற்சியில் சிவந்து, கன்னம் உப்பியிருந்தது. கண்களில் நீர்.

ஒரு நூல் மூச்சு வரக்கூட மிகவும் திணறிக் கொண்டிருந்தார். தியாகராஜனுக்கு போன் செய்தாள். உடனே வந்து அப்பாவை அழைத்துச் சென்று ராஜாஜி நகரில் ஒரு க்ளினிக்குக்கு அழைத்துச் சென்றார்கள். இரவு இரண்டு மணி. அவருக்கு ட்ரிப்ஸ் கொடுத்து டெரிஃப்ளின் ஏற்றியதில் நெஞ்சில் ஒலித்த சீட்டியொலி குறைந்து சுவாசம் திறந்து கொண்டது.

டாக்டர் தூக்கம் கலைந்த விழிகளுடன் வெளிவந்தார். "ஸார் இதுக்கு முன்னாடி உங்களுக்கு ஆஸ்த்மாட்டிக் அட்டாக் வருமா ஸார்?"

"வரும். ஆனா இத்தனை தீவிரமா வந்ததில்லை. என்ன குடுத்திங்க ஆக்ஸிஜனா?"

"பங்களூர்ல போலன் ஜாஸ்திம்மா. அதோட காத்தில ஈரம், லேசா குளிர் எல்லாம் சேர்ந்து... ஆஸ்த்மாகாரங்களுக்கு சரியான ஊர்

இல்லை இது. பயப்பட ஒண்ணுமில்லை. எப்ப ஊருக்குப் போறீங்க மிஸ்டர் சுப்ர மண்யம்?"

'நாளை ராத்திரி' என்று திணறினார்.

"முடிஞ்சா பகல் வேளையில பிரயாணம் செய்யுங்க. பங்காரபேட்டை தாண்டினதுமே சரியாப் போய்டும் பாருங்க. இந்த ஊர் அப்படிப்பட்ட ஊர். ஆஸ்த்மாகாரங்களுக்கு ஒத்து வராது."

மதியம் ப்ருந்தாவன் எக்ஸ்பிரசில் புறப் பட்டபோது, தியாகராஜன் "மே மாசம் இரண் டாம் தேதி என் பிறந்த நாள். அப்ப நிச்சய தார்த்தம் வெச்சுக்கலாம்."

"இல்லை மிஸ்டர் தியாகராஜன். நாங்க ஊருக்குப் போய் கன்ஃபர்ம் பண்றோம்" என்றாள்.

"வாட்டு யு மீன்? எல்லாம் தீர்மானிச்சாச்சு."

"என்ன தீர்மானிச்சாச்சு? உங்களால பங்களூரை விட்டு வர முடியுமா?"

"இந்த ஐஆர்எஸ் ப்ராஜெக்ட் முடியற வரைக்கும் முடியாது. பிற்பாடு யோசிக்கலாம்."

"உங்களால எப்பவுமே பங்களூர் விட்டு வர முடியாது."

"எதுக்கு விடணும்? நல்ல ஊரு. பெரிய வீடு. அப்பா, அம்மா உறவுக்காரங்க அத்தனை பேரும் இருக்காங்க. எப்படி வருவீங்க சொல் லுங்க."

"ஷார்'க்கு வேணா மாத்திக்கலாம்."

"ஷார்?"

"ஸ்ரீஹரிக்கோட்டா?"

"அப்ப பார்த்துக்கலாம்! அப்பாவால பங் களூர்ல வாழ முடியாது."

"வாட்டு யுமீன்? தேர் இஸ் எ சொல்யுஷன். வாழப் போறது நீங்களா அப்பாவா? அவர் தனியா மெட்ராஸ்ல இருக்கட்டும்."

"இல்லை சார். இந்த ஒரே காரணத்துக் காகத்தான் நான் எட்டு முறை தள்ளிப் போட் டிருக்கேன். அவர் என்கூட இருந்தாகணும்."

"ஏன்னு கேக்கலாமா?"

"நமக்குள்ள தீவிரமா ஏதாவது உறவு முறை வந்தா காரணத்தைச் சொல்றேன் ப்ளீஸ்."

அவன் முகத்தை பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

"வாரா வாரம் போய்ப் போய் அடிக்கடி பார்த்துக்கலாமே? என்ன இது வித்யா."

"இல்லை அவர் என் கூடத்தான் இருக் கணும். எங்களால பெங்களூர் வர முடியாது. பாருங்க, எப்படி மூச்சு வாங்கறது."

"எங்களைப் பிடிக்கலையா உங்களுக்கு?"

"அப்படி இல்லை சார். எங்களுக்குப் பாக்கியம் இல்லை."

அப்பா இன்னும் மூச்சு வாங்கிக் கொண் டிருந்தார். "எப்ப ரயில் புறப்படும்" என்று கேட்டுக் கொண்டே இருந்தார்.

"ரயில் புறப்படப் போறது" என்றான். தியாகராஜனைப் பார்த்து, "சரி நான் வரேன். இன்கேஸ் நீங்க முடிவை மாத்திண்டா..."

"நிச்சயம் போன் பண்றேன்."

கைகொடுக்க முற்பட்டவனை வணங் கினாள்.

சென்னைக்கு வந்ததும் அப்பாவுக்கு சரி யாகி விட்டது.

"உங்களால பங்களூர்ல இருக்க முடி யாதுப்பா. எதுக்கு போட்டு சிக்கலாக்கிக் கணும்."

"இருந்தாலும் நீ செய்தது நல்லாவே இல்லை. அருமையான மாப்பிள்ளைப் பையனை வேணாம்னுட்டியே. சிந்துபாத் கிழவன் மாதிரி நான் உன் முதுகில உக்காந் துண்டு இருக்கேன்."

"சே, அப்படியெல்லாம் பேசாதீங்கப்பா."

"எப்பதாம்மா கல்யாணம் செஞ்சுப்பே?"

"அவசரமில்லைப்பா."

"எனக்கு செத்துப் போகணும் போல இருக்கு. செத்துப் போனா எல்லா ப்ராப் ளமும் சால்வ் ஆயிடும். எதுக்காக இந்த மாதிரி தியாகம் பண்ணி என் உயிரை எடுக்கறே?"

"தியாகம் இல்லைப்பா இது."

"பின்னே?"

"கைம்மாறு. எனக்காக, என்னை வளக் கறதுக்காக நீங்க பண்ணதுதான் தியாகம். அம்மா செத்துப் போறப்ப எனக்கு என்ன வயசுப்பா?"

"மூணு."

"மறு கல்யாணம் பண்ணிக்காம என்னை தாயாவும் தந்தையாவும் இருந்து வளர்த்ததுக் காக ஒரு அரைக்கால் இன்ச்சாவது நன்றி தெரிவிக்க வேண்டாமா? எனக்கு அவசரம் இல்லைப்பா."

"இப்படியே போனா நீ கல்யாணம் இல்லாமயே காலம் கழிக்கணும்."

"போனா போறதுப்பா. எனக்கு அது முக்கியமாப்படலை."

"யு ஹவ் எ டிபலாஜிக்கல் ரோல் வித்யா."

"பிள்ளை பெத்துக்கறது. அதானே?"

"ஆமாம். உங்கம்மா போறதுக்கு முன்னாடி எங்கிட்ட சொல்லிட்டுப் போயிருக்கா. வித்யா வுக்குக் கல்யாணம் ஆகி குழந்தை பிறக்கறப்ப மறுபடி ஜென்மம் எடுப்பேன். உங்களையெல் லாம் பார்க்க வருவேன்னு..."

வித்யா அவர் கையைப் பிடித்துக் கொண் டாள். அவர் கண்களில் கண்ணீர் திரண்டதை சிரமப்பட்டு கண் சிமிட்டலால் தடுத்தும் ஒரு முத்து தப்பித்து மணிக்கட்டில் தெறித்தது.

"அம்மா எனக்கு கனவுல அடிக்கடி வரு வாப்பா. எப்பவும் 'அப்பாவை சரியா கவனிச்சுக்கோம்மா'ன்னுதான் சொல்வா. எனக்குக் கல்யாணம் குழந்தை எல்லாம் முக்கியமில்லை. நீங்கதாம்பா என் குழந்தை" என்றாள் வித்யா.

# நான் உங்கள் பெண் தானா?




• மலேசிய 'பெற்றோருடன்' யோக்வான்: மாறுபட்ட முகஜாடை

யோக்வான் இருபத்திரண்டு வயது இளம்பெண். ஈபோ நகரில், ஒரு பார்ட்டிக்குப் போன அவளுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

மலேசியாவில் ஈயச் சுரங்கங்களுக்குப் பெயர் போன நகரம் ஈபோ.

"நீ எங்கள் ஜெலபாங் நகரில் இருக்கிற இந்திய - சீனத் தம்பதியின் குழந்தைகள் மாதிரியே இருக்கிறாய்!" என்று பார்ட்டியில் யாரோ அவளிடம் வெகு சாதாரணமாகச் சொன்னதுதான் அவளது அதிர்ச்சிக்குக் காரணம்.

தான் கேட்டது ஒருவகையில் உண்மைதானோ என்று அவளுக்குத் தோன்றிற்று. சற்றே பிரமை பிடித்த மாதிரி இருந்தாள் யோக்வான். 'நான் அப்படியா இருக்கிறேன்?' என்ற கேள்வி வண்டாய்க் குடைந்தது மனசை.

பார்ட்டி முடிந்தும் முடியாமலும் இருக்கையிலேயே, மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு ஜெலபாங்குக்குப் புறப்பட்டாள். ஏதோ ஒரு சக்தி உந்த, யோக் பறந்தாள்.

இந்திய-சீனத் தம்பதி மிஸ்டர் கிருஷ்ணனும் அவரது சீன மனைவி லோக் சின்னும் அவளை வாய் நிறைய வரவேற்று, கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மேசையில் வைத்திருந்த ஒரு லேமினேடட் புகைப்படத்தில் அழகாக ஒரு பெண் புன்னகைத்துக் கொண்டிருந்தாள்.

"இவள் எங்கள் பெண்




தான். அமானா. அமானா கிருஷ்ணன்!" என்றாள் மிஸஸ் வோக்சின் கிருஷ்ணன்.

தூக்கிவாரிப் போட்டது போல இருந்தது யோக் க்வானுக்கு. அவள் வசிக்கிற, வளர்ந்து வருகிற குடும்பத்தில் இருக்கிற எட்டுப் பேரைப் போலவே இருந்தாள் அமானா. அதே முகச் சாயல். அதே உடலமைப்பு. அதே நிறம்!

இது எப்படி சாத்தியம்?

கிருஷ்ணன் தம்பதியின் குழந்தைகளில் ஒருத்தி மாதிரி இருக்கிறாள் யோக் க்வான்.

அமானாவோ தங்கள் குடும்பத்துப் பெண்களில் ஒருத்தி மாதிரி!

அம்மா வோங்கிடம் போய் இதைச் சொன்னால் அவளால் தாங்கிக் கொள்ள முடியுமா? ஆனால்-வேறுவழி?

அம்மாவிடம் போய்ச் சொன்னாள் யோக் க்வான்.

பெண்ணைக் கட்டிக் கொண்டு அழுதாள் வோங். "நீ பிறந்தபோது, உன் முகச் சாயலைப் பார்த்து நான் யாரோ ஓர் இந்தியருடன் தகாத உறவு வைத்திருப்பதாக ஊரே பேசிய போது, கூசிக்குறுகிப் போனேன் பெண்ணே!"

யோக் க்வானும் 'அம்மா'வைக் கட்டிக் கொண்டு விசித்தாள். தன் பாட்டி கூட, அம்மாவின் நடத்தையில் சந்தேகம் கொண்டு அவளைப் பாடாய்ப்படுத்தியது நினைவுக்கு வந்தது. ஆனால் -

இந்தியர் கிருஷ்ணனைத் திருமணம் பண்ணிக் கொண்ட வோக் சின்னின் நிலைமையும் கிட்டத்தட்ட இதேதான். "நான் மனமார ஒரு தவறும் செய்யவில்லையே, கடவுளே! எனக்கு எப்படி இப்படி ஒரு பெண் பிறந்திருக்க முடியும்?" என்று மறுகாத நாள் இல்லை.

ஆனால் ஊரார் வாயை அடைப்பது எப்படி?

**யோ**க் க்வானின் தூண்டுதலால், இரண்டு குடும்பங்களும் சந்திக்க ஏற்பாடு ஆனபோது, அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

இரத்தப் பரிசோதனை செய்து கொள்ள இரண்டு குடும்பங்களும் தயாராயின.

கிருஷ்ணன் தம்பதியின் இரத்த வகையைப் போலவே, யோக் க்வானுடையதும் ஏ-பாசிடிவ் இரத்தம்.

அமானா கிருஷ்ணனின் பிளட் குருப் போலவே மிஸஸ் வோங் சின்னின் பிளட் குருப்பும் ஓ-பாசிடிவ்.

இதுபோல, ஈபோ மருத்துவமனையில் எத்தனையோ பிரசவங்கள் நடந்து முடிந்த உடன், குழந்தைகளின் அடையாளம் தெரியாமலேயே, வெவ்வேறு குடும்பங்களுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டது பற்றி பெரிய சர்ச்சை எழுந்துள்ளது மலேசியாவில்.

இரண்டு குடும்பங்களும் மருத்துவமனை மீது வழக்குத் தொடர்ந்திருக்கின்றன.

"எங்களைப் போல எத்தனை பெற்றோரிடம் மாறிப்போன குழந்தைகள் வளர்கின்றார்களோ?'' என்று கிருஷ்ணன் அங்கலாய்ப்போடு சொன்ன பிறகும், ஒரு கேள்வி பிரம்மாண்டமாய் எழுந்து நிற்கிறது.

அமானா கிருஷ்ணன் மலேசிய தம்பதி வீட்டுக்குத் திரும்பிப் போய், அவர்களைப் பெற்றோராக ஏற்றுக் கொண்டு வாழ முடியுமா?

யோக் க்வான், தான் இருபத்திரண்டு வருடங்களாக யாரை அம்மா - அப்பா என்று நினைத்து வாழ்ந்தாளோ, அவர்களை விட்டுப் பிரிந்து, கிருஷ்ணன் தம்பதியின் வீட்டுக்குப் போய் வாழ முடியுமா?

தங்கள் பெற்றோர் வேறொருவர் என்று இத்தனை வருடங்கள் கழித்து அறிவது எவ்வளவு பெரிய சோகம்!

— எஸ்.வி.என்.

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

43

# குறையொன்றுமில்

**பூ**தேவியும் தேவதைகளும் சென்று எம்பெருமானிடத்திலே முறையிட்டார்கள். 'இந்த உலகத்திலே பாரம் அதிகமாகப் போய் விட்டது. பரமாத்மாதான் ரக்ஷிக்க வேணும்.'

பளு என்றால், நிறைய மரங்கள் வளர்ந்து விட்டதால் பளுவா? இல்லை மலைகளினால் பளுவா? இல்லை மனித சமூகத்தினாலேயா...?

இவையெல்லாம் பளுவேயில்லை பூமிக்கு. தினமும் பாவம் பண்ணியபடி பூமிமேலே சஞ்சாரம் பண்ணுகிறோமே, அதுதான் பளு!

இந்த பளுவைத்தான் போய் பகவானிடத்திலே எடுத்துச் சொன்னார்கள் தேவர்கள்.

அவன் தன் உடம்பிலிருந்து இரண்டு ரோமங்கள் - ஒன்று வெள்ளை, ஒன்று கறுப்பு - எடுத்துக்காட்டி, "இவை இரண்டும் உங்கள் துயர் துடைக்கும்" என்று அனுக்கிரஹம் செய்தான்.

அவற்றுள் சுவேதம் (வெண்மை) பலராம அவதாரம். கிருஷ்ணம் (கருமை) கிருஷ்ணாவதாரம்! 'இந்த இரண்டு ரூபமாய் நான் வந்து உங்கள் துயர் துடைக்கிறேன்' என்பதைத்தான் பரமாத்மா அப்படி உணர்த்தினான்.

விச்வஸ்ய பதி : என்று கிருஷ்ணனைக் கொண்டாடுகிறோம்.

பகவான் நாராயணன்தான் வாசுதேவனாய் வந்து பிறந்தான். இந்த பலராம, கிருஷ்ண சப்தங்களை இரண்டுமே விச்வ சப்தத்தினால் அறியப்படுகின்றன. இந்த விஷயத்தில் உபநிஷத் சொல்வது போலவே விஷ்ணு சஹஸ்ரநாமமும் சொல்கிறது. அதனால்தான் பெரியோர்களுக்கு சஹஸ்ரநாமத்திலே ஒரு ஈடுபாடு.





யார் பிரும்மம் என்று விசாரித்தால், தேவகி புத்ர : என்று சொல்கிறது உப நிஷத். அவன் புண்டரீகாட்சன். சர்வத்தையும் தாங்கக்கூடிய எம்பெருமான் அவன்.

வேத - வைதிகமான முறை கிருஷ்ணாவதாரத்திலே சிறப்பாகக் காட்டப்பட்டிருக்கிறது. ஒரு யக்ஞமும் பண்ண வேண்டியதில்லை. இவன் (கிருஷ்ணன்) பிறந்தவாறும்



## அருள்வாக்கு

**ப**ழைய காலத்தில் தர்ம சாஸனங்களெல்லாம் கோயிற் சுவர்களில் கல்லில் வெட்டப்பட்டிருக்கின்றன. தர்மங்களைப் பதிவு செய்யும் ஸப் ரிஜிஸ்திரார் ஆபீஸ் பழைய நாளில் கோயில்தான். திருவாங்கூர் ஸம்ஸ்தானத்து ராஜ்யாதிகாரிகளுள், திருமந்திர ஓலை என்பவன் ஓர் உத்தியோகஸ்தன். ஸமீப காலம் வரையில் அந்த ராஜ்யத்தில் இந்த உத்யோகம் இருந்தது. பூர்வத்தில் தமிழ்நாட்டில் எல்லா அரசர்களிடமும் இப்படியொரு அதிகாரி இருந்தான். இந்தக் காலத்தில், 'பிரைவேட் ஸெகரட்ரி' என்று சொல்கிறார்களே, அந்த மாதிரி, அவன், அரசன் எது சொன்னாலும் அதை எழுதிக் கொள்ள வேண்டும். பின்பு அதை யார்யாருக்கு அனுப்ப வேண்டுமோ அவர்களுக்கு அனுப்ப வேண்டும். அந்தக் காலத்தில் யார் எந்தத் தர்மம் பண்ணினாலும், அதை மஹாராஜாவுக்குத் தெரிவிக்க வேண்டும். அவன் அதை ஒத்துக் கொண்டு ஆக்ஞை பண்ணுவான். அந்த ஆக்ஞையைத் திருமந்திர ஓலைக்காரன் எழுதி அனுப்புவான். அப்படி எழுதிக் கடைசியில், 'கல்லிலும்

வளர்ந்தவாறும் எண்ணினாலே போதும் – அதுவே யக்ஞப் ப்ரவரணம்.

யக்ஞத்துக்கு சில நியமங்கள் உண்டு. அரணியைக் கடைந்து அக்னி உண்டு பண்ண வேண்டும். அந்த நாளில் நியமமாய் வாழ்ந்தவர்கள் மந்த்ரத்தைச் சொல்லி கையைக் காண்பித்தாலே அக்னி உண்டாகி விடும்.

அவ்வாறு உண்டாக்கிய அக்னியை ஒரு நதியைக் கடந்து கொண்டுவர வேண்டும். நதிக்கு வலப்புறத்திலே ஒரு யக்ஞவாடிகை அமைக்க வேண்டும். அந்த யக்ஞ வாடிகையிலே அக்னியை பிரதிஷ்டை பண்ண வேண்டும். அங்கே பல யாகங்கள் பண்ணி, வேறு இரண்டு யக்ஞ வாடிகைகளுக்கு அதே அக்னியைக் கொண்டு போக வேண்டும். அந்த மூன்று அக்னியிலும் நடுவிலே ஜொலிப்பவன் பரமாத்மா.

இப்படி விசேஷமாக யக்ஞம் பண்ணி அதை சேவித்தவர்களுக்கெல்லாம் பகவான் அனுக்கிரஹம் விசேஷமாக ஏற்படுகிறது.

'ஆகையினாலே, கிருஷ்ணாவதாரமும் யக்ஞமும் ஒன்றுதான்!' என்று சுவாமி தேசிகன் சொல்கிறார். – இதை நாம் மனசிலே நினைத்து நினைத்துப் பார்க்க வேண்டும்.

தேவகி- வசுதேவர் என்கிற அரணிக் கட்டையிலிருந்து கிருஷ்ணன் என்கிற அக்னி உண்டானான். 'அக்னி' என்கிற சப்தத்தினால் மறைத்துச் சொல்லப்படக்கூடியவன் பரமாத்மா.

அந்த 'அக்னி'யை வசுதேவர் சிரஸிலே எழுந்தருளப் பண்ணினார். ஆற்றைக் கடந்து வந்தார். முழங்கால் அளவுக்கு வடிந்து வருடிக் கொடுத்தான் யமுனா நதி. ஆதிசேஷன் ஆயிரம் சிரஸ்"களால் குடைபிடித்தான்.

மறுகரை அடைந்து, நந்தகோபனுடைய திருமாளிகையிலே காருகபத்ய அக்னிகுண்டமாகிய நந்தகோபன் மாளிகையிலே, கிருஷ்ணனாகிய அக்னியைப் பிரதிஷ்டை செய்கிறார்.

கிருஷ்ணனுடைய பால லீலைகள் மொத்தமும் அந்த யாகத்திலே மந்திரமாகின்றன. பால லீலை முழுவதும் மந்திரார்த்தம்தான்! மந்திரமாக இருந்தால் புரிவதில்லை. லீலையாக இருந்தால் எல்லோருக்கும் புரிகிறது.

பத்து அச்வமேத யாகங்கள் பண்ணுகிறார் ஒருவர். நூறு என்றே வைத்துக் கொள்வோம்... உயர்ந்த பிறவியை அடைகிறார். மறுபடியும் பூலோகத்தில் பிறக்கிறார். ஆனால் கிருஷ்ணனின் திருவடியை ஆச்ரயித்தவர்களுக்கு மறுபடியும் பூலோகப் பிறப்பு உண்டோ...?

ஆகையினாலே, எல்லாவற்றைக் காட்டிலும் மேம்பட்டதாய் விளங்கக்கூடியது பகவத் சரித்திரமானதனாலே, வேதோக்தமாய் விளங்கக்கூடியதை பகவான் தானே நடத்திக் காட்டினதனாலே... யக்ஞமே அங்கே இருப்பதனாலே.. தேவகி நந்தன: என்று சொன்னாலே இந்த யக்ஞ ப்ரவரணமெல்லாம் நமக்கு நினைவு வரவேண்டும்.

அப்படி நினைவுக்கு வருமானால் கூடவே வருத்தமும் வரும். அந்த யக்ஞமெல்லாம் நம்மால் பண்ண முடியவில்லையே என்கிற வருத்தம்.

உடனே பரமாத்மா நம்மை சமாதானப்படுத்துகிறான். 'நீ வருத்தப்படாதே! உன்னைச் சகல பாவங்களிலிருந்தும் நான் விடுவித்து விடுவேன்' என்கிறான். அந்த அமிர்தமான வாக்கிலே நமக்குப் பூரணமான விச்வாஸம் இருந்து அவன் திருவடியைப் பற்றவேண்டும்.

**இ**துவரை சொன்னது கர்ம காண்டம். அதற்கடுத்தது ஞான காண்டம் என்று ஒன்று உண்டு. வேதத்தில் பூர்வ பாகம் முழுவதும் கர்ம காண்டம்; பின் பாகம் மொத்தமும் பரப்ரும்மத்தை, அவனுடைய பெருமைகளைச் சொல்வது.

எம்பெருமானின் பெருமையை நேராகப் பேசும் உபநிஷத்தில் ஒரு வாக்கியம் இருக்கிறது. அது என்னவென்றால், 'அன்னவானாகவும் இவன் இருப்பான்; அன்னாதனாகவும்

இருப்பான்' என்று நம்மை அனுக்கிரஹம் செய்யும் வாக்கியம்.

அன்னவான் – அன்னத்தை உடையவன். நிறைய நிலங்கள் இருக்கிறது. அதில் விளைந்து வரும் தான்யம் மூட்டை மூட்டையாய் அவன் வீட்டை நிரப்புகிறது. உடனே வேதம் என்ன சொல்கிறது...? 'அன்னத்தைச் சாப்பிடக் கொடுத்து வைத்தவனாகவும் இரு...' என்கிறது.

'அன்னத்தைப் பெற்றால் மட்டும் போதாது. அதை அனுபவிக்கவும் செய்ய வேண்டும்...' என்கிறது வேதம்.

உடனே நமக்குச் சந்தேகம் வரும் – 'இதைப் போய் வேதம் சொல்லிக் கொடுக்க வேண்டுமா? வீட்டிலே பிரசாதம் தயார் பண்ணினால் உடனே சாப்பிட வேண்டுமென்று தோன்றுகிறதே. சொல்லிக் கொடுக்காமல் வரும் வித்தை இது ஒன்றுதானே...?'

நித்யம் சாப்பிடுவதற்குக் கூட நியமம் சொல்கிறது வேதம் : சன்யாஸி நித்யம் எட்டு கவளம் சாப்பிட வேண்டும்; வானப்பிரஸ்தாச்ரமத்திலே இருப்போர் 16 கவளம் சாப்பிடலாம்; கிரஹஸ்தாச்ரமர்கள் 32 கவளம் உட்கொள்ளலாம். இதெல்லாம் ஒரு வேளைக்கு என்று நினைக்கக் கூடாது; இரண்டு வேளைக்கும் சேர்த்துத் தான் சொல்லப்பட்டது இந்த அளவு.

'இப்படி நியமம் சொல்கிற வேதமே சாப்பிடக் கொடுத்து வைத்தவனாகவும் இரு' என்று ஏன் சொல்ல வேண்டும்...?

ஒருவனுக்கு சொந்த நிலத்தில் நிறைய தானியம் விளைந்து வந்தாலும், மருத்துவர் கையைப் பிடித்துப் பார்த்துச் சொல்கிறார்: 'சாப்பாட்டை அறவே குறைத்து விடு!' அதுவும் இரவில் அடியோடு உணவு கூடாது...' இப்படிப்பட்டவன் மூட்டை மூட்டையாய் அரிசி வந்து இறங்குவதைப் பார்ப்பதோடு திருப்தியாயிருக்க வேண்டியதுதான்!

அதனால்தான் 'நன்றாகச் சாப்பிடக்கூடிய நிலை கடைசி வரை வாய்க்கட்டும்' என்று வேதம் சொல்கிறது. இந்த உபநிஷத் வாக்கியம் கிருஷ்ணாவதாரத்திலே நன்றாகப் பொருந்தியிருக்கிறது.

எப்படி...?

அன்னம் என்று உபநிஷத் எதைச் சொல்கிறது என்றால், பரப்ரும்மத்தைச் சொல்கிறது. பரமாத்மாதான் அன்னம். – அந்த அன்னத்தைப் பெற்றவனாகவும் இரு; அன்னத்தை அனுபவிக்க வல்லவனாகவும் இரு என்பது உட்பொருள்.

தேவகி – வசுதேவர் என்கிற தம்பதி அன்னத்தைப் பெற்றார்கள் – அந்த கிருஷ்ணனைப் பெற்றார்கள். ஆனால் அவனை அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லையே! எல்லா பாக்கியமும் தெய்வ நங்கை யசோதை அல்லவா அடைந்தாள்! நந்தகோபனும் யசோதையும் அன்னாதர்கள்; தேவகி – வசுதேவன் அன்னவான்கள்.

'கிருஷ்ணன் அங்கு தோன்றி இங்கு வந்தான்' என்பதை உபநிஷத் எத்தனை அழகாகச் சொல்கிறது பாருங்கள்!

பகவானை அணுஅணுவாக அனுபவிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அதை இழந்துவிட்டோமானால் பெரிய வருத்தம். அந்த எம்பெருமானை ஒரு கணம் நினைக்காமல் போனாலும் பெரிய விசாரம். – எதையோ இழந்த மாதிரி. அப்படிப்பட்ட நிலை ஏற்பட்டு, 'ஒரு க்ஷணம் ஒரு யுகமாக இருக்கிறதே' என்று கோபிகாஸ்த்ரீகள் விசேஷமாக அனுபவித்திருக்கிறார்கள்.

தேவகி நந்தனனாகத் தோன்றியவன் சர்வ லோகத்துக்கும் காரண பூதன்; சர்வ லோகத்துக்கும் நாதன்; அவன் சரித்திரத்தை நினைத்தோமேயானால் பாவம் நம்மை விட்டுப் போய்விடும். ஆகையினால்தான் பரமாத்மா அந்த அவதாரத்தையும் அந்த லீலைகளையும் சேர்த்தே சொன்னான்.

எங்கே அவ்வாறு சொல்லியிருக்கிறான் என்று கேட்டால், பகவத் கீதையிலே நான்காவது அத்தியாயத்திலே.

''ஹே, அர்ஜுனா! இந்தக் கர்ம யோகம்

செம்பிலும் வெட்டிக் கொள்ளுவதாகவும்' என்று எழுதுவான். அந்த ஆக்ஞை எந்த ஊரில் தர்மம் செய்யப்படுகிறதோ அந்த ஊர் ஸபையாருக்கு அனுப்பப்படும். அவர்கள் அதைக் கோயிற் சுவரில் வெட்டச் செய்வார்கள். இதுதான் 'கல்லில் வெட்டிக் கொள்வது' என்பது. அநேகக் கோயில்களிலுள்ள சிலா சாஸனங்கள் இவைதான்.

'செம்பில் வெட்டிக் கொள்வது' என்பது தாமிர சாஸனமாக செப்பேடுகளில் எழுதி, ஒரு ஏட்டுக்கு மேல் போனால் ஓட்டை பண்ணி வளையம் போட்டுக் கோத்து வைப்பதாகும். இதற்கும் உள்ளூர் ஸபையார் அங்கீகாரம் கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட செப்பேடுகளும் கோவில்களிலேயே பூமிக்கு அடியிலுள்ள ''க்ஷேமம்'' என்கிற (க்ஷேமம் என்றால் பாதுகாப்பு என்றுதானே அர்த்தம்?) இடத்தில் வைக்கப்படும். தேச வாழ்வே ஈச்வரன் கையில் ஒப்பிக்கப்பட்டு, ஆலயம் என்பதே ஒரு நாட்டின் உயிர் நிலையாகக் கருதப்பட்டு வந்ததால், இப்படி அதுவே ரிஜிஸ்திரார் ஆபீஸ், எபிக்ராஃபி ஆபீஸ் எல்லாமாக இருந்தது.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

இப்போது உனக்குச் சொன்னேனே.... அதை இப்போதுதான் முதன் முதலாகச் சொன்னேன் என்று நினைக்காதே. இதற்கு முன்னாடி அந்த சூரியனுக்கு இதைச் சொல்லியிருக்கிறேன். சூரியன் மனுவுக்குச் சொன்னான். மனு, அதை இக்ஷ்வாகுவுக்குச் சொன்னான். இப்படி, ஒருவர் பின் ஒருவராகச் சொல்லப்பட்டு, தரிக்கப்பட்டு, கால வெள்ளோட்டத்திலே அது நஷ்டத்தை அடைந்தது....

"உயர்ந்த விஷயத்தைச் சொல்பவர்கள் இல்லாததாலும், உயர்ந்த விஷயங்களெல்லாம் மறைக்கப்பட்டு, சாமான்ய விஷயங்கள் உலகத்திலே நடையாட ஆரம்பித்தன. உயர்ந்த விஷயங்களை சிஷ்யனுக்கோ அல்லது புத்ரனுக்கோதான் சொல்லலாம் – வேறு யாருக்கும் சொல்லக்கூடாது என்கிறது சாஸ்திரம்.

"அதனால் உன்னை நான் இப்போது பரிபூர்ண சிஷ்யனாகவும் தோழனாகவும் ஏற்று இந்த உயர்ந்த விஷயத்தைச் சொன்னேன். இதை ரொம்ப பத்திரமாக நீ வைத்துக் கொள்ள வேண்டும்..." என்றான் பரமாத்மா.

அர்ஜுனன் சிரித்தான்.

"எதற்குச் சிரிக்கிறாய்?" என்றார் பகவான்.

"உன்னைப் பற்றி நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன் – நீ புளுகிலே வல்லவன் என்று – இப்போதுதான் அதைப் பிரத்யக்ஷமாய்ப் பார்க்கிறேன்..."

பகவான் பார்த்தான் – "நான் பொய் சொல்கிறேனா? எதையடா பொய் என்கிறாய்?" என்று கேட்டான்.

உடனே அர்ஜுனன் சற்று பின்வாங்கி "அதைச் சொல்கிற தைரியம் எனக்கு இல்லை. பொய் என்று சொல்ல முடியாது – நீ சொல்வது எனக்குப் புரியவில்லை என்று வேண்டுமானால் சொல்லலாம்..." என்றான்.

பகவான் திரும்பவும் கேட்டான் : "எது புரியவில்லை..?"

"இப்போது எனக்கு நீ சாரதியாய் இங்கே அமர்ந்திருக்கிறாய். இந்த இருபத்தெட்டாவது கலியுகத்திலே என்னுடன் நீயும் பிறந்திருக்கிறாய்... இருபத்தெட்டு சதுர்யுகங்களுக்கு முன்பு அந்த சூரியனுக்கும் நீயே சொன்னதாகச் சொல்கிறாயே அது எப்படிப் பொருந்தும்? அப்போதும் நீ இருந்தாயா...?"

– இந்த இடத்திலே அர்ஜுனன் இப்படிக் கேட்டதாலே பரமாத்மா தன் சுவபாவத்தைச் சொல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. கர்ம யோகம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தவன் திசை மாறி விளக்கம் சொன்னான் :

"அர்ஜுனா! எனக்கும் எத்தனையோ ஜன்மாக்கள் கடந்தன. உனக்கும் எத்தனையோ ஜன்மாக்கள் கடந்தன. ஆனால் ஒன்றை நீ கவனிக்க வேண்டும் – உன்னுடைய முந்தைய ஜன்மாக்கள் என்னென்ன என்பதை நீ சொல்ல முடியுமா...? ஆனால், என்னைக் கேள். என் ஜன்ம பரம்பரை அத்தனையையும் சொல்வேன். மேல் வருவனவற்றையும் சொல்வேன். ஆகையினாலே உன்னை வைத்து என்னை அளக்கிறாயே... அது எப்படி சரியாகும்? உன்னைக் கொண்டு என்னை எடை போடாதே!" என்றான்.

இதனால் என்ன தெரிகிறது...? அவதார காலங்களிலும் பகவான் பரிபூரண ஞானியாக வந்து அவதரிக்கிறான். எப்போதும் பிரகாசிக்கும்படியான ஞானம் அவனுடையது.

அவனுடைய பிறப்புக்குக் காரணம் கர்ம வினை அல்ல, ஆத்ம மாயை! ஆத்ம மாயை என்றால் 'விருப்பம்' – அவனுடைய இச்சை என்று பொருள். எப்போது வந்து பிறக்க வேண்டும் என்று நினைக்கிறானோ அப்போதெல்லாம் வந்து பிறக்கிறான். – தர்மம் குறையும்போதெல்லாம் வந்து பிறக்கிறான்.

'ஒரு ஹிரண்ய கசிபு, ஒரு ராவணன் இருக்கும்போது பகவான் அவதாரம் பண்ணினானே... இப்போது தற்குறிகளாக நிறையப் பேர் இருக்கிறார்களே... ஏன் அவன் அவதாரம் பண்ணக் கூடாது...?' என்று கேள்வி கேட்கலாம்.

பதில் இருக்கிறது...

(தொடரும்)



"உங்களுக்கு அடக்க முடியாத ஆத்திரம், படபடப்பு, உண்டாகுதா... எவ்வளவு நாளா இப்படி?"

"இப்ப சாயங்காலம் உங்க கிளினிக்குக்கு ஆறு மணிக்கு வந்து எட்டு மணி வரைக்கும் காத்திருந்தேன் பாருங்க டாக்டர்... அப்பலேருந்துதான்!"

– கே. அனிதா



# ராஜாதிராஜா!

* (வலப்புறம்)
டெங் : மா-சே-துங்குடன்

டெங்ஸியோ பிங் - கடந்த முக்கால் நூற்றாண்டு காலமாக சீன மக்களின் ஊனோடும் உயிரோடும் கலந்து விட்ட பெயர். குறிப்பாக 1976லிருந்து சீனாவின் தலையெழுத்தை மாற்றி எழுதிய பிரம்மா. புழுக்கத்திலிருந்த சீனப் பொருளாதாரத்தின் மீது சர்வதேச வெளிச்சத்தைக் கொண்டு வந்த ஜன்னல்.

டெங் 1904ம் ஆண்டு ஆகஸ்டு 22-ம் தேதி பிறந்தார். சிச்சுவான் என்ற பகுதி சீனாவின் சுவையான உணவுகளுக்குப் புகழ்பெற்ற இடம். டெங் பிறந்தது அங்கேதான். அப்பா பணக்கார நிலப்பிரபு.

தான் பிறந்த இடத்திலிருந்து நூறு மாணவர்களைக் கூட்டிக் கொண்டு பதினாறு வயது இளைஞனாக 1920ல் பாரீஸ் போன டெங், அங்கே படித்துக் கொண்டே கார் தொழிற்சாலை ஒன்றில் மெக்கானிக்காக வேலை பார்த்தார். அங்கேயே அரசியல் அரிச்சுவடியும் படித்தார். இரண்டு வருடம் கழித்து சீன சோஷலிஸ்ட் இளைஞர் லீக்கில் சேர்ந்தார். அதன் தலைவர் சூ-என்-லாய். சீன கம்யூனிஸ்ட் கட்சி உதயமான போது லீக் அதனோடு இணைந்தது.

பின்னர் தோழர் மாசேதுங்கின் விசுவாசியாக ரெட் லைட், தி ஆர்மி, ரெட் ஸ்டார் போன்ற பத்திரிகைகளின் ஆசிரியராக பல்வேறு நிலைகளில் உயர்வு. ஸிஸியன் என்ற தன் பெயரை ஸியா பிங் என்று மாற்றிக் கொண்டார். ஸியா பிங் என்றால் 'கொஞ்சம் அமைதி' 'சின்ன பாட்டில்' என்று இரண்டு அர்த்தங்கள் உண்டு. '34-35-ம் ஆண்டில் நடைபெற்ற புகழ்பெற்ற நெடும் பயணத்தில் (லாங் மார்ச்) ராணுவத்தோடு இணைந்து தோழர் டெங்கும் நடந்தார். அந்த நடை பின்னாளில் சீன ராணுவத்தோடு அவர் கொண்டிருந்த சுமுக உறவுக்கு அஸ்திவாரமாய் அமைந்தது.

மா-சே-துங் மரணத்திற்குப் பின் சீனாவின் லகானைப் பிடித்த டெங் ஸியாபெங் மீது மாவின் ஆதரவாளர்கள் எரிச்சலுற்றனர். பலவாறாக அவருக்கு முட்டுக்கட்டை போட்டனர். என்றாலும் டெங்கை அசைக்க முடியவில்லை. குன்றாக இருந்தவர் மலையாகி மக்களின் மந்திரச் சொல்லாக மாறினார்.

சீன மக்களின் புது விடியலுக்கு பூபாளம் பாடிய டெங், தம் சொந்த வாழ்க்கையில் முகாரியையே முணுமுணுக்க வேண்டி வந்தது! முதல் மனைவி இறந்தபோது வயிற்றில் இருந்த டெங்கின் குழந்தையும் சேர்ந்து இறந்தது. இரண்டாவது மனைவி சிறிது நாளில் டெங்கை விட்டுப் பிரிந்தார். மூன்றாவது மனைவி ஷுவோலின் மட்டுமே அவருக்கு ஆதரவு. ஐந்து குழந்தைகள்.

அந்த ஐந்தில் ஒன்று - மகன். மாவின் ஆதரவாளர்களால் முதல் மாடியிலிருந்து

கீழே தள்ளப்பட்டதில் கை கால் முடங்கிப் போனது. இப்படி சொந்த வாழ்க்கையில் அடி மேல் அடி வாங்கிய போதெல்லாம் டெங்கின் மனஉறுதி இன்னும்... இன்னும்... என்று வளர்ந்து கொண்டே போனது.

தொடக்கத்தில் நிதியமைச்சர், கட்சியின் செக்ரட்டரி ஜெனரல் என்று பல பதவிகளைக் கொஞ்ச காலம் வகித்தபோதிலும் பின்னாளில் சீனாவின் தலையெழுத்தை நிர்ணயித்தபோது டெங் முக்கிய பதவி எதிலும் இல்லை என்பது கவனத்துக்குரியது.

'பிரிட்ஜ்' விளையாட்டில் புகழ்பெற்றவர். கடைசி காலத்தில் அவர் வகித்த பதவி பிரிட்ஜ் விளையாட்டுக் கழகத்தின் தலைவர் பதவி மட்டுமே என்று கூட வேடிக்கையாகச் சொல்வதுண்டு.

பதவி ஏதும் இல்லையெனினும் சீன நிர்வாகக் குதிரை இவர் விரல் சுட்டிய வழியிலேயே வேகமாக ஓடியது.

கம்யூனிஸ சீனா கனவிலும் அதுவரை கண்டிராத மாற்றங்களை டெங் உச்சரித்தார். 'பணக்காரனாவது தப்பில்லை' என்றார். சீன விவசாயிகள் தங்கள் அறுவடையை நேராகச் சந்தைக்கு விற்கலாம் என்றார். 'ஜன்னல்களை மூடி வைத்துப் புழுங்கியது போதும். திறந்து விடுங்கள்' என்று உத்தரவிட்டார். கம்யூனிஸத்தைக் கையில் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேதான் இவ்வளவு மாற்றங்களும்! ஆரவாரமின்றி சீனா பத்து சதவீத வளர்ச்சி விகிதத்தை ஓராண்டில் அடைந்தது!

**டெ**ங்கின் மறுபக்கம்? உண்டு. அதில் இருட்டு அதிகம்தான். ஒரே சம்பவத்தில் அவரது பெயர் ஆழமாய் சறுக்கியது.

1989 ஜூன் மாதம். சீனாவில் ஜனநாயகக் குரல் எழுப்பியவர்கள் – குறிப்பாக மாணவர்கள், இளைஞர்கள் – பல்லாயிரக்கணக்கில் சீனத் தலைநகரில் மாபெரும் தினானமென் சதுக்கத்தில் திரண்டார்கள். அரசை எதிர்த்து முழங்கினார்கள். எரிமலையானார்கள். சின்னச் சின்ன பாட்டில்களை சிம்பாலிக்காகச் சாலையில் குவித்து நொறுக்கினார்கள். ('ஸியாபங்க்' என்ற வார்த்தைக்கு சின்ன பாட்டில் என்று ஒரு அர்த்தம்) ராணுவ டாங்க்கின் முன்னே நீட்டிக் கொண்டிருந்த துப்பாக்கி முனையில் சட்டை கழற்றி நின்று 'அரசாங்கமே சுடு பார்க்கலாம் எங்களை' என்று சூளுரைத்தது மாணவர் கூட்டம்.

சுடு என்று ராணுவத்துக்கு விரலசைத்தார் டெங். முழங்கின, பீரங்கிகள். பல்லாயிரக்கணக்கானவர் பலியானார்கள். நவீன ஜாலியன்வாலாபாக் ஒன்று அரங்கேறியது.

'கம்யூனிஸம்தான் சீனாவுக்கு. மாற்று இல்லை' என்று ராணுவ மொழியில் டெங் தெரிவித்தார்.

இந்தக் கரும்புள்ளி டெங் வாழ்க்கையில் நிரந்தரம். இது பற்றிய தீர்ப்பை காலம்தான் வழங்கும் என்கிறார்கள் அரசியல் நோக்கர்கள்.

மக்கள் இந்த அவலத்தை மறக்கவில்லை. அதே சமயம் டெங்கைத் துறக்கவுமில்லை. உலகின் எந்தத் தலைவருக்கும் தங்கள் நாட்டில் இப்படி ஒரு மரியாதை கிடைத்ததில்லை எனலாம்.

'**த**னி நபர் வழிபாடு' என்றால் அறவே பிடிக்காது டெங் ஸியாபெங் அவர்களுக்கு. மா சே துங்கைக் கூட அவர் வழிபடவில்லை. துதிக்கவில்லை. 'என் மரணத்துக்குப்பின் இறுதி மரியாதைக்கு உடலை வைத்திருப்பது, சாம்பலை ஊர்வலமாக எடுத்துப் போவது போன்ற ஷோ எல்லாம் வேண்டாம்' என்று உயிருடன் இருந்தபோதே கட்டளை இட்டிருந்தார். ஆறு நாள் அரசு முறை துக்கம். அவ்வளவே. வெளிநாட்டுப் பிரமுகர்களின் வருகை இல்லை. இறுதிச் சடங்குகளுக்குப் பத்திரிகையாளர்கள், புகைப்படக்காரர்களுக்குக் கூட அனுமதி இல்லை. கண்கள் தானம் செய்யப்பட்டன. அதே போல டெங்கின் விருப்பப்படி அவர் உடலின் சில பகுதிகள் மருத்துவ ஆராய்ச்சிக்காக வழங்கப்பட்ட பின் மீதி இருந்தது சாம்பலாக்கப்பட்டது. கடலில் கரைக்கப்பட்டது.

அவர் இறந்த அன்றும் சீனாவில் மக்கள் வேலைக்குப் போனார்கள்! அன்றாட வேலைகளை எப்போதும் போல் பார்த்தார்கள். பங்குமார்க்கெட் கூட அந்த மரணத்தை எதிர்மறையாகப் பிரதிபலிக்கவில்லை. ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு வேறு என்ன அடையாளம் வேண்டும்?

– ராணிமைந்தன்

தமிழக அரசியலில் சில விசித்திரங்கள் -
'கருணா'நிதி - 'மகனிடமும் கண்டிப்பு காட்டுவேன்' என்கிறார்.
'ஜெய'லலிதா - தேர்தல் களத்தில் தோல்விகளைச் சந்திக்கிறார்.
'மூப்ப'னார் - இளமைத் துடிப்போடு கட்சியை நடத்துகிறார்.
'குமரி'அனந்தன் - கிழடுதட்டிய கட்சிக்குத் தலைமைதாங்குகிறார்.
'டாக்டர்'ராமதாஸ் - பேரணிகள் மூலம் உபாதை செய்கிறார்.
'வாழப்'பாடியார் - வாழத் தெரியாமல் தவிக்கிறார்.
'நெடுஞ்'செழியன் - நீட்டிப் பேசுவதை நிறுத்தி விட்டார்.
- பெ. கு. சங்கரன்



''மகாலட்சுமியின் வாழ்க்கையில்தான் என்ன ஒரு ஆச்சரிய திருப்பம்!
'அண்ணன் ஒருவன்
வானத்திலிருந்து பெட்டி போட்டான்.
அதைத் திறக்க முடியும் - ஆனால் மூட முடியாது' என்கிற மாதிரி...."

நீ இனி எப்படி செயல்படப் போறே?'' - தேசிகாச்சாரியின் கேள்வி முன் அவரையே வெறித்துப் பார்க்கிறான் மோகன்ராம். 'எப்படிச் செயல்படுவது?' ஒரு முடிவுக்கு வர முடியாத கேள்வியாக நிரடிக் கொண்டேயிருக்கிறது அது. 'நிச்சயம் ஒதுங்கி நமக்கெதுக்கு ஊர் வம்பு என்று போய் விடப் போவதில்லை. அதற்காக முண்டாசு கட்டிக் கொண்டு கிளம்பவும் முடியாது. இது இரண்டுக்கும் நடுவில் கண்ணுக்குத் தெரியாத, ஆனால் அறிவுக்குத் தெரிந்த ஒரு பாதை இருக்கிறது. அதில்தான் போக வேண்டும்.

'ஆமாம் அதில்தான் போக வேண்டும். அதில் செல்ல நிறைய பொறுமை வேண்டும். மனோதிடம் வேண்டும்....' - ஒரு பக்கம் மோகன்ராம் நினைத்துக் கொண்டே போக,

தேசிகாச்சாரி அதை அப்படியே போட்டு உடைக்கிறார். கூடவே அதுதான் சரியான முடிவு என்கிறார். ஆச்சர்யத்தில் மோகன்ராம் அரண்டு போகிறான். 'மனதில் இருப்பதை எப்படி இவர் கண்டுபிடிக்கிறார்?' என்ற கேள்வியில் இப்பொழுது சிக்கிக் கொள்ளுகிறான்.

"இதோ பார் மோகன்! நான் சொல்றதை நல்லா கேட்டுக்கோ..." என்று அவன் எதிரே பாறை மேல் ஏறி ஒரு ரிஷி போல அமருகிறார். அமர்ந்த விதம், பார்க்கும் பார்வை, பின்னால் சொல்லி வைத்த மாதிரி அவர் சிரத்துக்கு பின்னால் வந்து நிற்கும் மாலைச் சூரியன் எல்லாமாய்ச் சேர்ந்து அவரை தெய்வ வடிவாகவே காட்டுகின்றன.

''காலத்துல நல்ல காலம் கெட்ட காலம்னு எதுவுமில்லை. சூரிய சந்திரர்கள் தங்கள் கடமையை இதுநாள் வரை ஒரு முறை கூட மறந்ததில்லை. கொஞ்சமாவோ இல்லை கூடவோ மழையும் பெய்யத்தான் செய்யிது. பசு பால் தராம இல்லை. கதிர் நெல் தராம இல்லை... இயற்கை தன் கடமைல தவறலை. ஆறாம் அறிவுள்ள மனிதன்தான் இந்த பூமியிலேயே கடமை தவறினவன். அந்தத் தவறுக்கு தண்டனையையும் அவன் வாழற நாள்ளேயே அடையறான். அதனாலதான் ஏற்ற இறக்கம், சந்தோஷம் துக்கம் எல்லாம்.

"இப்படித்தான் நேற்றும் இருந்தது. இன்னிக்கும் இருக்கு. நாளையும் இருக்கும். இதுக்கு நடுவுல இதை எல்லாம் புரிஞ்சுக்கறவன்தான் ஞானி. இத முதல்ல புரிஞ்சுக்கோ... ஒரு தப்புக்கு இன்னொரு தப்பு சரியான பதிலாகாது. அதே சமயம் ஒதுங்கிப் போறதும் உத்தமமில்லை. ஆகையால கடவுளே எனக்குச் சரியான பாதையை காட்டுன்னு கடவுளோட ஒரு போராட்டத்த தொடங்கு. அவர் நிச்சயம் காட்டுவார்."

தேசிகாச்சாரியின் பேச்சில் துளி நம்பிக்கை துளிர் விடத்தான் செய்கிறது. ஆனாலும் ஒரு கேள்வியும் எழும்புகிறது.

"கேட்காமலே காட்ட கடவுளுக்கு தெரியாதா?'' - இந்தக் கேள்விக்கு தேசிகாச்சாரியிடம் ஒரு அர்த்தமுள்ள புன்சிரிப்புதான் பதிலாகப் பூக்கிறது.

"எதுக்கு சிரிக்கிறீங்க?"

"அவன் காட்டாம இல்லை."

"அப்ப எனக்கு அவன் பாதை காமிச்சுட்டானா... எனக்குத்தான் அது தெரியலையா?''

"ஆமாம்..."

இந்திரா செளந்தர்ராஜன்

"உங்க வாதத்தை நான் ஒத்துக்க மாட்டேன். நான் ஏற்கெனவே சோர்ந்து போயிருக்கேன். நீங்க எதைஎதையோ பேசி எனக்குள்ள மேலும் சோர்வைத்தான் உருவாக்கறீங்க..."

"அப்படியா? நல்லது..." - தேசிகாச்சாரி பேசியது போதும் என்பது போல கிளம்புகிறார்.

"என்ன இது... என் கேள்விக்கு பதில் சொல்லாம போறீங்களே..." தேசிகாச்சாரியிடம் திரும்பவும் சிரிப்பு.

"உங்களை மாதிரி பெரியவங்க இப்படி நடந்துக்கக் கூடாது. பேசினா வேதாந்தம் இல்லேன்னா வறட்டு சிரிப்புன்னா அதுக்கு என்ன அர்த்தம்...?"

"உனக்கு இன்னும் பக்குவம் வரலைன்னு அர்த்தம்..."

ஓஹோ... உங்களை மாதிரி குழப்பறதுக்கு பேர்தான பக்குவமா?"

கோபப்படாதே மோகன். நான் சொன்னதுல ஒரு தப்பும் இல்லை."

"அத நான் சொல்லணும். ஒரு தப்பான விஷயத்தை கண்டு ஒதுங்கக் கூடாது... அதை ஒத்துக்கவும் கூடாது. இதுவரை பேச்சு சரி. கடவுள் பாதை காட்டுவார்னீங்களே அது எந்தப் பாதை..? தெளிவா சொல்லுங்க."

"அத சொல்லால விளக்க முடியாது மோகன். மனசுல பிடிபட வேண்டிய விஷயம் அது."

"இத சொல்லவா நீங்க இங்க வந்தீங்க...?"

"அதுக்கு மட்டுமில்ல... தினமும் இந்த ஆஸ்ரமத்துக்கு நீ வரணும். தியானம் பழகணும் அதையும் சொல்லத்தான் வந்தேன்."

"அதெல்லாம் நாளைய பொழுதுன்னு ஒண்ணு இருக்கிறதா நம்பறவங்களுக்கு. எனக்கில்லை. என் வாழ்க்கை எப்படி போகும்னே தெரியலை."

"ரொம்ப நல்லவிதமா போகம போகுது மோகன். நம்பிக்கை வை."

தேசிகாச்சாரி பேச்சோடு பேச்சாக அவன் தோளில் கை போடுகிறார். அவன் உடம்பிலும் எண்ணத்திலும் சரேலென்று மாற்றம். மனதில் கூட அலையடித்து ஓய்ந்தது போல ஒரு நிசப்தம்.

"மோகன் ஒரு விஷயத்த ஞாபகத்துல வெச்சுக்கோ.... யாரையும் வெறுக்காதே. ஒருத்தன் செய்யற தப்புக்குக் கூட ஒரு சரியான காரணம் இருக்கு. இன்னொரு விஷயத்தையும் சொல்றேன். நல்லா கேட்டுக்கோ. வலிதான் ஞானம்! துன்பம்தான் உண்மையான இன்பம்! இத போகப் போக புரிஞ்சுப்பே."

பேசிவிட்டு நகர்கிறார் தேசிகாச்சாரி. அவரையே வெறிக்கிறது மோகன்ராமின் இமைக்க மறந்த பார்வை.

---

"என்னது! ஜோக் எழுத்தாளருக்குப் பரிசளிப்பு விழாவா?"

"ஆமாம்! இருநூறு மாவாட்டற ஜோக் எழுதினதுக்காக ஒரு கிரைண்டரைப் பரிசா தராங்க!"

– பொன்மலை ஆர். பிரகாஷ்



---

**உள**ளையிட்டபடி ஊர்ந்து கொண்டிருக்கிறது திருப்பாப்புலியூர் பாசஞ்சர். டயர் உருட்டி விளையாடும் சில சட்டை போடாத சிறுவர்கள் முடிந்தவரை உற்சாகமாக அதோடு சேர்ந்து ஓடப் பார்க்கின்றனர். சிலரிடம் சினிமா பாதிப்பு. வாயில் பின்னணி இசை சப்தம் கொடுத்தபடி ஆள்காட்டி விரல் நீட்டி சொச்ச விரல் மடக்கி துப்பாக்கியால் சுடும் போஸோடு ஓடுகின்றனர்.

ரயில்வே லைனை ஒட்டிய சின்ன காலனி வாசிப் பெண்கள் சிலர் பசங்களின் அந்த விளையாட்டைப் பார்த்து அலறுகின்றனர்.

"நாசமா போனவங்களா... ஓடி விழுந்து வெக்காதிங்கடா."

"சும்மாரு. ரயில்ல திருடன் போறான். பிடிக்கப் போறோம்."

"கிழிச்சீங்க... போய்ப் படிக்கற வழியப் பாருங்கடா..."

சம்பாஷணைகளை காதில் வாங்கியபடியும், சற்று விரைத்த முகத்தோடும் காலனியைக் கடந்து கொண்டிருக்கிறாள் சுசிலா. ரயில்வே லைனைக் கடந்தால் காலனிக்கு எதிர்சாரியில் அடர்ந்த கருவேலங்காடு. காலனிவாசிகளின் கொல்லைப் பகுதி அது. அதன் மையப் பகுதி கடந்தால் திருமணிமுத்தாற்றின் ஒரு சின்ன குறுக்கீடு.

ஒரு காலத்தில் அகலக் கால் விரித்து அலைபாய ஓடிய ஆறுதான் அது. நேர் எதிரில் நிமிர்ந்து பார்த்தால் தெரியும் சேர்வராயன் மலைக் கூட்டத்து மழை நீருக்கெல்லாம் ஒரு போக்கிடமாகவும் கூடவே முத்தையும் மணி



யையும் உருட்டிக் கொண்டும் வந்த அந்த ஆறு. இன்று நாகரீக ஜனக் கூட்டத்தால் திருடப் பட்டு விட்டது! கடல் கூட அலை கைகளோடு சப்தம் போட்டுக் கொண்டிருக்காவிட்டால் அபேலாகியிருக்கும் என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டிருக்கும் அந்த ஆற்றின் காய்ந்த மணல்வெளியில்தான் சாராய ஊறல் கள் பூமியில் புதைக்கப்பட்டிருக்கும். காவலாக ஒரு கூட்டம் சீட்டாடிக் கொண்டிருக்கும். தாமு பெரும்பாலும் அங்குதான் இருப்பான். இன்றும் இருக்கிறான். எதிரில் வந்து நிற்கிறாள் சுசீலா. நிமிர்ந்து பார்க்கும் தாமு "வா சுசீலா" என்கிறான் ஸ்நேகத்தோடு.

"பட்டுத் தறிக்கு நெருப்பு வெச்சிட்டியா முல்லை...?" அவளிடம் ஆவேசம்.

"ஓஹோ... வக்காலத்து வாங்கிட்டு வந்துருக் கியா...?"

"ஏன், கேக்க யாரும் இல்லைன்னு நினைச் கட்டியோ?"

"அதான் நீ வந்துருக்கியே... ஆமா அதுக்கென்ன இப்போ?" - படு எகத்தாளம் தாமுவிடம்...

"ஒண்ணுமில்ல பாராட்டிட்டுப் போலாம்னு வந்தேன்." பேசிக் கொண்டே பக்கத்தில் ஐந்து கருங்கல் வைத்த அடையாளத்தோடு உள்ள மணற்பரப்பைத் தோண்ட ஆரம்பிக்கிறாள்.

"ஏய்... ஏய் எதுக்கு ஊறலை வெளிய எடுக்கறே..."

"உம்... ஊத்தி குடிக்கத்தான். பார்ட்டி தரப் போறேன் தாமு."

"என்ன சுசீ... புதிர் போடறே? கட்சி மாறிட் டியா?" - சந்தேகத்தோடு தாடையைச் சொறி கிறான் தாமு.

"அப்படித்தான் வெச்சுக்கயேன்..." - ஊறல் டின்னை வெளியில் எடுத்து கட்டை மூடியைப் பிடுங்கி எறிந்து விட்டு அதன் பிரட்டியடித்த நாற்றத்திற்காக ஒரு சிலிர்ப்பு சிலிர்ப்புகிறாள் சுசீலா. அதில் சற்று வழுக்க ஆரம்பிக்கிறான் தாமு. ஊற்றித் தர ஆரம்பிக்கிறாள். அவளை விழுங்கியபடியே அதையும் விழுங்குகிறான். காட்டம் அதிகம். போதை வேகமாக ஏற ஆரம்பிக்கிறது. காது மடல் கட்டை போல் விரைத்துக் கொள்கிறது.

"தாமு உன் கைத்தடிகளைக் கொஞ்சம் போகச் சொல்லேன்..." - செல்லக் கட்டளை வேறு சுசீலாவிடம். தாமு புரிந்து கொள் கிறான். அவர்களும் அசட்டுப் பார்வை



# நடந்து வந்த மீன்!

"அந்தமான் மண்ணில் பிறந்தவர்கள், அந்தத் தீவை விட்டு வெளியே வந்து, இந்தியாவின் பிரதான நிலப்பரப்பில் காலடி வைப்பது என்பது வெறும் கனவுதான். காரணம் அந்தமான் மண்ணின் மைந்தர்களது பொருளாதார நிலைமை அத்தகையது! அங்கே விலைவாசி நம் ஊர் விலைவாசியைத் தூக்கிச் சாப்பிட்டு விடும்! கப்பல்மூலம் சரக்கு வரும் தினங்களில் ஒரு விலை; மற்ற தினங்களில் ஒரு விலை விற்கிறது. முட்டைக்கோஸ் விலை கிலோ எண்பது ரூபாய் என்று தெரிந்தபோது எனக்கு பயங்கர ஷாக்!



"அந்தமானின் சில தீவுகளில் வசிக்கும் ஆதிவாசிகள் ரொம்ப அபாயமானவர்கள். நிர்வாணம்தான் அவர்களது உடை.

"ஜாலிபாக் என்ற குட்டித் தீவு ஒன்றுக்குப் போனோம். பவழப் பாறைகளும், வண்ண வண்ண பல சைஸ் மீன்களும் மிக அற்புதம். அப்பகுதியைச் சுற்றிப் பார்க்க ஒரு பிரத்தியேகப் படகு உள்ளது. சுற்றிலும் கண்ணாடி பதிக்கப்பட்ட படகு. படகின் உள்ளே இருந்து, கண்ணாடி வழியே மீன்களையும், இயற்கை அழகையும் ரசிக்க இந்த ஏற்பாடு.

"அந்தத் தீவுக்குப் போய் வரும்போது, எங்களுக்கு மிகவும் அற்புதமான ஓர் அனுபவம். எங்கள் படகு கடல் நீரில் நகர்ந்து கொண்டே இருந்தபோது, படகின்கூடவே, ஒண்ணரை அடி நீள வண்ண மீன் ஒன்று வந்தது. அதுவும் எப்படித் தெரியுமா? வழக்கமான முறையில் அல்ல; செங்குத்தாக நின்று, நீர் மட்டத்துக்கு மேலே தலையைக் காட்டியபடி–கிட்டத்தட்ட நடக்கிற தோற்றத்தில்! அத்தனை எம்.பி.க்களும் அந்த மீனை வியப்புடன் வேடிக்கை பார்த்துக் கொண்டு சுமார் அரை கிலோ மீட்டர் தூரம் பயணம் செய்தோம்!"

– அண்மையில், பாராளுமன்ற உறுப்பினர்கள் அடங்கிய குழு ஒன்று அந்தமான் சென்று வந்தது. அதில் இடம் பெற்றிருந்த அ.தி.மு.க. ராஜ்ய சபா எம்.பி. மணியன் கூறக் கேட்டவர்: மௌனி

---

பார்த்தபடி எழுந்து நகர்ந்து கொள்கின்றனர்.

"ஊறுகா இல்லாம இதக் குடிக்கறது இருக்கே, அது விஷத்தைக் குடிக்கற மாதிரி..." – கையை முறுக்கிக் கொண்டு தாமு அபிப்ராயம் வேறு சொல்கிறான். அவள் திரும்பத் திரும்ப ஊற்றுகிறாள். ஏதோ ஒரு தீர்மானத்தோடு. ஒரு கட்டத்தில் டின் சாராயத்தையே அவன் மேல் அபிஷேகிக்கிறாள்.

"ஏய் என்ன இது... எசகுபிசகா எதை யாவது பண்ணி வைக்காதே! நீ ஒரு டைப்பான பொம்பளை..."

அவளிடம் அதைக் கேட்கவும் சிரிப்பு.

"ஆமா நான் ஒரு டைப்பான பொம்பளைதான்" என்கிறாள் அந்த சிரிப்பு கலையாமல்.

"ஆமா... உன் உயிர் ஸ்னேகிதியோட தம்பியாச்சே அந்த மோகன்ராம். அவனுக்காக என் கூட சண்டை போடுவேன்னு பார்த்தா சாராயத்தை ஊத்திக் கொடுத்து சந்தோஷப் படுத்திறியே..." – கேள்வியோடு எழுந்திருக்கப் பார்க்கிறான். முடியவில்லை. காலிரண்டும் பின்னிக் கொண்டிருக்கிற மாதிரி ஒரு பிரமை.

"என்ன நிக்க முடியலையா?"

"கல்ராயன் மலைச் சரக்காச்சே... மோந்தாலே போதை வருமே... எப்படி நிக்க முடியும்?"

"நல்லது... இதுக்குத்தான் காத்திருந்தேன் தாமு. சோறு போட்ற பட்டுத் தறிக்கா நெருப்பு வெச்சே...? நாயே இப்போ நான் உனக்கு வைக்கப் போறேண்டா..."

பேசிக் கொண்டே தீப்பெட்டியை ரவிக்கை மறைப்பிலிருந்து வெளியே எடுக்கிறாள். அதை உரசு முன்பே தாமு தீப்பிடித்தது போல அவளைப் பார்க்கிறான்.

"நான் முழுக்க நனைஞ்சவ... பொட்டச்சிதானேன்னு உனக்குதான் எவ்வளவு இளக்காரம். மானத்தோட வாழற வரைக்கும்தான் தாமு ஒரு பொம்பளை பசு. அந்தக் கோட்டை தாண்டிட்டா அவளுக்குக் கீழ தாண்டா பூமி. இது தெரிஞ்சதனாலதான் பெரியவங்க கற்பு,

கட்டுப்பாடுன்னு அடக்கி கட்டி வெச்சிருக்காங்க."

"ஏற்கெனவே சினிமா ஆசை காட்டி என் மானத்துக்கு விலை வெச்சவனும் நீதான். என்னை இப்படி ஆக்கினதுல உனக்கும் ஒரு பங்கு உண்டு. அது பழைய கணக்கு. போகட்டும்னு விட்டா ஆட்டக் கடிச்சு மாட்டக் கடிச்சு மனுஷனையே கடிச்ச கதையா என் தம்பிகிட்டையேவா உன் கை வரிசையைக் காட்டுனே... நாயே எரிஞ்சு சாம்பலாகுடா..."

– பற்கள் நறநறக்க, கறுவியபடியே தீக்குச்சியை உரசி அவன் மேல் போடுகிறாள். அலற ஆரம்பிக்கிறான் தாமு. ஆற்று மணலில் விழுந்து புரளத் தொடங்குகிறான். சப்தம் கேட்டு ஒதுங்கியிருந்த அவன் சகாக்கள் ஓடி வருகின்றனர். ஒரு பக்கம் சுசீலா திரும்பி ஓடத் தொடங்க, மறுபக்கத்தில் தாமுவை காப்பாற்றும் முனைப்பு.

அடுப்பில் மரவள்ளிக் கிழங்கு வெந்து கொண்டிருக்க ஈரவிறகுடன் ஒரு உச்சகட்ட போராட்டம் நிகழ்த்திக் கொண்டிருக்கிறாள் மகாலட்சுமி.

"க்கலுக்க..." – ஒருக்களித்து சாத்தப்பட்டிருந்த அந்த குச்சு வீட்டின் கதவை இப்போது யாரோ திறக்கிறார்கள்.

"யார் அது?" – சும்மாட்டுத் துணியும் கையுமாக நிமிரும் மகாலட்சுமி எதிரில் அண்ணன் பரமக்குடி நரசிம்மன். மகாலட்சுமியின் பெரியப்பா மகன். சட்டென்று முதலில் அடையாளம் தெரியவில்லை. ஆனால் போகப் போக தெரிகிறது.

"யாரு நரசிம்மனா... நச்சுவா..."

"ஆமாம் மகா... நரசிம்மனேதான்..." – நரசிம்மனும் நெருங்கி வந்து கூரைக் கண்ணாடியின் சூரியக் கதிர் மேலே படும்படி நிற்கிறான்.

"எப்படி இருக்கே... இப்பத்தான் வழி தெரிஞ்சுச்சா?"

"ஐய்யய்யோ! அப்படி எல்லாம் ஒண்ணுமில்லை மகா. நீ எப்படி இருக்கே... மோகன் எப்படி இருக்கான்... ஆமா மோகன் எங்கே?"

"ஏதோ இருக்கோம். மண்ணுக்கு பாரமா..."

"ஏன் அப்படி எல்லாம் சொல்றே? நாங்கள்ளாம் இல்ல?"

நைச்சியம் பேசும் நரசிம்மனைச் சற்று இளக்கார சிரிப்புடன் பார்த்தபடி மூங்கில் பரணில் சுருண்டு கிடந்த பாயை எடுத்து விரிக்கிறாள். "உக்காந்து பேசு..." என்கிறாள்.

அந்தச் சிரிப்பே அவள் நினைப்பதை சொல்லி முடித்து விட்டது. நரசிம்மனிடமும் சற்று நெருடல். கிட்டத்தட்ட பதினைந்து வருடம் கழித்து வந்து விட்டு "நாங்கள்ளாம் இல்ல...?" என்று கேட்டால் சிரிக்காமல் என்ன செய்வது?

"ஆமா நீ மட்டும்தான் வந்திருக்கியா?" மகாலட்சுமியிடம் இப்போது அடுத்த கேள்வி.

"எல்லாரும்தான் வந்திருக்கோம். மச்சினன் பொண்ணு வயசுக்கு வந்துருக்கால்ல... அதுக்காக வந்தோம். அப்படியே உன்னையும் பாத்துட்டு போலாமுன்னு...."

"அவங்கள்ளாம் எங்கே?"

"வாசல்ல நிக்கறாங்க..."

"அடப்பாவி! வாசல்ல நிக்க வெச்சுட்டா நீ மட்டும் வந்தே? கூப்பிடு அவங்களை உள்ளே..." – மகாலட்சுமியே எழுந்து வெளியே அவர்களை அழைக்கச் செல்கிறாள்.

சென்ற வேகத்தில் ஸ்தம்பித்து நின்று விட்டாள்!

(தொடரும்)



"தலைவரே! கோர்ட்டை அவமதிச்சதா உங்களுக்கு அபராதம் போட்டுட்டாங்களாமே?"

"அதை ஏன் கேட்கற... மீட்டிங் ஞாபகத்துல நாலஞ்சு கெட்ட வார்த்தைகளை பேசிட்டேன்!"

–அம்பை தேவா



"வரவர உடம்பு கூட சாட்டிலைட் யுகத்துக்கு மாறிருச்சு!"

"ஏன்?"

"தூங்கறப்ப வர்ற கனவு கூட 52 வார சீரியலா வருது!"

– அம்பை தேவா

## ஆசை அல்ல, ஆணை

'போகாதே போகாதே எங்கள் தலைவா' பாணியில், பெண்கள் எல்லாம் காரைத் தடுத்து கோஷம் போட்டுக் கொண்டிருந்தார்கள். மரம், செடி, சுவர் எல்லாவற்றிலும் முளைத்திருந்த எண்ணற்ற தலைகள் 'ஜால்ரா' அடிக்க, போலீஸ் விழிபிதுங்க, பாந்த்ரா நீதிமன்றமே அல்லோலகல்லோலப்பட்டது. 'மகாநகர்' பத்திரிகை ஊழியர்களைத் தாக்கிய வழக்கில், சிவசேனை 'ஸுப்ரீமோ' கோர்ட்டில் ஆஜரானார்! 'எங்கள் தலைவர் சட்டதிட்டங்களுக்கு அப்பாற்பட்டவர்' என்ற ரீதியில் கூட்டம் வெறிபிடித்துக் கூக்குரலிட, தாம் நீதிக்குத் தலைவணங்கும் நேர்மையாளர் என்று பறைசாற்ற முயன்றார் திறமைசாலி தாக்கரே! சமயம் பார்த்து வழக்கறிஞர் ஷிரோட்கரும் "கனம் கோர்ட்டாரின் விருப்பப்படி தாக்கரே ஆஜராயிருக்கிறார்" என அவர் பெருமைகளை அவிழ்த்துவிட, மாஜிஸ்திரேட் ஹேராலாம்பே பாட்டீல் இடைமறித்து, "கோர்ட்டாருக்கு தாக்கரேவைப் பார்க்க ஆசை எதுவுமில்லை! அவர் ஆஜராகியிருப்பது கோர்ட்டின் விருப்பப்படி அல்ல, உத்தரவுப்படி!" என்று போட்டாரே ஒரு போடு! தூள்!

## இதற்குமா உண்ணாவிரதம்?

அரசியல் தலைவர்கள் கொண்டு வர, அரசியல்வாதிகள் போராடும் காலம் வந்து விட்டது! சிவசேனை எம்.பி. மோகன் ரவாலேயைப் பாருங்கள்! மும்பையின் முக்கிய கிரிமினல் அருண்காவ்லியை விடுதலை செய்தால்தான் ஆயிற்று என அக்ரிபாடா காவல் நிலைய வாயிலிலேயே உண்ணாவிரதம் இருக்கிறார்! சட்டவிரோத சக்திகளுக்கு அடைக்கலம் தந்ததற்காக NSAவின் கீழ் காவ்லியை கைது செய்ய போலீசார் முனைந்தனர். இந்த நவீன 'ராபின்ஹூட்'டின் தயவில் குளிர்காயும் தாய்க்குலங்களும் பேட்டைவாசிகளும் அவர்களை கேரோ செய்ய, கசமுசா அதிகமாகும் தருவாயில், எம்.பி. தலையிட்டிருக்கிறார். 'காவ்லி கைது பாவ்லாதான்! பெயிலில் விட்டு விடுவோம்' என்று அடிஷனல் கமிஷனர்



• லதா

• தாக்கரே

# சிவசேனைக்காகப் பாடுகிறாரா லதா மங்கேஷ்கர்!

சிறையிலிருந்தால், அவர்களை விடுவிக்க தொண்டர்கள் போர்ராட்டம் நடத்திய காலம் போய், குண்டர்கள் 'உள்ளே' தள்ளப்பட்டால், அவர்களை வெளியே

சுப்பிரமணியம் கொடுத்த வாக்குறுதியின் பேரில், அவனைப் 'பிடித்துத்' தந்திருக்கிறார். ஆனால் காரியம் முடிந்ததும் கையை விரித்து விட்டாராம் கமிஷனர்! கோபத்தில் ரவாலே உண்ணாவிரதமிருக்கிறார்! கொடுத்த வாக்கைக் காற்றில் பறக்கவிடும் உரிமை அரசியல்வாதிகளுக்கே சொந்தம் என்று ரவாலேவை யார் எண்ணச் சொன்னது?



• ஜாக்சன்

தேர்தலில், கிட்டத்தட்ட இருபது வார்டுகளில் வாக்காளர்களின் எண்ணிக்கை, அந்தந்த வார்டுகளின் ஜனத்தொகையைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாயிருந்த அதிசயம் நிகழ்ந்திருக்கிறது! உதாரணமாக, 144வது வார்டின் (காந்திவிலி) ஜனத்தொகை 39889; ஆனால் மொத்த வாக்காளர்கள் 83384! புதிதாக முளைக்கும் குடிசைக் குடியிருப்புகளும், வேலை தேடி வரும் நாடோடிக் கும்பல்களும்தான் இதற்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது. இவர்களுக்கெல்லாம் ரேஷன் கார்டு கிடைக்கும் மர்மம் என்னவோ?

## குயில்பாட்டு

மைக்கேல் ஜாக்சன் ஷோ பாணியில், மீண்டுமொரு 'மெகா' நிகழ்ச்சியை ராஜ்தாக்கரே, தமது 'சிங் உத்யோக் சேனா'வுக்கு நிதி திரட்டும் வகையில் ஏற்பாடு செய்ய இருக்கிறார். இடமும் அதே அந்தேரி ஸ்போர்ட்ஸ் காம்ப்ளெக்ஸ்தான்! இந்த முறை இலவசமாக இசை விருந்து அளிக்கப்போவது இந்தியக் குயில் லதா மங்கேஷ்கர்! ஆனால் உயர்ந்தபட்ச டிக்கெட்டே 300 ரூபாய்தான்! முன்பு 15,000 என்று வைத்துவிட்டு மூக்கறுபட்டது போதாதா?

- ஜெயஸ்ரீ ராஜ்

## மறுபடியும் பாம்பே?

அகில உலக வர்த்தகத்துக்கு இடையூறு ஏற்படாதிருக்க, மும்பையை மீண்டும் பாம்பேயாக்கப் போவதாக மத்திய அரசுச் செய்திகள் வெளிவர, வெகுண்டெழுந்தது மாநில அரசு. 'உயிரைக் கொடுத்தாவது மும்பையைக் காப்போம்' போன்ற வீராவேச சபதங்கள் செய்யப்பட்டன. 'பாம்பே' என்ற பெயரைத் தாங்கி வரும் எந்த மத்திய அறிக்கையையும் கடிதத்தையும் ஏறெடுத்தும் பார்க்க மாட்டோம் என்று சூளுரை வேறு! என்னவோ மூட்டை மூட்டையாக டாலர்களையும் பவுண்டுகளையும் வைத்துக் கொண்டு, அயல்நாட்டவர் இங்கே முதலீடு செய்ய க்யூ வரிசையில் நிற்பது போலவும், 'மும்பை' என்ற பெயர்தான் அவர்களைத் தடுத்து நிறுத்துவது போலவும்... ரீல் விடுவதில், சினிமாக்காரர்களை அரசியல்வாதிகள் விஞ்சி விடுவார்கள் போலில்லை?

## எப்படி இப்படி?

நடந்து முடிந்த மாநகராட்சித்

''ஏன் நீ பிச்சை எடுக்கறே?''

''தர்ம புண்ணிய வதி'ன்னு உங்களுக்கு பெயர் கிடைக்கத்தான், தாயே!''

- பவித்ரா



சேரில் அமர்ந்தபடி ஏதோ டைரியை புரட்டிக் கொண்டிருந்த ரேணுகாவை, அறையின் வாசலிலிருந்து கவனித்தான் ரகு.

ஆறுநாள் முன்பு கைப்பிடித்த ரோஜா. முள்ளில்லாத ரோஜா.

பூனை நடை நடந்து, அவன் பின்புறம் சென்று, புறங்கழுத்தில் முகம் பதித்து உரசினான்.

"ஸ்! கதவு திறந்திருக்கு"

சிணுங்கிய மனைவியை விஷமமாய்ப் பார்த்தான்.

"கதவை மூடிடவா?"

"பகலிலேயேவா? சரியான பெண் டாட்டிதாசன்னு இப்பவே கிண்டலடிக்கறா உங்க அக்கா"

"நம்ம ஹனிமூன் திட்டம்தான். நாளை மறுநாள் கொடைக்கானல் போறோம். அஞ்சு நாள் ஸ்டே. ஜாலிதான்"

அவன் கண் சிமிட்டவும், அவள் முகம் வெட்கத்தில் சிவந்தது.

"உங்களிடம் ஒண்ணு கேட்கணும்"

டைரியைப் பிரித்தபடி சொன்னாள்.

"நாளைக்குக் காலையில எங்க வீட்டுக்குப் போகலாமா?"

"போச்சுடா, அதுக்குள்ளே அம்மா ஏக்கமா?"

"அதில்லை. நாளைக்கு தேதி பதினேழு. ஏப்ரல் பதினேழு"

"அதுக்கென்ன? அடேடே, உங்க வீட்டுல யாருக்காவது பிறந்த நாளா? டைரியைக் கொடு"

வாங்கிப் பார்த்தான்.

"என்ன இது 'நரேந்திரன்'னு போட்டு கழிச்சிருக்கு? யாரு அந்த நரேந்திரன்?"



"அவ கிடக்கா. கல்யாணமான மூணு மாசமும், அத்தானே கதின்னு கிடந்தது எனக்குத் தெரியாதா? என்ன இது மரிக்கொழுந்து வாசனை? உன் மேலேயிருந்தா வருது?"

"ச்சு! என்ன இது, தமிழ்ப் பட ஹீரோ மாதிரி மூக்காலே வாசம் பிடிக்கறீங்க?"

"சேலை கட்டும் பொண்ணுக்கொரு வாசம் உண்டான்னு பார்க்கறேன்"

அவன் மடியிலிருந்து டைரி கீழே விழுந்தது. குனிந்து எடுத்தாள்.

"என்ன எழுதறே டைரியிலே? 'அந்த' அனுபவங்களையா?"

"சீய்ய்!"

டைரியை புரட்டிப் பார்த்தான்.

"என்ன இது? ஏதோ தேதியா போட்டு இனிஷியல் மட்டுமிருக்கு?"

"எனக்கு நெருங்கின உறவுகள், தோழிகளோட பிறந்த நாள், திருமண நாளை எழுதி வைச்சிருக்கேன். முடிஞ்சா நேரில் போய் வாழ்த்துவேன். இல்லேன்னா வாழ்த்து அனுப்புவேன்."

"நல்ல பழக்கம்தான். அடாடா, வந்த விஷயத்தை மறந்துட்டேனே!"

"என்ன?"

"எங்க காலனியிலே குடியிருந்த பையன்"

"பையனா?"

"ஆமாம். இங்கிருந்து ஒரு மணி நேரப் பயணம்தானே எங்க ஊரு. போகலாமா நாளைக்கு?"

கெஞ்சும் குரலில் கேட்டவளை உற்றுப் பார்த்தான்.

அவள் கண்களில் காதலோ, கபடமோ இல்லை. இரக்கம் மட்டுமே தெரிந்தது.

"யார் இந்த நரேந்திரன்? இப்ப எங்கிருக்கான்?"

படபடப்பாய் கேட்டவனுக்கு, உடனே பதில் சொல்லாமல், தரையை வெறித்தாள். டைரியை மூடி வைத்தாள்.

"நீங்க காதலிச்சிருக்கீங்களா?"

மனைவியிடமிருந்து எழுந்த கேள்வி அவனை திடுக்கிட வைத்தது.

"அப்படியானால் ரேணுகா காதலித்திருக்கிறாளா?"

அவன் உடலுக்குள் இயக்கங்கள் 'ட்ராபிக் ஜாம்' ஆயின. முள் உள்ள ரோஜாதானா இவள்?



'அந்த ஏழு நாட்கள்' படம் விர்ரென்று மனசுக்குள் பிரிண்ட் ஓடியது.

"நீங்க இன்னும் பதில் சொல்லலே? உங்களுக்கு காதல் அனுபவம் உண்டா?"

"இல்லை! உனக்கு?"

நடுங்கியது குரல். மூளையின் செல்கள் ஸ்தம்பித்து நின்றன அவன் பதிலுக்கு.

"நானும் யாரையும் காதலிச்சதில்லே"

ஜில்லென்று அருவி பாய்ந்தது அவளுக்குள்.

"ஆனால், காதலிக்கப்பட்ட அனுபவம் உண்டு!"

அருவி நீர் சட்டென ஐஸ் பாறையாய் மாறிப் போனது.

"என்ன சொல்ற ரேணு?"

"நான் காதலிச்சதில்லே யாரையும். ஆனால் நரேன் என்னை உயிருக்குயிராய் காதலிச்சிருக்கான்னு தெரிஞ்சது"

அவளுக்குள் நரேந்திரனின் உருவம் உருவெடுத்தது, பேசும் சித்திரமாய்.

"ரேணுகா, இதோ பாரு"

முழுக்கை சட்டையின் கைப் பகுதியை விலக்கிக் காண்பித்தான், நரேந்திரன்.

ஆங்கில 'ஆர்' எழுத்து பச்சை குத்தப்பட்டிருந்தது.

"ஆர் ஃபார் ரேணுகா" என்று சொல்லி, சிரித்தவனை கோபத்துடன் பார்த்தாள்.

"நரேன், நீ என்ன முட்டாளா? எதுக்கு இப்படி கோமாளி மாதிரி நடந்துக்கற?"

"கோமாளியோ, பேமானியோ, நான் உன் அபிமானி! அனுமார் மாதிரி நெஞ்சைக் கிழிச்சுக் காண்பிக்கவா?"

"எதுக்கு?"

"உன் உருவம் அதுலே தெரியும். நீ பார்க்கத்தான்.

"ரப்பிஷ்!"

"இல்லை ரேணு. என் காதல் தெய்வீகமானது."

"அப்ப ஏதாவது தெய்வத்தைப் போய்

கிருஷ்ணா

காதலி, ஆண்டாள்மாதிரி"

"ப்ளீஸ் ரேணுகா, என் காதலை ஏத்துக்க!"

விடாமல் துரத்தியவளை எரிச்சலுடன் பார்த்தாள்.

"இதோ பாரு நரேன். ட்ரை டு அண்டர்ஸ்டாண்ட் மி. நான் உன்னை காலிக்கலே!"

"அதுதான் ஏன்?"

"நான் விரும்பற ப்ரொஃபைலில் நீ இல்லே. அதாவது என் மனசு உன்னை காதலனாய் ஏத்துக்க மறுக்குது"

"அதுதான் ஏன்? உன் மனசு என்னை ஏத்துக்கணும்னா என்ன செய்யணும், சொல்லு"

மடத்தனமாய் பிடிவாதம் பிடிக்கும் நரேன் மேல் பொசுபொசுவென்று கோபம் பொங்கியது.

"நம்ம ஃப்ளாட்டு மேலே படிவழியா ஏறாமல், பல்லி மாதிரி சுவர் வழியா ஏறிப் போ"

அந்த நாலு மாடி கட்டடத்தை வெறித்தான் நரேந்திரன்.

"அப்படி ஏறி மொட்டை மாடிக்குப் போனால், என்னை ஏத்துப்பியா?"

பதிலேதும் சொல்லாமல் 'விடுவிடு'வென்று நடந்து விலகினாள் ரேணுகா.

"அடுத்து என்ன நடந்தது ரேணுகா? அவன் ஏறினானா?" - ரகு கேட்டதற்குத் தலையசைத்தாள்.

"அரை மணி நேரத்துல அந்த செய்தி கிடைச்சது. அப்ப நான் காலேஜ்லே இருந்தேன்"

"என்னாச்சு?"

"கால் தவறி விழுந்துட்டான் நரேன். மூன்றாவது மாடி ஜன்னலிலிருந்து விழுந்தவன், அங்கேயே...

ரேணுகாவுக்குள் விம்மல் வெடித்தது.

"நான் நரேந்திரனை காதலிக்கலேங்கறது எவ்வளவு உண்மையோ, அதே அளவு நிஜம், நான் அவனை வெறுக்கலேங்கறதும்"

ரகுவும் அதிர்ந்து போய் நின்றான், அந்த விபத்து கேட்டு.

"கிட்டத்தட்ட ஆறேழு வருஷமாய் நானும், நரேந்திரனும் பழகறோம். அடுத்தடுத்த 'டோர்' அந்த ஃப்ளாட்டிலே. எனக்காக, நான் சொன்னேன்ற ஒரே காரணத்துக்காக சுவர் வழியாய் ஏறி, கீழே விழுந்து, உயிர் பிரிஞ்ச அவனை நினைக்கறப்ப, என் மனசெல்லாம் பதறும், நடுங்கும்."

குரல் தழைந்து போய்ச் சொன்னாள்.

"கொஞ்சநாள் பாதி தூக்கத்திலே தூக்கி வாரிப் போடும். 'இப்பவாவது என் காதலைப் புரிஞ்சுக்கிட்டியா'ன்னு நரேன் காது பக்கத்துல வந்து கேட்கற மாதிரி இருக்கும். அப்பாவிடம் சொன்னேன். உடனே வீடு மாறிட்டோம், கொஞ்சம் தள்ளி"

ரகு அவளை அணைத்து தேற்ற முயன்றான்.

"அவனை எப்படி மறக்க முடியும், சொல்லுங்க?"

ரகு அவளை இறுக்கிக் கொண்டான்.

"நிச்சயமாய் மறக்க முடியாது ரேணுகா"

"அவன் செஞ்சது பைத்தியக்காரத்தனம்தான். ஆனால் அதுக்கு நான் காரணமாயிருந்துட்டேனோ? ஒவ்வொரு வருஷமும் ஏப்ரல் பதினேழாந்தேதி, அன்னிக்குத்தான் அந்த நாள், நான் அந்த ஃப்ளாட் வாசலில் நின்னு, அவன் ஆத்மாவுக்காக பிரார்த்தனை செய்வேன். நாம, நாளைக்குப் போகலாமா, ப்ளீஸ்?"

"நிச்சயமாய் ரேணுகா! இந்த வருஷம் மட்டுமில்லே. இனி ஒவ்வொரு வருஷமும், நாம சேர்ந்தே போவோம்" என்றான் ரகு.



"என்னது? கரப்பான் பூச்சின்னா உனக்கு ரொம்பப் பிடிக்குமா?"

"ஆமாம்; அது ஒண்ணுக்குத்தானே என் மாமியார் பயப்படுவாங்க!"



"டாக்டர் அஞ்சாம் நம்பர் பேஷண்ட், ஆபரேஷன் பண்றதுக்கு முன்னாடியே இறந்து போயிட்டார்!"

"ம்... நான் கொடுத்து வெச்சது அவ்வளவுதான்!"

— வி. ரெங்கநாதன்

✉ ஜெவின் வாதத்துக்கு எதிராக ஒரு வாதத்தை வைப்பது சாத்தியமே எனக் குறிப்பிட்டு, ஐடியாவையும் வெளியிட்டுள்ளீர்கள். ஜெ.வின் வாதத்துக்கு எதிர்வாதம் செய்வது என்பது 'மழலை வாதத்துக்கு எதிர் வாதம் பண்ணுவது போல' என்பது முதல்வருக்குத் தெரியும். ஆகவே, முதல்வர் இனிமேல் ஆற்றவேண்டிய கடமைகளை மட்டுமே கருத்தில் கொண்டு செயல்பட வேண்டும்!
திருப்பூர், ப. சங்கர்.

✉ இருபதாயிரம் கள்ள வோட்டுக்கள் போடப் பட்டன என்று ஜெயலலிதா கூறுவது வெறும் கட்டுக்கதை என்பதை தலையங்கத்தில் குறிப்பால் உணர்த்தியிருக்கிறீர்கள்; கூடவே மக்கள் அபிமானத்தைப் பெற ஜெயலலிதா எதுவும் பேசத் தயாராகி விட்டார் என்பதும் புரிகிறது.
மேலகிருஷ்ணன்புதூர், ஆர். கே. லிங்கேசன்.

✉ உமாசங்கர் சர்மாவின் மிக நுணுக்கமான ஓவியத்தைக் கண்டு மிக, மிக பூரிப்படைந்தேன். பாலைவனக் காட்சிகள் – வெயில் உஷ்ணத்தை ஓவியத்தில் காட்டியது அவரின் கைத்திறமையைக் காட்டுகிறது!
வலையப்பட்டி, ஆர். எம். சரவணன்.

✉ 'பெண்கள் மசூதிக்குச் சென்று தொழுகை நடத்தலாமா?' கட்டுரை கண்டேன். எங்கள் ஊரில் கடந்த ஏழு ஆண்டுகளுக்கு முன்னர் இரண்டு தளமுள்ள ஒரு மசூதி கட்டப்பட்டு, அன்றிலிருந்து இன்றுவரை மேல்தளத்தில் பெண்கள் தொழுகைக்காக ஒதுக்கீடு செய்யப்பட்டு, அனுமதிக்கப்பட்டு வருகிறது. பெண்களும் தொழுகைக்காக வந்து செல்கின்றனர்.
நாகூர், டி. என். இமாஜான்.

## மழலை வாதத்துக்கு எதிர் வாதம் ஏன்?

✉ பெண்கள் மசூதிக்குச் சென்று தொழுது வர இஸ்லாத்தில் அனுமதி உண்டு என்று ஜைனுல் ஆபுதீன் யாதொருவருக்கும் சந்தேகம் இல்லாமல் மிகத் தெளிவான ஆதாரம் தந்து பதிலளித்தார். ஒரு விஷயத்தில் சர்ச்சை ஏற்பட்டால் தெளிவான ஆதாரத்துடன் மக்களுடைய சந்தேகத்தைத் தீர்ப்பது மார்க்க அறிஞர்களுடைய ஒரு நல்ல பண்பும் கூட. இதை முக்கியமான நேரத்தில் பிரசுரித்த கல்கிக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
சென்னை – 7, பி.கே. உம்மர்குட்டி.

✉ பரவாயில்லையே! முதல்வர் உஷாராகத்தான் இருக்கிறார் என்பதை அவர் அமைச்சர்களுக்கு விட்ட டோசின் மூலம் தெரிந்து கொள்ள முடிந்தது. இதுபோன்ற சின்னச் சின்ன விஷயங்களில் முதல்வர் கவனம் செலுத்தினால் கண்டிப்பாக இன்னும் சிறப்பான ஆட்சியைக் கொடுக்க முடியும்!
பாளையம், பெ. அமல்ராஜ்.

✉ தினமும் பஸ்ஸில் வேலைக்குச் சென்று வரும் நானும், என் தோழிகளும் கடந்த புதன்கிழமையன்று இடிராஜாக்களின் தொல்லைகள் ஏதுமின்றி நிம்மதியாக பஸ்ஸில் பிரயாணம் செய்தோம். காரணம், அன்று 'இடிராஜாக்களே உஷார்' என்ற தலைப்பு, அட்டைப்படத்துடன் வந்த 'கல்கி' இதழ் எங்கள் கையில் இருந்ததுதான்!
வேலூர் – 6, அ. நிர்மலாதேவி.

## ரூ. 20 பரிசுக் கடிதம்

✉ எஸ்.பி.பிக்கு நடந்த பாராட்டு விழாவில் வாலியின் பாராட்டுக் கவிதையில் – 'கனம் உன் தலையில் இல்லை. நீ கற்ற கலையில் இல்லை' என்ற இடம் எனக்குச் சரியாகத்தான் படுகிறது. பொதுவாக திரை இசையை லைட் மியூசிக் என்று தானே குறிப்பிடுகிறோம்? எஸ்.பி.பியும் கர்நாடக இசையை முறையாகப் பயின்றதில்லை என்று ஒரு பேட்டியில் சொல்லிப் படித்ததாக ஞாபகம். ஆகவே, அந்த 'கனம்' நீ கற்ற கலையில் இல்லாவிட்டாலும் உன் மேதா விலாசத்தினால் வெற்றி பெற்றிருக்கிறாய் என்று சொன்னதாகக் கொள்ளலாமே!
சென்னை – 4, வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி.

✉ 'ஜோக்கணி' நடத்திய பேரணியில் சிக்கி மீள வெகு நேரமானது.
மதுரை-10, பெ. பொன்ராஜபாண்டி.

✉ 'சுஜாதா'வின் 'மாற்றல்' சிறுகதை படித்தேன். அதிர்விலிருந்து மீள முடியவில்லை. சுஜாதாவின் கற்பனைக்கு ஆயிரம் 'நியாயங்கள்' சொல்லப்படலாம். ஆரோக்கியமான சமூகத்துக்குத் தேவைதானா?
சென்னை – 20, சுப்ர.பாலன்.

✉ கணவனும் மனைவியும் உத்யோக நிமித்தம் பிரிந்திருக்கும் நாட்களில் நேரக்கூடிய அபாயங்களை சுஜாதா சுட்டிக்காட்டியிருக்கிறார். கதையில் மனச்சாட்சிக்கு அஞ்சும் பெண்மனமும் அலட்சியப்படுத்தும் ஆண்மகனின் ஆணவமும் பளிச்சிடுகின்றன.
பங்களூர், மாலினி.

வாசகர்களிடம் கேட்டிருந்தது நினைவிருக்கும் : 'காதலர் தினத்துக்கு 'வாலன்டீன்'ஸ் டே' என்று பெயர்வரக் காரணம் என்னவென்று தெரிந்தால் ஜாலியாக எழுதி அனுப்பலாமே...?'

இதோ சில வாசகர்கள் எழுதி அனுப்பியிருக்கிறார்கள்.... பொழுதுபோகாமல் சும்மா ஜாலிக்காக ஆரம்பிக்கவில்லை இந்தக் கொண்டாட்டம் :



# ஆரம்பம் 'ஜாலி'யென்று யார் சொன்னது...?

**செ**யின்ட் வேலன்டைன் ஒரு பாதிரியார். ரோம் நாட்டில் இரண்டாம் கிளாடியஸ் என்பவருடைய காலத்தில் வாழ்ந்தவர். மன்னர் கிளாடியஸ் தம் படையில் இருந்த போர் வீரர்கள் திருமணம் செய்து கொண்டால், தங்கள் வேலையில் அக்கறை செலுத்த மாட்டார்கள் என்று எண்ணி, அவர்களைத் திருமணம் செய்ய அனுமதி அளிக்க மாட்டார். ஆனால், வேலன்டைன் அவர்களுக்கு ரகசியமாகத் திருமணம் செய்து வைத்தார்.

இந்தத் தவறுக்காக அவரை மன்னன் சிறையில் அடைத்தான். அங்கே வேலன்டைன் ஜெயிலரின் மகளைக் காதலித்தார்! அவருக்கு மரண தண்டனை அளித்த நாளில், தம் காதலிக்குச் சிறு கடிதம் எழுதி, 'உன் வேலன்டைன்' என்று கையெழுத்திட்டார். அந்த நாளே இப்போது "செயின்ட் வேலன்டைன் டே" என்று கொண்டாடப்படுகிறது.

– எஸ்.வி. முத்துக்குமார், கல்லிடைக்குறிச்சி.

*இதே விளக்கம் அளித்துள்ள பிற வாசகர்கள் : லட்சுமி வாசன், சென்னை – 33; வ. திருநாவுக்கரசு, தென்காசி அஞ்சல்; எஸ். ஜானக், லால்குடி; பி.ஜி.பி. இசக்கி, டி. மாரியூர்; சிவகவி காளிதாசன், ஆவுடையார்கோவில்; கே.ஆர். ராஜா, சென்னை – 15; ஆர். ஜான்சி ராணி, சென்னை – 15; வி. பானுமதி, பூனே; வெ. ச. நிவேதிதா, சென்னை – 94; டேவிட் மகிழ் வேனி, மதுராந்தகம்; இலட்சுமி ராஜ், சென்னை – 28; சா. ஜெயந்தி, சென்னை – 71; பி. தனிவி, தென்காசி.*

**ப**றவைகள் இந்த தினத்தில்தான் இணையோடு கூடி இனப்பெருக்கத்தை ஆரம்பிப்பதாக இதையொட்டிய மற்றுமொரு பரவலான நம்பிக்கை இன்றும் இருந்து வருகிறது.

12-ம் நூற்றாண்டில் Pusy d'Amour என்ற பாடல் விழாவும், காதல் பாட்டுக்கான போட்டியும் ஐரோப்பிய நாடுகளில் இந்த தினத்தில் நடத்தப்பட்டு, காதலர் விழாவாக கொண்டாடப்பட்டது.

(ஆதாரம் : The Saint Companions for each day)

– ரெமி சேகர், சம்பல்பூர்.

*இதே விளக்கத்தை எழுதிய பிற வாசகர்கள்: எஸ்.என்.ஆராவமுதன்,செகந்திராபாத்; ஜி.வெங்கடேசன், மதுரை - 3; வே. த.கோபால், சென்னை - 91.*

**வே**லியன்ட் (Valiant) டே என்பதுதான் நாளடைவில் மருவி வேலன்டின் டே என்று ஆகியிருக்கிறது. காதலர்கள், காதலர்கள் என ஆக, தைரியம், வீரம், துணிவு மூன்றும் தேவை. இம் மூன்றும் அடங்கிய செய்கைக்கு Valiant என ஆங்கிலத்தில் பெயர்.

அ. சம்பத், ஸ்ரீரங்கம்.

**வா**லென்டைன் தினத்தோடு தொடர்புடைய சடங்குகள் எல்லாம் பண்டைய ரோமப் பண்டிகையான 'லூபர்காலியா'வோடு தொடர்புடையதாக இருக்கிறது. இந்தப் பண்டிகை ரோம கருவள தேவதையாகிய (Fertility God) லூபர்கஸுக்காகக் கொண்டாடப்பட்டது. அத்தோடு ரோமர்களின் பிரதான தெய்வமாகிய ஜுபிட்டரின் மனைவியாகிய ஜுனோவும் (Juno) மகிமைப்படுத்தப்பட்டாள். இவள் பெண்மை மற்றும் திருமணத்தின் அதிதேவதையாவாள். இந்தப் பண்டிகை பிப்ரவரி மாதம் 15-ம் நாள் கொண்டாடப்பட்டது.

தாய்மைப் பரிவோடு கூடிய அன்பும், சுயநலமற்ற தியாக உள்ளமும் வாழையடி வாழையாக வாழுகிற திருமண நோக்கமுந்தான் காதலுக்கு அடிப்படை என்பதால், இந்தக் கூறுகளையெல்லாம் உள்ளடக்கிய வாலென்டைன் தினம், பிற்காலத்தில் காதலர் தினமாகப் புதிய அவதாரம் எடுத்திருக்கிறது.

(உலக கலைக் களஞ்சியம்)

– இன்பவசந்தன், திருச்சி – 22.

● பாலாஜி, குடந்தை - 1.

*? சித்துவை மீண்டும் அணியில் சேர்த்துள் ளதால் இந்தியா வலிவு பெற்றுவிடுமா?*

! சித்துவுக்கு 'பெஸ்ட் ஆஃப் லக்' சொல்லி வரவேற்கலாம் என்றாலும் ஆட்டக்காரர்கள் தேர்வு, பயிற்சி, எதிராளிகளின் குறைநிறை களைக் கணிக்கும் ஆற்றல், மனோதிடம், 'டீம் ஸ்பிரிட்' என்று பல வகையிலும் நமது அணி முன்னேற வேண்டியிருக்கிறது.

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

*? சமீபத்தில் படித்த மறக்க முடியாத ஒரு வரிச் செய்தி...?*

! '''ஹிந்துத்வா' என்பது மதச்சார்புள்ள கொள்கை அல்ல.'' - தமிழ்நாட்டுக்கு வந்திருந்த பி.ஜே.பி. தலைவர் சிகந்தர் பக்த் கூறியது. அப்படியானால் அந்த வார்த்தையை மூச்சுக்கு முந்நூறு தடவை உச்சரிப்பானேன்...! அதை ஒதுக்கிவிட்டுச் செயல்பட்டால், சந்தேகங்கள் தீர்ந்து சிறுபான்மையினர் ஆதரவையும் தடையின்றிப் பெறலாமே...! - கேட்காமல் இருக்க முடியவில்லை.

● சூர்யநிலா, சேலம்.

*? அ.தி.மு.க. மீண்டும் ஆட்சிக்கு வந்தே தீரும் என்கிறாரே திருநாவுக்கரசு?*

! நாற்பத்தொன்பதாவது பிறந்த நாளுக்கு நாற்பத்தொன்பது கிலோ எடையுள்ள கேக் வெட்டுதல்; நள்ளிரவில் பிரியாணி பொட்டல வினியோகம்; தீ மிதி; என்று நடந்தவற்றையெல் லாம் பார்த்தால், இன்னும் பழைய நினைவு களிலேயே அ.தி.மு.க. தலைமை இருப்பதாகத் தான் தெரிகிறது. எனவே, இந்த ஆட்சிக்கு மீண்டும் வாய்ப்புத் தந்து, லஞ்ச-ஊழல் மீண் டும் விசுவரூபமெடுப்பதை அனுமதிக்க வேண் டுமா என்று மக்கள்தான் தீர்மானிக்க வேண் டும்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? ப்ரியங்காவின் திருமணம் பற்றி டி.வி., வானொலி மூச்சே விடவில்லையே...? - இது சரியா?*

! எளிமையாக நடந்தால் ஏக்கப் பெருமூச்சு விடுகிறீர்கள்; ஆடம்பரமாக நடந்தால் 'அடுக் குமா?' என்கிறீர்கள்.... இது உங்களுக்கே நியா யமா சொல்லுங்க...!

# 'தெலுங்கு தேசம்' கட்சிக்கும்

● புளியரை கணேசன், சென்னை - 30.

*? ஒரிசா ஆன்மிக மாநாட்டில் தீ விபத்து ஏற்பட்டபோது தீயணைப்பு வண்டிகளை இயக்க ஆளில்லையாமே?*

! இதுபோன்ற தீ விபத்து நடப்பது இது முதல் முறையல்ல... கடந்து போன சம்பவங்களி லிருந்து மாநில அரசுகள் பாடம் பெறவில்லை; பெரிய கூட்டங்கள் மாநாடுகளின் போது தீ விபத்துகள் ஏற் படாமலிருக்க போதிய முன் னெச்சரிக்கை, பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப் படுவதில்லை; விதிமுறைகள் கடுமையாக்கப்படவில்லை என்பதுதான் வெட்கக் கேடு!

● ஆர். எம். சரவணன், வலையப்பட்டி.

*? தற்போது வரும் திரைப்படங்களில் நிறைய ஆங்கில வார்த்தைகள் வருகின் றனவே...?*

! அதாவது பரவாயில்லை; சில பாடல்களில் வருபவை என்ன மொழிச் சொற்கள் என்றே கண்டுபிடிக்க முடிவதில்லையே!

● வி. சத்தியப்ரியன், சென்னை - 15.

*? தெலுங்கு தேசம் கட்சிக்கும் கருணாநிதி தான் தலைவர் என ஆந்திர முதல்வர் சந்திர பாபு நாயுடு சொல்கிறாரே...?*

! கௌடா கூட இப்படித்தான் - இங்கே வந்த போது, 'மத்தியிலும் உங்கள் ஆட்சிதான்' என்று பேசினார்! நம்மவர்களையும் மிஞ்சும் 'ஐஸர்'கள் இருக்கத்தான் செய்கிறார்கள்!

● எஸ். சேகர், திருவாரூர்.

*? ஜெயலலிதாவின் தனிச்சிறப்பு அல்லது ஆற்றல் என்று எதைச் சொல்லலாம்?*

அலுக்காமல் அறிக்கைகள்!

● பி. ஜெயப்பிரகாஷ், சேத்துமடை.

*? 'நான் முழுமையான அரசியல் வாதி அல்ல. அரசியலில் நான் இருக் கிறேன் - அவ்வளவுதான்' - தமிழ்க்*

• எச்சரிக்கை...!



• தமிழ் அரசியல்



• ஹிந்துத்வ விளக்கம்



• வழு வருமா?



# கருணாநிதிதான் தலைவராமே?



• ஏக்கப்...



• ...பெருமூச்சு!



• ஜஸ்!

குடிமகன் இப்படிச் சொன்னதற்கு என்ன அர்த்தம் சார்?

! என்ன அர்த்தத்தில் சொன்னாலும் சரி, தமிழை வைத்துக் கொண்டு துல்லியமாய் அரசியல் பண்ணத் தெரிகிறதே அவருக்கு - அது போதாதா!

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

? 'ஜெ'வால் முதுகுவலியுடன் எப்படி அறிக்கை வெளியிட முடிகிறது? என்று கலைஞர் கிண்டலுடன் கேட்கிறாரே?

! 'முதுகு வலியா? குணம்பெற பிரார்த்திக்கிறோம்' என்று முன்னர் சொன்னவர், பிறகு கோபத்தில் தடுமாறிப் பேசிவிட்டார்! மருத்துவமனையிலிருந்தபடி அறிக்கை விட இயலாதா என்ன...? அறிக்கை நம்பும்படி இருக்கிறதா என்பதுதான் கேள்வி.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? ஜாதி-மத கலவரங்களைத் தடுக்க காவல் துறையில் தனியாக விரைவு போலீஸ் படைப் பிரிவு அமைக்க முதல்வர் உத்தரவிட்டுள்ளது பற்றி...?

! மதுவிலக்குப் பிரிவு, லஞ்ச ஊழல் ஒழிப்புப் பிரிவு, வி.ஐ.பி. பாதுகாப்புப் பிரிவு என்று ஏற்கெனவே சட்ட - ஒழுங்கு தவிர ஏகப்பட்ட பிரிவுகள். இன்னும் எத்தனையெத்தனை பிரிவுகள் தேவைப்படுமோ! 'மூன்றாவது கண்' நூல் வெளியீட்டு விழாவில் பேசிய சி.வி. நரசிம்மன் சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது: 'காவல் துறையை எதிர்நோக்கியிருக்கும் நாட்கள் சவால்கள் நிறைந்தவை. காரணம், குற்றங்கள் எல்லாமே வன்முறையுடன் இணைந்தவனாய் இருக்கும். இதனை எதிர்கொள்ள, காவல் துறை மாற்றங்களுக்கு உட்பட வேண்டும்.'

● கி. முருகன், மாப்பிள்ளைக்குப்பம்.

? அன்று அண்ணாதுரை 'திராவிட நாடு' கொள்கையை விட்டதற்கும் இப்போது கருணாநிதி விடுதலைப் புலிகளுக்கான ஆதரவுக் கொள்கையை விட்டதற்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமை என்ன...?

! அந்தக் காலத்தில் அண்ணா கைவிட்டதால் நல்ல பெயர். இப்போது கருணாநிதி கைவிட்டும் நல்ல பெயர் பெற முடியவில்லை. புலிகளிடம் அனுதாபம் என்பது உள்ளீடாக இன்னமும் சில கட்சிகளிடம் உள்ளது. அதை முதல்வர் வெளிப்படையாகக் கண்டிக்கத் தயங்குகிறார். அதனால் அவருடைய நிலை நம்பிக்கையூட்டுவதாயில்லை.

● கு. அருணாசலம்,
தென்காசி. ❑



• ரூப்பா ஜஸ்...

? பக்திக்காகக் கோவிலுக்குச் செல்பவர்களை விட பகட்டுக்காக கோவிலுக்குச் செல்பவர்கள் அதிகமாகி விட்டனரே?

! இருக்கலாம். ஆனால் நாம் ஏன் பகட்டையே பார்க்க வேண்டும்...? நாம் பக்தியோடு போனோமானால் பிற பக்தர்கள் நம் கண்ணில் படுவார்கள். சமீபத்தில் கபாலீசுவரரை தரிசிக்கப் போனேன். ஈச்வரன் சன்னதியை நெருங்கியபோது மூன்று பெண்கள் 'பொன்னார் மேனியனே' பாடிக் கொண்டிருந்தார்கள். யார் கேட்கிறார்கள், யார் பார்க்கிறார்கள் என்கிற உணர்வெல்லாம் இன்றி, அப்படியே சுருதி சுத்தமாக உருகிப் பாடக் கேட்டபோது கண்ணில் நீர் துளித்து விட்டது. கருவறையை எட்டும் முன்பே சுவாமி தரிசனம் ஆனதுபோல் இருந்தது.

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

? நூலகத் துறையினால் வாங்கப்படாத 'வேதபுரத்து வியாபாரிகள்' நாவல் பாரதிய பாஷா பரிஷத் விருது பெற்றுள்ளது பற்றி...?

! ஜெயலலிதா ஆட்சியை அங்கதச் சுவையுடன் வர்ணித்து விமர்சித்த அந்த நாவலை அவர் ஆட்சியில் வாங்குவார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? இந்த ஆட்சியில் வேண்டுமானால் ஒருவேளை வாங்கப்படலாம்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
கு. அருணாசலம்,
எம்-109, வீட்டு வசதி வாரியம்,
தென்காசி- 627 811.



# ஆண்கள் காபரே!

●● அரை வெளிச்சம் வழியும் அறை. தோசைக் கல் மேசைகள், குட்டை நாற்காலிகள். அலறும் இசைக்கு நடுவே ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம். இசை உச்சத்துக்குப் போகப் போக, ஆடுபவர் தம் ஆடைகளை அவிழ்க்கத் தொடங்குகிறார். செவிப்பறை கிழியும் விசில். இதில் என்ன புதுமை? காபரே தெரியாதா என்று கேட்பவர்கள் கவனத்துக்கு. ஆடை அவிழ்ப்பாளர், ஆண்! விசில் புரட்சியாளர்கள் - பெண்கள்! ஜப்பானில் அதிவேகமாகப் பரவி வரும் ஆண்கள் காபரே ஜுரம் பற்றி வெகுவாகக் கவலைப்பட்டு பிபிஸியில் ஓர் அதிகாலை அரைமணி நேர ரிப்போர்ட் காட்டினார்கள். இந்த அனாசாரத்தை உடனடியாகத் தடைசெய்யக்கோரி, ஜப்பானில் சில பொதுநல அமைப்புகள் அரசுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கின்றனவாம். ஆனால் பெண்கள், "இது எங்கள் சுதந்திரம், தடைசெய்தால் போராடுவோம்" என்று போல்டாக பேட்டி கொடுக்கிறார்கள். வாழ்க, பெண்கள் சமத்துவம்.

●● வெள்ளிக்கிழமை இரவு முழுவதும் எந்த சேனல் திருப்பினாலும் பட்ஜெட். டிடியில் இந்திக்காரர்கள், இந்தி தெரியாத சிதம்பரத்தைக் கூட்டி வைத்துக் கொண்டு ஆங்கில - இந்தி மணிப்பிரவாளத்தில் இம்சிக்க, ஸ்டார் பிளஸ்ஸில் பிரணாய் ராய் வெளுத்து வாங்கிக் கொண்டிருந்தார். தூர்தர்ஷனோடு லடாய் என்பதால்தான் ஸ்டாருக்குப் போக வேண்டிய சூழ்நிலை பிரணாய்ராய்க்கு. அதனால், நெட்வொர்க் வசதிகள் அத்தனை சிலாக்கியமாக இல்லை. பேட்டிகளை ரெக்கார்ட் செய்து கூடியவரை உடனுக்குடன் தந்து கொண்டிருந்தார். அதில் காண்பிக்கப்பட்ட, வருவாய்த் துறைச் செயலாளர் என்.கே. சிங்கின் பேட்டியை யாராவது முழுமையாக எடுத்து, பத்திரிகைகளில் வெளியிட்டால் ரொம்பப் புண்ணியம். அத்தனை துல்லியமான அலசல். சொந்த கார், டெலிபோன், வீடு வைத்திருப்போர்கள் கட்டாயமாகக் கணக்கு காட்டியாக வேண்டிய சூழ்நிலையை சிதம்பரம் உருவாக்கியிருப்பதைக் குறிப்பிட்டு அலசுகையில், புளகாங்கிதம் அடைந்து போனார்!

●● விஜய் டீவியில், விடிந்தால் போதுமென்று டஜன் டஜனாக மாமிகள் கோஷ்டி கானம் பாட ஆரம்பித்து விடுகிறார்கள். சுருதி சேராமல், ரெக்கார்டிங்கிலும் துல்லியமில்லாமல், கேட்க நாராசமாக இருக்கிறது. சனிக்கிழமை காலை பாடிய கோஷ்டியில் யாரோ ஒருவருக்குத் தொண்டைக்கட்டு வேறு. சகட்டுமேனிக்கு உச்சஸ்தாயியில் இழுக்க, தகர பிளேட்டில் பிளேடால் கீறியது போல படு இம்சை. ஒருவர் அல்லது இருவர் பாடினால் போதாதா? டிடி போல நல்ல கச்சேரிகளை ரெக்கார்டு செய்து போட்டாலாவது புண்ணியம்! மாதர் சங்கப் பெண்மணிகளுக்கெல்லாம் வாய்ப்புக் கொடுக்க நினைக்கிற நல்ல உள்ளம் சரி; அதற்கு ஏதாவது சமையல், அழகுக் குறிப்பு நிகழ்ச்சிகளில் தரலாம். பாடவைத்துப் படுத்துவது நியாயமில்லை.

●● இசை சேனலில் Design the dreams என்ற பாட்டை இந்த வாரத்திலேயே இரண்டு, மூன்று முறை காண நேரிட்டது. ஒரு பெண்ணின் இடுப்புக்குக் கீழே முழுவதும் வயலினின் மேல் பகுதி மாதிரி ஆகிவிட, கிராஃபிக்ஸில் தந்திகள் தாமாக அதிர, மென்மையாகத் தொடங்கி, கதி கூடி, உச்சக்கட்டத்தை அடையும்போது சிலிர்த்துப் போகிறது. அந்த வடிகட்டின மேற்கத்திய இசைப் பாடலை உற்றுக் கவனித்தால் மாயாமாளவகௌளை! இளையராஜாவுக்கு செந்தாழம்பூவில் வந்தாடிய அதே தென்றல்!

●● புலிகளின் வேட்டையாடும் சாமர்த்தியத்தை வட்சத்து எட்டாவது தடவையாக இந்த வாரம் ஒளிபரப்பியதோடு நிறுத்திக் கொண்டால் டிஸ்கவரிக்கு ஒரு சாஷ்டாங்க நமஸ்காரம். அருவருப்பு தாங்க முடியவில்லை. ஒரு மானை அது மசால் தோசை மாதிரி பிய்த்து உண்பதை டைட் குளோஸப்பில் ஒவ்வொரு முறை பார்க்கும்போதும், அன்று பட்டினி கிடக்க வேண்டியிருக்கிறது. தூக்கத்தில் அதே புலி நம்மைத் துரத்துகிறது.

- 'டிஷ்'

# எச்சரித்தால் மட்டுமே போதாது!

'எய்ட்ஸ் கிருமிகளை ஊசிமூலம் செலுத்தும் வக்கிரம்...!' என்று சென்னை நகரமே பீதியில் மூழ்கியது சில நாட்களுக்கு.

இதெல்லாம் சாத்தியமில்லை. எய்ட்ஸ் கிருமியின் ஆயுள் மிகக் குறைவு. அதாவது, விஞ்ஞான முறைப்படி அல்லாமல் சாதாரணமாக உடலிலிருந்து வெளியே எடுக்கப்படுகிற ரத்தத்தில் உள்ள எயிட்ஸ் கிருமிகள், சாதாரண வெளி வெப்பம் பட்டாலே இறந்து போய்விடும். இந்நிலையில் அதைக் கையில் வைத்துக் கொண்டு சாவகாசமாய் லிஃப்ட் கேட்டு பயணத்தின் போது ஊசி மூலம் ஓட்டுனருக்குச் செலுத்துவது என்பதெல்லாம் வெறும் புரளி என்று விளக்கம் அளித்து பயம் போக்கியிருக்கிறார்கள் மருத்துவர்கள்.

எய்ட்ஸ் எந்தெந்த வகைகளில் பரவக்கூடும் என்று தெளிவான விளம்பரங்கள் வந்து கொண்டிருக்கும்போதே இத்தனை பீதியும் குழப்பமும்!

இதற்கெல்லாம் காரணம் என்ன...?

எய்ட்ஸ் உடலுறவு மூலமாகப் பரவும் நோய் என்பதால் அது குறித்த கியூரியாஸிடி மனிதனுக்கு அதிகம். அதே காரணத்தால் பத்திரிகைகளுக்கும் அது சரியான அவல். சின்னச் சின்ன செய்திகளை ஊதிப் பெரிதாக்குவதும்; விகாரப்படுத்தி பரபரப்புத் தேடுவதும் பொறுப்பற்ற பத்திரிகைகளுக்கு வாடிக்கையாகி விட்டது.

பத்திரிகைத் துறை மட்டுமின்றி, காவல் துறையும், மருத்துவத் துறையும், சமூகநல அமைப்புகளும், அரசாங்கமும் இந்தப் பிரச்னை குறித்து நின்று யோசித்தே ஆக வேண்டும்! எய்ட்ஸ் அதிகமாகப் பரவியிருப்பதாகச் சொல்லப்படும் குடியாத்தம் பகுதிக்கு நாம் அண்மையில் போயிருந்தபோது ஏற்பட்ட அனுபவங்களும் இதையே உணர்த்தின.

குடியாத்தம் வட்டாரத்தில் ஐந்து தனியார் கிளினிக்குகளுக்குச் சென்று விசாரித்தோம். 'இங்கே எய்ட்ஸ் பரிசோதனை செய்யப்படும்' என்று லேப் வாசலில் பெரிய போர்டுகள்!

கடந்த இரண்டு ஆண்டுகளில் நாற்பத்தைந்து நபர்களுக்கு எச்.ஐ.வி. பாஸிடிவ் கிருமிகள் இருப்பதாக இங்கு நடத்தப்பட்ட பரிசோதனைகள் உறுதிசெய்தனவாம். ஒரு பரிசோதனைக்கூடத்தில் மட்டும் கடந்த ஓர் ஆண்டில் ஆறு கேஸ்கள் பதிவாகியிருக்கின்றனவாம்.

பாதிக்கப்பட்டோருள் என்பது சதவிகிதத்தினர் ஆண்கள்; பெரும்பாலும் கல்வியறிவு இல்லாதவர்கள். பாதிக்குப் பாதி டாக்டர்கள் அறிவுரையின் பேரில்தான் பரிசோதனைக்கு வருகிறார்கள். அறுபது முதல் 125 ரூபாய் வரை செல



வழித்துப் பரிசோதனை செய்து கொள்கிறார்கள்.

இந்தப் பரிசோதனைக் கூடங்கள் முறையாக இயங்குகின்றனவா? எய்ட்ஸுக்கான பரிசோதனைகள் சரியாகச் செய்யப்படுகின்றனவா என்று கண்காணிக்க வேண்டியது மிகவும் அவசியம்.

எய்ஸ்ட் இருப்பதை உறுதி செய்ய ஒன்றுக்கு மேற்பட்ட பரிசோதனை முறைகள் இருக்கின்றன. அவற்றுள் எது சிறந்தது என்பது குறித்து ஏகோபித்த கருத்து இல்லை. ஒருசில பரிசோதனைகளில் போலி முடிவு (false positive) வரவும் வாய்ப்பு இருக்கிறது. இதையெல்லாம் உடனடியாக முறைப்படுத்த வேண்டும்.

இதைத் தவிர, இந்தப் பரிசோதனைக் கூடங்களால் எய்ட்ஸ் உள்ளதாக அறிவிக்கப்படும் நபர்கள் குறித்த விவரமும் அரசாங்கத்துக்குத் தெரிவிக்கப்பட்டு, அவர்களுக்கு முறையான சிகிச்சையும் மனவளப் பயிற்சியும் அளிப்பது மிக மிக அவசியம்.

இதற்கு முறையான விதிகளோ வழிகாட்டலோ இதுவரை உருவாக்கப்படவில்லை என்பது கவலைக்குரிய நிலை.

● எதை எந்த அளவுக்கு விமர்சிப்பது என்பது பெரிய கலை. உங்கள் நண்பனின் தோள் மேல் அமர்ந்திருக்கிற ஈயை விரட்ட கோடாலியை வீசி விடாதீர்கள்!

- ஓர் அறிஞர்

தகவல் : எஸ். எஸ். பூங்கதிர்

மாறாக, இந்த வட்டாரங்களில் நடப்பது என்ன...?

தனியார் அமைப்புகள், சமூக சேவை என்கிற பெயரில் பரிசோதனைக் கூடங்களை மொய்த்து எய்ட்ஸ் பாதிப்புக்குள்ளானவர்கள் குறித்த விவரம் (பெயர், முகவரி) பெறுகின்றன. அந்த நபர்களை அணுகி உதவி அளிக்க முன் வருகின்றன.

இவ்வாறு செயல்படும் ஒருசில அமைப்புகளுக்கு உண்மையில் நல்ல நோக்கமும் விஞ்ஞானரீதியான, மனோதத்துவரீதியான அணுகுமுறையும் இருக்கலாம். ஆனால் பெரும்பாலான அமைப்புகள் பிரச்னையை முழுமையாய்ப் புரிந்து கொள்ளாமல் செயல்படுகின்றன. இதனினும் கேவலம், ஒருசில அமைப்புகள் இந்த 'சேவை'யின் மூலம் தங்களுக்குப் பெரிய அளவில் விளம்பரம் தேடிக் கொள்கின்றன. அதனினும் மிக மிகக் கேவலம், ஒருசில நேரங்களில் எய்ட்ஸ் நோயாளிகள் குறித்த செய்திகளைப் பத்திரிகைகளுக்குச் சுலபமாகக் கிடைக்கச் செய்து, அவருக்கு நிரந்தரமான தலைகுனிவை ஏற்படுத்துகின்றன. சம்பந்தப்பட்ட நோயாளிகள் படிப்பறிவு இல்லாதவர்கள் என்பதால் எளிதாக ஏமாந்து போகிறார்கள். 'அரசாங்க உதவி பெற்றுத் தருகிறேன். உன் குடும்பத்தோடு புகைப்படம் அதற்குத் தேவை' என்று சொல்லி, படம் எடுக்கச் செய்து அதை பத்திரிகைக்குக் கொடுத்து பரபரப்பாக்கியிருக்கிறார் ஒரு 'தொண்டர்'! இச்சம்பவத்தால் பாதிக்கப்பட்ட நோயாளி ஒரு லாரி டிரைவர். அவர் குழந்தைகளும் படத்தில் இடம்பெற்றிருப்பதால் அக்குழந்தைகளின் எதிர்காலமே பாதிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வாறு ஆர்வக் கோளாறினாலோ விளம்பர வேட்கையினாலோ, தனியார் அமைப்புகள் செயல்பட, பத்திரிகைகளும் பரபரப்புக்காக எதற்கும் துணிய, எய்ட்ஸ் நோயாளிக்குப் பெரிய அநீதி இழைக்கப்படுகிறது.

இந்த நிலைக்கு இன்னொரு காரணமும் இருக்கிறது. 'தப்பு செய்தால்தானே எய்ட்ஸ் வந்தது. அதனால் அந்த நோயாளிக்கு அனுதாபமோ, அனுசரணையோ தேவையில்லை' என்கிற உயர் மனோபாவம்.

குடியாத்தத்தில் நாம் சந்தித்த பலர் இந்த மனோபாவத்துடன் காணப்பட்டார்கள். ஒரு காவல் துறை அதிகாரி, 'அந்த லாரி டிரைவர் (மனைவியை இழந்தவர்) வேற கல்யாணம் பண்ணிக்கிட்டா எவ்வளவு அபாயம்!' என்று கேள்வி எழுப்பினார்.

இந்தக் கேள்வி நியாயம்தான். ஆனால், அதற்காக எய்ட்ஸ் பாதித்தவர்களையெல்லாம் படம்பிடித்து, பத்திரிகையில் வெளியிட்டால் தான் அவர்கள் மூலம் அது மேலும் பரவாமல் தடுக்க முடியும் என்று சொல்வது அபத்தம். பாதிக்கப்படுபவர்கள் அனைவருமே வக்கிரமானவர்களோ, செக்ஸ் குற்றவாளிகளோ அல்ல.

இவர்கள் மூலம் நோய் மேலும் பரவாமல் காத்தாக வேண்டும். அதே சமயத்தில் இந்த நபர்களின் தனிமனித சுதந்தரமும் உணர்வுகளும் மதிக்கப்பட வேண்டும்.

## தீர்வு என்ன...?

அனைத்திந்திய அளவிலும் மாநில அளவிலும் எய்ட்ஸ் பரிசோதனை செய்வதற்கான அங்கீகாரம், சிறந்த லேப்களுக்கு மட்டுமே வழங்கப்பட வேண்டும். சுகாதாரத் துறையில் ஒரு தனிப் பிரிவு ஆரம்பிக்கப்பட்டு, அந்தத் துறை இந்த அங்கீகாரம் பெற்ற பரிசோதனைக் கூடங்களைக் கண்காணிக்க வேண்டும். பரிசோதனை விவரங்களைப் பாதுகாப்பாய் வைக்க வேண்டும். எச்.ஐ.வி. பாஸிடிவ் பதிவுகள் உடனுக்குடன் அரசின் இந்தச் சிறப்புப் பிரிவினுடைய பார்வைக்கு வர, சமூகநல ஊழியர்கள் (தனியாரையும் முறையான பயிற்சி அளித்து சேர்த்துக் கொள்ளலாம்) நோயாளிகளை அணுகி அவருக்கும் அவர் குடும்பத்தினருக்கும் விஷயத்தை எடுத்துச் சொல்லி, சிகிச்சைக்கும், அறிவுரைக்கும் (கவுன்ஸலிங்) ஏற்பாடு செய்ய வேண்டும்.

இந்த நோயாளிகளை சதா கண்காணித்து அவர்கள் மூலம் மேலும் எய்ட்ஸ் பரவாமல் காப்பது என்பது நடைமுறை சாத்தியமல்ல. அதற்குப் பதிலாகத்தான் அரசாங்கம் எய்ட்ஸ் குறித்த எச்சரிக்கை விளம்பரங்களையும் அறிவிப்புகளையும் வெளியிட்டு வருகிறது.

ஆனால் இவ்வாறு எச்சரிப்பதுடன் அரசின் கடமை முடிந்து விடாது. பாதிக்கப்பட்டவர்களின் நலனையும் மனத்தில் கொண்டு அரசு உடனடியாக திட்டங்கள் வகுக்காவிட்டால் அரைவேக்காட்டு சேவை அமைப்புகளும், ஆர்வக் கோளாறு நிறுவனங்களும், பரபரப்புப் பத்திரிகைகளும் சேர்ந்து நிலைமையை மேலும் சீர்குலைத்துவிடும்.

**- மு. சிவலிங்கம்**

*(கரிகாலன் உதவியுடன்)*

# தேரோட்டம்

வி.கே. ராமசாமி

9

இந்த முறை என் அப்பா வந்தது, என்னை ஊருக்குக் கூட்டிப் போக அல்ல. 'பையன் கிளம்பிப் போய் ஒரு வருடம் ஆகிறதே; என்ன ஆனான், எப்படி இருக்கிறான் என்று பார்த்துப் போகத்தான் வந்தார். முந்தைய அனுபவங்களின் விளைவால், என்னை மறுபடி ஊருக்குக் கூட்டிப் போய் தொழிலில் ஈடுபட வைக்கிற எண்ணமெல்லாம் அவருக்கு வடிந்து விட்டிருந்தது. மாறாக, நாடகக் குழுவைக் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தார். எங்களின் பழக்க வழக்கங்கள், நாடகம் போடுவதற்கு முன் செய்யப்படுகிற ஏற்பாடுகள், விளம்பரம், வாழ்க்கை முறை இவற்றை ஆராயத் தொடங்கினார்.

அவர் கண்ணில் முதலில் பட்டது, பணமில்லாமல் நாங்கள் படும் கஷ்டம்தான். அன்றாடம் சாப்பாட்டுக்கே நாங்கள் உன்னைப் பிடி; என்னைப் பிடி என்று திண்டாடுவதைப் பார்த்து மிகவும் கலங்கி விட்டார்.

ஒரு நாள் பிற்பகல், நாடகக் கொட்டகையின் வாசலில் அமர்ந்திருந்தவர், ஓர் ஊர்ப் பெரியவரிடம் புலம்பிக் கொண்டிருந்தார்: "என்ன இவனுங்க நாடகம் போட்டுக் கிழிச்சானுங்க? வாழ்க்கையே ஒழுங்கா ஓட மாட்டேங்குது? சாப்பாட்டுக்கே வழியில்லாம திண்டாடறானுங்க. தேறுவானுங்களா?'' என்று அவர் தமக்கே உரிய கவலையுடன் கேட்டுக் கொண்டிருந்தது, என் காதில் விழுந்தது.

மறுநாள் டி.கே. ராமச்சந்திரன் என்னைக் கூப்பிட்டார். "உன் அப்பாதான் பெரிய வியாபாரி ஆச்சே? நம்ம ட்ரூப்புக்கு அவரால ஏதாவது உதவி செய்ய முடியுமா கேட்டுப் பாரேன்?'' என்றார்.

நான் என் அப்பாவிடம் போய் தயங்கித் தயங்கி விஷயத்தைச் சொன்னேன். அவருக்கும் எங்கள் நிலைமை நன்றாகவே தெரிந்திருந்ததால் எதுவும் கேட்காமல் இருநூறு ரூபாய் எடுத்துத் தந்தார்.

அந்தக் காலத்தில் அது மிகப் பெரிய தொகை; உதவி. கொஞ்ச நாள் உணவுப் பிரச்னை இல்லாமல் கழிந்தது. மறுபடி என் அப்பாவிடமே உதவி கேட்க வேண்டி வந்தது. இப்படி அடிக்கடி அவரிடம் உதவி கேட்பது தவறு என்று நினைத்தாரோ என்னவோ, ''இதெல்லாம் கடன்தான்; திருப்பித் தந்து விடலாம்'' என்று டி.கே.ஆர். சொன்னார்.

ஆகவே, என் அப்பாவும் அவ்வப்போது கேட்கும்போது பணம் தரத் தயங்கவில்லை.

ஆனால், ஒரு கட்டத்தில் 'என்ன இது! நாம் இங்கேயே இருந்தால் இப்படிக் கடன் கொடுத்துக் கொடுத்து, மறுபடி ஊர் திரும்பக் கூடப் பணம் மிச்சம் இருக்காது போலிருக்கிறதே' என்று நினைத்தார் என் அப்பா.

ஒருநாள் காலை என்னைக் கூப்பிட்டு, ''ராமசாமி, நான் வந்து ரொம்ப நாள் ஆயிடுச்சி. ஊருக்குத் திரும்பணும். அங்க




போட்ட வேலையெல்லாம் போட்டபடியே கிடக்குது. பின்னால எப்பனாச்சும் சமயம் கிடைக்கறப்ப வந்து பார்க்கறேன்'' என்று சொல்லி, விடை பெற்றுப் போய் விட்டார். நாங்கள் தொடர்ந்து நாடகம் போட்டுக் கொண்டிருந்தோம்.

இதற்கிடையில், சென்னையில் இயங்கி வந்த என்.எஸ்.கே நாடக சபாவில் ஒரு பிளவு உருவாகி வருவதாக எங்களுக்குச் செய்தி வந்தது.

என்.எஸ். கிருஷ்ணனின் துணைவியார் டி.ஏ. மதுரம் அவர்களின் நேரடி மேற்பார்வையில் இயங்கி வந்த அக்குழுவில் ஹீரோ, கே.ஆர். ராமசாமி. நிர்வாகம் முதற்கொண்டு அனைத்துப் பொறுப்புகளையும் ஏற்று நடத்தி வந்தவர் எஸ்.வி. சகஸ்ரநாமம். இந்த இரண்டு ஜாம்பவான்களுக்கும் இடையே, 'நீ பெரியவனா? நான் பெரியவனா?' என்கிற மோதல் வந்துவிட்டது.

மதுரம் மிகவும் கலங்கிவிட்டார். உண்மையில் என்.எஸ்.கே சபாவுக்கே தூண் போல இருந்தவர்கள் அந்த இருவர். அவர்களுக்குள் மோதல் என்றால்?

பல நல்ல உள்ளங்கள் அவர்கள் இருவரையும் சமரசம் செய்து வைக்கிற முயற்சியில் தீவிரமாக இறங்கியிருப்பதாக எங்களுக்குத் தகவல் வந்தது. ஆனால் எந்த முயற்சியும் பலனளிக்கவில்லை. தம் ஆதரவாளர்களுடன் கே.ஆர். ராமசாமி பிரிந்து போனார்.



இழப்பு சாதாரணமானதல்ல. கே.ஆர். ராமசாமி தன்னிகரில்லாத நடிகர். அவருக்கு ஆதரவாகப் பேசினாலோ-நாடகத் துறையில் முடிசூடா மன்னராக விளங்கிய எஸ்.வி.எஸ்ஸின் அதிருப்திக்கு ஆளாக நேரும். எஸ்.வி.எஸ்ஸின் சார்பாகப் பேசினாலோ, கே.ஆர்.ஆருக்கு வருத்தமாகி விடும். இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்தார் மதுரம். விஷயம் கைமீறி விட்டதால் மிக உடைந்து போனார்.

கம்பெனியே ஸ்தம்பித்துவிட்டது. அப்போது அவர்கள் முன்னிருந்த ஒரே கேள்வி: 'இனி யாரை வைத்து நடத்துவது?'

தீவிரமான யோசனைகளுடன் மிச்சமிருந்த கலைஞர்களை வைத்து நாடகங்களை நடத்தி வந்தார் மதுரம். ஆனால் நிறைவாக, திருப்தியாக இல்லாதது போல் ஓர் உணர்வு அவரது மனத்தை அரிக்கத் தொடங்கியிருக்கிறது.

அந்த நேரத்தில்தான் சகஸ்ரநாமத்துக்கு எங்கள் ஞாபகம் வந்திருக்கிறது. 'அந்தப் பையன்கள் எத்தனை அருமையாக நடிப்பார்கள்! அற்ப காரணத்துக்காகப் பிரிந்து போய் விட்டார்களே; இப்போது எங்கே இருக்கிறார்கள்?' என்று பார்க்கிறவர்களிடமெல்லாம் கேட்க ஆரம்பித்திருக்கிறார்.

கிராமம் கிராமமாகச் சுற்றிக் கொண்டிருந்த எங்களைப் பற்றி யாரோ ஒரு நாடக நடிகர் எஸ்.வி.எஸ்ஸுக்குத் தகவல் தர, ஒரு நாள் சகஸ்ரநாமம் தம் குழு உறுப்பினர்கள் பி.டி. சம்பந்தம், பி.கே. சம்பங்கி இருவருடன் கிளம்பி வந்து விட்டார். அப்போது நாங்கள் பணப் பாக்கத்தில் முகாம் இட்டிருந்தோம். அவர்கள் வந்து சேர்ந்த மாலை நாங்கள் 'பம்பாய் மெயில்' நாடகம் போட்டுக் கொண்டிருந்தோம். வயதான சதாசிவ முதலியார் வேடத்தில் மேடையில் நடித்துக் கொண்டிருந்த எனக்குக் குழப்பம் கலந்த வியப்பு.

எதற்காக வந்திருக்கிறார் எஸ்.வி.எஸ்.? வெறுமனே பார்த்துப் போகவா? அல்லது ஏதாவது முக்கியத் தகவல் சொல்லவா?

அவர் எங்களைக் கூட்டிப் போகத்தான் வந்திருக்கிறார் என்பது தெரிந்தபோது நான் உற்சாகத்தில் துள்ளிக் குதித்தேன். பசித்தவனுக்குப் பால்சோறு கிடைத்தது போன்ற வாய்ப்பு அல்லவா அது?

**நா**டகம் முடிந்தவுடன் எஸ்.வி.எஸ்., டி.கே. ராமச்சந்திரனுடன் பேசினார். என்.எஸ்.கே. சபாவில் ஏற்பட்ட பிரிவினை பற்றி விரிவாகச் சொல்லி, "நீங்கள் குழுவோடு மறுபடி வந்து சேர்ந்து விட வேண்டும்" என்ற போது முதல் முதலில் பச்சைக்கொடி காட்டியவன் நான்தான். உடனே புறப்பட்டு விடத் தயாராக இருந்தேன். வால்டாக்ஸ் ரோடில் அவர்களது 'கிருஷ்ண லீலா' நாடகத்தைப் பார்த்ததிலிருந்தே தவித்துக் கொண்டிருந்தவனல்லவா நான்?

"எத்தனை நாள் இப்படி நிரந்தரமில்லாமல், சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டு, நடித்துக் கொண்டிருப்பது? பேசாமல் எஸ்.வி.எஸ்ஸுடன் கிளம்பிப் போய்விடுவோம். இப்படியொரு வாய்ப்பு இனி வராது" என்று டி.கே.ஆரிடம் சொன்னேன்.

பலர் என்னை ஆமோதித்தார்கள். சிலர் மட்டும், "அதெப்படி? பிரிந்து வந்தது வந்தாகி விட்டது. மறுபடி போய்ச் சேர்வது அவமானமில்லையா?" என்றனர்.

"அடப் போய்யா! பெரிய அவமானத்தைக் கண்டுட்ட. தினம் தினம் யாரையாவது பார்த்து சாப்பாட்டுக்கு வழி பண்ணி வெக்கிறவன் ராமசாமிதான். அந்தக் கஷ்டம் அவனுக்கில்ல தெரியும்? அதை விட ஒண்ணும் பெரிய அவமானமில்லை. பேசாம போய் சேர்ந்துடறதுதான் புத்திசாலித்தனம்!" என்று எனக்கு ஆதரவாகவும் சிலர் குரல் எழுப்பினார்கள்.

வெளியே எஸ்.வி.எஸ். காத்திருந்தார்.

இறுதியாக, என்.எஸ்.கே.சபாவுடனேயே சென்று இணைந்து விடுவது என்று டி.கே. ராமச்சந்திரன் முடிவெடுத்து, அறிவித்தார்.

வேறு வழியின்றி எதிர்ப்பாளர்களும் ஒப்புக் கொண்டனர்.

ஆனால் ரூ. 732/- அப்போது எங்களுக்குக் கடன் இருந்தது. அன்றாடம்காய்ச்சிகளான எங்களால் எப்படி அந்தக் கடனை அடைக்க முடியும்?

"நான் அடைத்து விடுகிறேன்" என்று அதற்கும் முன்வந்தார் சகஸ்ரநாமம். என்.எஸ்.கே. சபாவே அந்தக் கடனையும் அடைத்துவிட, அப்புறமென்ன?

கூடாரத்தைக் கலைத்துவிட்டு, சந்தோஷமாகச் சென்னைக்கு ரயில் ஏறினோம்.

மா பெரும் வரவேற்பு என்பார்களே, அப்படியென்றால் என்ன என்று நாங்கள் சென்னை வந்து இறங்கியபோது புரிந்தது. உற்சாகமும் சந்தோஷமும் கொப்பளிக்க, அப்படியொரு ஆரவாரமான வரவேற்பு எங்களுக்கு! பிரிந்தவர்கள் கூடியதால் ஏற்பட்ட கூடுதல் மகிழ்ச்சி வேறு! கேட்க வேண்டுமா? பிரமாதமான விருந்து, உபசாரம்.

அதுதான், அந்தச் சாப்பாடுதான் எங்களை திணற அடித்து விட்டது. பழைய மதுரை பாலகான சபாவில் இருந்தபோதுதான் அப்படிப்பட்ட அறுசுவை உணவை நாங்கள் உண்டிருந்தோம். பிரிந்து வந்தபின் கூழோ, கஞ்சியோ - கிடைத்ததை உண்டு காலம் தள்ளி வந்ததால் சென்னையில் மறுபடி அப்படியொரு அற்புதமான விருந்துணவு கிடைத்தபோது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாமல் கிட்டத்தட்ட அழுதே விட்டோம்.







மறுநாள் காலை பி.டி. சம்பந்தம், டி.கே.ஆரைக் கூப்பிட்டார். அப்போது சம்பந்தம்தான் என்.எஸ்.கே சபாவில் நாடக ஆசிரியர். "ராமச்சந்திரன், நீங்க புதுசா வந்து சேர்ந்திருக்கீங்க. நாம முதல் முதல்ல இணைந்து போடப் போற நாடகம் பிரமாதமா இருக்கணும். என்ன செய்யலாம், சொல்லுங்க" என்று கேட்டார்.

டி.கே.ஆர் உடனே என்னைக் கைகாட்டி விட்டார்.

"எங்கள் குழுவில் ராமசாமிதான் பெரும்பாலான விஷயங்களைக் கவனித்துக் கொள்வது. நீங்கள் அவனிடமே கேட்கலாம்" என்றதும் சம்பந்தம் என்னைப் பார்த்தார்.

"சம்பந்த முதலியார் நாடகங்கள், அருணாசலக் கவிராயரின் ராமாயணம், கண்டி ராஜா என்ற இலங்கை நாடகம் இப்படி சுமார் நாற்பது நாடகங்கள் நாங்கள் போடுவோம். எது வேண்டுமானாலும் செய்யலாம்" என்றேன் நான்.

"நாங்க அன்னைக்கு வந்தப்ப நீ 'பம்பாய் மெயில்'ல சம்பந்த முதலியார் பார்ட் செஞ்சியே, எத்தனை நாளா செய்யறே?" என்றார், பி.டி. சம்பந்தம்.

"16 வயதிலிருந்து" என்று நான் சொன்னபோது அசந்து விட்டார்.

அவர் கேட்டதற்கு இன்னொரு காரணமும் உண்டு. ஒரிஜினல் 'பம்பாய் மெயில்' நாடகத்தில் அந்த சம்பந்த முதலியார் வேடம் சில நிமிடங்கள் மட்டுமே வரக் கூடியது. அத்தனை முக்கியத்துவம் வாய்ந்த பாத்திரம் அல்ல. ஆனால் நான் எனக்காகவே அந்தப் பாத்திரத்தை மேலும் விரிவுபடுத்தி, நாடகம் முழுவதும் நான் வருவதுபோல அமைத்துக் கொண்டிருந்தேன்.

"இழ வேஷம் போடறியே? மனசுக்குப் பிடிச்சுத்தான் செய்யறியா?" என்றார்.

"ஐயா, வேஷம் எதுவானா என்ன? என் பார்ட் நல்லா இருக்கணும். ஜனங்களுக்கு என் நடிப்பு மனசுல நிக்கணும். அவ்வளோதான்"

## 'சுட்ட' பழம்:

மதுரை காமராஜர் பல்கலைக் கழக தொலைநிலை கல்வித்துறையில் பயிலும் எம்.பில் தமிழ் மாணவர்களுக்கு, ஒரு தேர்வில் வினாத்தாள் அளிப்பதற்கு பதில், விடைத்தாளைத் திருத்தும் ஆசிரியர்களுக்கான விடைக்குறிப்பு அளிக்கப் பட்டது.

*(இது குறித்து பல்கலைக் கழகப் பதிவாளர் டாக்டர் ராமசாமியிடம் கேட்ட போது, வினாத்தாள் முறை மாற்றப்பட்டுள்ளது; தவறு எதுவும் நடக்கவில்லை என்றார்)*

**- செய்தி**

### கனிந்த சிந்தனை:

"ஐயயோ! எப்படியெல்லாம் தப்பு நடக்குது பார்த்தீங்களா!" என்று அலறுகிறார்கள் சிலர் - கொஞ்சம்கூடப் பெருந்தன்மையில்லாத கல் நெஞ்சக்காரர்கள்!

யோசித்துப் பாருங்கள்... இதேமுறையை எல்லா பல்கலைக் கழகங்களும் அறிமுகப் படுத்தினால், மாணவர்களுக்குப் படிக்கிற வேலை மட்டுமின்றி 'பிட்' தயாரிக்கிற வேலையுமல்லவா மிச்சமாகும்!

கோபம் வருகிறது நேர்மையாளர்களுக்கு...! "அப்படியானால் பரீட்சை என்பதே அவசிய மில்லையே... ஏன் காலேஜ்கூட அவசிய மில்லையே! வெறுமே மூன்று வருட ஃபீஸைக் கட்டுவிட்டு டிகிரி சான்றிதழை வாங்கிப் போகலாமே" - என்று லாஜிக் பேசுகிறார்கள்!

இந்தப் புதுமை முயற்சியில் மாணவர்கள் மூளைக்கு எத்தனை பெரிய வேலை! தங்களிடம் தரப்பட்டுள்ளது கேள்வித்தாளா? விடைக் குறிப்பா என்பதை அவர்கள் கஷ்டப்பட்டுக் கண்டுபிடிக்க வேண்டும்; அதன் பிறகு அதை சம்பந்தப்பட்டவர்களின் கவனத்துக்கு வேறு கொண்டு வர வேண்டும்...

"ஆமாமாம்! அப்புறம் சம்பந்தப்பட்ட அதிகாரி எதற்கு சப்பைக்கட்டு வேறு கட்ட வேண்டும்..." அநியாயத்துக்கு நொடிக்கிறார்கள் மாணவ எதிரிகள்!

கல்வித்துறையைச் சேர்ந்தவர்கள் இப்படியெல்லாம் தீர்க்க தரிசனத்துடன் செயல்படுகிறார்கள் என்பதை அவர்கள் புரிந்து கொள்ள மறுக்கிறார்கள்! இதைப் போன்ற மாற்றங்களைப் புகுத்தினால் 'காப்பியடிப்பது எங்கள் பிறப் புரிமை!' என்று மாணவர்கள் கொடி பிடிக்க முடியாது அல்லவா! அப்புறம் மாணவ சமுதாயத்துக்கு முன்னேற்றம் தவிர வேறில்லையே!

**- சில்மிஷா**

பி.கு: லேட்டஸ்ட் செய்தி: விடைக் குறிப்புக்குப் பதில் முழு விடைகளையே அந்தந்த வினாக்களின் கீழ் தர வேண்டும் என்று மாணவர்கள் போராட்டம் ஆரம்பித்துள்ளார்களாம்.

என்றேன்.

அவர் விடாமல் பிற நாடகங்கள் ஒவ்வொன்றாகச் சொல்லி ஒவ்வொன்றிலும் என்ன வேஷம், போடுவேன் என்று கேட்டார்.

"நாற்பது நாடகத்திலும் வருகிற அத்தனை பாத்திரங்களும் எனக்கு அத்துப்படி" என்றேன்.

"கிருஷ்ணலீலாவில் ரெண்டு பெண்டாட்டிக்காரன் வேஷம் கட்டுவியா?"

"தாராளமாக!"

"கம்சன் வேஷம்?"

"பிரமாதமா செய்வேன்!"

"விகடராமன் வேஷம்?"

"நானொரு விளையாட்டிங்கே சொல்லுவேன். அட, நாரண்ணா, வீரண்ணா, கோவிந்தா, கோபாலா நானொரு..." என்று அந்தப் பாத்திரம் பாடும் பிரபலமான பாடல் ஒன்றை உடனே பாடிக் காட்ட, பிரமித்து விட்டார் சம்பந்தம்.

இறுதியில் கிருஷ்ணலீலாவே போடுவது என்று முடிவாக, எனக்கு அந்த 'இரண்டு பெண்டாட்டிக்காரன்' வேடம்!

தாய்க்குழுவோடு இணைந்த சந்தோஷம், பெரிய குழுவில் நாமும் இப்போது ஒரு ஸ்டார் நடிகர் என்கிற பெருமை, முக்கியமாக சாப்பாட்டுப் பிரச்னை இல்லை என்கிற நிறைவு தந்த கிளர்ச்சி- அன்றைய நாடகத்தில் என் முழுத் திறமையைக் காட்டி நடித்தேன்.

சபை ஆரவாரம் செய்ய, சக நடிகர்கள் கட்டித் தழுவிப் பாராட்ட, ஒரு பெரிய கவலை விட்டது என்று மதுரமும் சகஸ்ரநாமமும் நிம்மதிப் பெருமூச்சு விட,

இனி என்.எஸ்.கே. சபாதான் நம் எதிர்காலம் என்கிற முடிவுக்கு வந்து விட்டேன்.

ஆனால் விதி வேறு மாதிரி இருந்தது. நாடக கம்பெனியில் என் வாழ்க்கை வெகு விரைவில் முடிவடையவிருந்தது.

ஒரு நாள் ஓர் இளைஞர் கையில் ஒரு நாடக ஸ்கிரிப்டுடன் எங்கள் கம்பெனிக்கு வந்தார். என்னைப் பார்த்து, தன் நாடகத்தை என்.எஸ்.கே. சபா மூலம் அரங்கேற்ற வேண்டும். சகஸ்ரநாமத்தை சந்திக்க முடியுமா? என்று கேட்டார்.

அவர் வைத்திருந்த கதைக்கு 'தியாக உள்ளம்' என்று தலைப்பிட்டிருந்தார். பின்னால் அதுதான் 'நாம் இருவர்' ஆனது. அந்த இளைஞர் பெயர் ப. நீலகண்டன்.

(தொடரும்)

உமா கல்யாணி

**போ**கிறபோது கொடுக்கரிவாள் கொண்டு திருகு கள்ளிக் கிளைகளில் ஐந்தாறை அரிந்து போட்டான் மாயகிருஷ்ணன். சொள சொள வென்று கள்ளிப்பால் சுரந்து கட்டாந்தரை ஈரப் படலானது.

ஏதோ குதிரை ரேசில் கலந்து கொண்டவை போன்று ஆடுகள் வேகம் வேகமாய் ஓடி வந்தன.

மாயகிருஷ்ணனின் அரிவாள் இயங்கும் ஓசைக்கு எந்தக் கொந்திலே ஆடுகள் மேய்ந்து கொண்டிருந்தாலும் சரி, நான்கு கால் பாய்ச் சலுடன் அவனிருக்கிற இடத்திற்கு வந்து சேர்ந்து விடும்.

மொசு மொசுவென்று இலை தழைகளை ஆய்ந்து ஆய்ந்து தின்னும்.

மாயகிருஷ்ணனும் அவற்றின் இந்த அவசர மான மேய்ச்சலைச் சந்தோஷத்துடன் பார்த்தபடி நிற்பான்.

ஆனால் இப்போது...?

அரிவாளின் ஓசைக்குப் பாய்ந்தோடி வந்த ஆடு கள், வெட்கப்பட்டுக் கிடந்த திருகு கள்ளிக் கிளை களை முகர்ந்து முகர்ந்து பார்த்தபடி தேக்கமாய் நின்றன.

இந்தக் கள்ளிப் பாலின் முடை நாற்றம் அவற் றிற்குப் பரிச்சயம்தான். எனினும் கூட எப்பவுமே அதையே சகித்துக் கொள்ள நேர்கிறபோது சலிப்பு வராதா?

இப்போதும் சலிப்புடன்தான் கள்ளிக் கிளை களைச் சுற்றிச் சுற்றி வந்தன.

முறுக்குச் சாப்பிடுகிற மாதிரி, 'மொறுக், மொறுக்'கென்று கள்ளித்தோலை லாகவமுடன் உரித்து உரித்துத் தின்னுகிற ஆடுகள் இன்று முகர்ந்து முகர்ந்து பார்த்தபடியே நிற்பதென்றால்...?

மாயகிருஷ்ணனுக்கே அழுகை வரலானது.

"பாவம் அதுங்கதான் என்ன பண்ணும்? தினம் தினம் கள்ளிகளையே வெட்டிப் போட்டுத் தின்னச் சொன்னால் மூஞ்சியிலே அடிக்கும்ல்ல. பேதில போற மழை பெய்யாமக் கெடந்து ஆட்டங் காட்டுதே! காடெல்லாம் கரிஞ்சு தீஞ்சு கெடக்கு. எப்பவாச்சும் கள்ளிகளை வெட்டிப் போட்டால் அதுகளும் பிரியமாத் தின்னும்தான். என்னத்தப் பண்ணும்? அதான் மோந்து மோந்து பாத்துக் கிட்டே சுத்திச் சுத்தி வருகுது. காட்டுல பச்சை இல்லே. குளங்கள்லாம் காஞ்சு போய்க் கெடக்கு. இதுக படுதபாடுல்ல பெரும்பாடாய் இருக்கு. மனு சன் எதையோ காயச்சிக் கிய்ச்சி வயித்த ரொப்பிக் கொள்கிறான். பாவம் இதுக... வாயத்த ஜீவனுக என்னதான் பண்ணும்...?"

தனக்குள் புலம்பிக் கொண்டே தனது ஆடு களைப் பார்த்தான்.

எலும்புந்தோல் போர்த்த ஆடுகள் - அவனது நெஞ்சத்தை விம்மப் பண்ணின. கண்கள் கோத்தன.

அழுக்குத் துண்டினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

அவனால் தாகத்தைப் பொறுத்துக் கொள்ள முடியும். ஆனால்... இதுகள்?

இப்படி மேய்ச்சலுக்கு வழியில் லாமல் அந்தி வேளையில் அலுத்துச் சலித்துப் போய் வீட்டுக்குத் திரும் பினால், முற்றத்து ஆட்டுக்குடிலுக் குள் கிடக்கிற குட்டி ஆடுகள், தாய்ப் பாலுக்காக முட்டி மோதி வெளி வரத் துடிக்கிற காட்சி ஈரக்குலையை அறுக்கும்.

மேய்ச்சலுக்கே வழி இல்லாத போது மடி எங்கே சுரக்கும்?

"என்ன பாவம் பண்ணுச்சோ இப் பாடு படுதுக்கு?" என்று தன்னுள் புலம்பிக் கொண்டான்.

எப்படியோ கடுங்கோடையைத் தாக்காட்டியாக வேண்டுமே!

**க**ள்ளியை முகர்ந்து முகர்ந்து பார்த்தபடி நிற்கும் தனது ஆடுகளைக் கழிவிரக்கத்துடன் பார்த்தபடியே மாயகிருஷ்ணன் நின்றிருந்தபோது, தலையில் கள்ளிக்கட்டுகளுடன் ராமக்காளும், ருக்குவும் வந்தனர்.

"பாவம் வாயத்த சீவனுக. தெனம் தெனம் கள்ளியை வெட்டிப் போட்டா என்ன பண்ணும் அதுக? ஏம்பா மாய கிருஷ்ணா, தேரிக் காட் டைத் தாண்டி இருக்கிற மொட்டச்சி மலைக்குப் போனா என்னமும் மேய்ச்சல் இருக்குமே. ஆட்டை ஓட்டிக் கிட்டு போய்ப் பாரேன்" என் றாள் ராமக்கா.

"மொட்டச்சி மலைக்கா? ஆத்தாடி, எம்புட்டுத்தூரம்!"

"இருக்கட்டுமே, போனா அரைவயிறு ரொம்பாதா? காஞ்ச கொம்புகளையும், காஞ்ச வேரையும் போட்டுக் கடிக்க துக்கு, கொஞ்ச வழி நடந்தாலும் அரை வயிறு ரொம்பாதா?" என்றாள் ருக்கு.

"அங்கன மேய்ச்சல் இருக்கும்ன்னா சொல் திய?" என்று ஆவலுடன் கேட்டான்.

"வெறகு வெட்டப் போன இருவாழி அண் ணாச்சி வெறகுக் கட் டோட ஒரு கட்டுத் தழையும் கட்டிக்கிட்டு வந்தாரு. இந்த அருந்

தல்ல ஏதண்ணாச்சி பசேல்ன்னு தழைங்கன்னு கேட்டேன். அப்பத் தான் மொட்டச்சி மலைலயிருந்துண் ணாரு. அதான் சொல்தேன்."

"சரி ராமக்கா" என்ற மாயகிருஷ் ணன், கொம்பு சுழற்றி ஆடுகளைப் பத்தலானான். அவைகள் முன்னால் ஓட, இவன் பின்னால் விரையலா னான்.

"மாயகிருஷ்ணன் அண்ணாச்சிக்கு ஆடுதான் உசிர். பாரேன், ஆட்டுக்குட் டிக்குத் தழை கெடைக்கும்ன்னதும் ஓடு தாரே ஓடனே..." என்ற ருக்கு, தனது மட்டைச் செருப்புகள் சப்தமிட தொங்கு தொங்கென்று ஓடலானாள்.



சுட்டெரிக்கும் தேரிமணலைத் தாண்டிக் கொண்டு மொட்டச்சி மலை மீது ஏறலானான் மாயகிருஷ்ணன். பாதிக்கு மேல் ஏறியதுமே கள்ளிக் காடுகளும், அதற்கும் மேலாக இலை தழைகளுடன் கூடிய குற்று மரங்களும் கண்ணில் பட, இவனுக்கே இரை கிட்டி விட்டதுபோன்ற பூரிப்பில் துள்ளிக் குதித்தபோது, மட்டைச் செருப்பு வாய் பிளந்து விட்டது. ஏற்பட்டிருந்த உற்சாகத்தில் அதைத் தூக்கி அந்தரத்தில் வீசினான்.

"நாளைக்குச் சின்னப்பண்டடச் சொல்லி மட்டை வெட்டிப் போட ணும். அதுல செருப்புப் பண்ணிக்கிட் டாப் போச்சு" என்று கூறிக் கொண் டான்.

"ட்ரியோ...ட்ரியோ..." என்று ஆடுகளையும் மலை உச்சிக்கு ஏற்றினான்.

பச்சையைக் கண்டுவிட்ட உற்சாகம் அவை களிடமும்கூட, 'ம்மே! ம்மே!' என்கிற கத்தல்களு டன் உற்சாகமாய்க் குதித்தன. குற்று மரமாய் இருந் தாலும்கூட அவைகளுக்கு எட்டாத உயரத்தில்தான் இருந்தன. எம்பி எம்பி முயன்றன.

"அட மூதிகளா, அதுக்குள்ள அவசரம் பொறுக் கலியாக்கும்? அதான் இப்பம் வெட்டிப் போட் டுவனே" என்று சந்தோஷமுடன் கூறிக் கொண்டே கொடுக்கரிவாளை எடுத்துச் சர சரவென்று தழை களை வெட்டிப் போடலானான்.

அவை சந்தோஷமுடன் ஆய்ந்து ஆய்ந்து தின்னலாயின. அரையும் குறையுமாய்க் குலைப் பட்டினி கிடந்த ஆடுகள், பெரிய விருந்தே கிடைத்துவிட்ட சந்தோஷமுடன் தின்னலாயின பரபரப்புடன்.

ஒரு மணி நேரத்திற்குள் அந்தக் குட்டிமரம் மொட்டை ஆனது. இன்னும் தழைகள் வேணும் என்பதுபோல் ஆடுகள் சுற்றிச் சுற்றிப் பார்த்தன.

மாயகிருஷ்ணனின் பார்வை இன்னும் மேலே தாவியது. செங்குத்தான ஒரு பாறைக்கு மேலே, பசேலென்ற கிளைகளுடன் நின்று கொண்டிருந்தது இன்னும் ஒரு குட்டி மரம். பாறையை ஒட்டினாற் போன்று கீழே கிடுகிடு பள்ளம். பள்ளத்தில் திருகு கள்ளிகள் நிறைந்து காணப்பட்டன.

அவன் ஆடுகளுடன் மேலே ஏறலானான். அந்த மரத்தையும் மொட்டை அடித்து ஆடுகளின் வயிற்றை நிரப்ப எண்ணினான்.

மரத்திற்கு அருகில் போனபோதுதான், அந்த மரத்தில் ஏறித் தழை வெட்டுவது எவ்வளவு ஆபத்தான செயல் என்பது தெரிய வந்தது. சற்றே குனிந்து பார்த்தபோது அதல பாதாளமும், அது நிறைய திருகு கள்ளிகளுமாய்த் தென்பட்டன.

ஆடுகளிடம் சந்தோஷம் நிலை கொள்ள வில்லை. பச்சை இலைகளைக் கண்டுவிட்ட சந்தோ ஷத்தில் தாவித் துள்ளி ஏறி மேயத் துடித்தன.

"பொறுங்க மூதிகளா, இப்பதான் வெட்டிப் போட்டுவேனே" என்று செல்லமாக அவற்றைத் திட்டிக் கொண்டே குட்டி மரத்தின் மீது லாகவ முடன் ஏறி நின்று கொண்டு தழைகளை வெட்டிப் போடலானான். அவைகளும் சந்தோஷத் துள்ளல் களுடன் இலைகளை ஆய்ந்து ஆய்ந்து தின்ன லாயின.

கிட்டத்தட்ட அந்தக் குட்டி மரமும் மொட்டையாகிவிட்ட நிலை. என்ற போதும்

ஆடுகளின் பரபரப்பு ஓய்ந்து விடவில்லை. இன்னமும் தழைகள் கிடைக்காதா என்கிற எதிர்பார்ப்புத்தான்!

சரிவை நோக்கிப் போகின்ற அந்த ஒற்றைக் கிளையில் மட்டும் தழைகள் கொஞ்சமாய் இருந்தன. அதை வெட்டிப் போடுகின்ற முனைப்புடன் மிகவும் கவனமுடன் அந்தக் கிளையில் ஏறலானான். பாம்பு ஊர்வது போல் ஊர்ந்த வாக்கில் போனான். இவனது உடலின் கனத்தைத் தாங்க இயலாத கிளை, நன்றாக வளையலானது. முறிந்து விடுவதுபோல் தெரிந்தது. எனினும் மாயகிருஷ்ணன் விடுவதாக இல்லை.

கொடுக்கரிவாளை ஓங்கி வெட்டப் போனபோது, 'மளுக்'கென்று ஓர் ஓசை!

கிளை முறிந்துவிட, பிடிப்பு நழுவிய நிலையில் மாயகிருஷ்ணன் கீழ் நோக்கி விழலானான். பரந்த கள்ளிப் பொத்தையின் மீது போய் விழுந்தான். கை நழுவிய கொடுக்கரிவாள் வயிற்றில் இறங்க, குருதி பீரிடலானது.

"அம்மா!" என்கிற அவனது அலறல் மொட்டச் சிமலை முழுக்க எதிரொலிக்கலானது.

மரண வேதனை என்பது இதுதானோ?

அதிகப்படியான குருதிப் போக்கினால் மயக்கத்தில் ஆழ்ந்து போனான் மாயகிருஷ்ணன்.

எதிர்பாராத இந்த நிகழ்வு வாயற்ற ஜீவன்களையும் ஸ்தம்பிக்கப் பண்ணி விட்டது.

தங்களின் போஷகன் கீழே விழுந்து விட்டதை உணர்ந்த ஆடுகள், பள்ளத்தை எட்டிப் பார்த்தபடி, 'ம்மே..ம்மே!' என்று அத்தனையும் கதறலாயின.

தங்கள் முன்னால் கிடக்கும் தழைகளைக் கூடப் பொருட்படுத்தாமல் தங்கள் மேய்ப்பவனையே ஏக்கமுடன் தேடின.

கிடு கிடு பள்ளத்திற்குப் போய் அவனை ஸ்பரிசிக்கத் துடித்தன.

எப்படிப் போவது?

அவனிடம் இறங்கிப் போக வேண்டுமென்கிற உந்துதலுடன் அங்குமிங்கும் பார்வையை ஓடவிட்டன. இறங்கிப் போகும் வழியைத் தேடின.

சிறிது நேரத் திணறலுக்குப் பின், எல்லா ஆடுகளும் ஒன்றுகூடி, ஒரு தீர்மானத்திற்கு வந்து விட்டவை போன்று கீழே இறங்கலாயின. சுற்றி வளைத்து இறங்கி வந்து, மாயகிருஷ்ணன் மல்லாக்க விழுந்து மயங்கிக் கிடக்கும் கள்ளிப் பொத்தைமீது ஏறி நின்றன.

அவனை உசுப்பி விடுகிற உந்துதலோடு அவனையே முகர்ந்து முகர்ந்து பார்த்து, 'ம்மே..ம்மே!' என்று அலறின.

அவனால் எப்படி எழ முடியும்?

அரிவாள் பட்ட இடத்தில் குருதிப்பீச்சில் உறைந்து, கசிவாக இரத்தம் ஒழுகலாயிற்று. ஓர் ஆடு அந்த இடத்தையே முகர்ந்து பார்த்தது. ஏனைய ஆடுகள் அவனது உடலையே சுற்றிச் சுற்றி வந்து முகர்ந்து பார்த்தன.

இப்படியே பொழுது ஓடி, பொழுதுக் கால் மேல் திசையில் இறங்கலானது. இருட்டு ஆரம்பித்துவிட்டது.

ஆனால் ஓர் ஆடாவது அங்கிருந்து அசையவே இல்லை. மயங்கிக் கிடக்கும் அவனைக் காவல் புரிவது போல் சுற்றியே நின்றிருந்தன.

"ஏம் பார்வதி, நான் இப்படி பத்து நாளா தன் நினைவு இல்லாம இந்த ஆஸ்பத்திரிலயேவா கெடந்தம்னு சொல்லுத?" என்று கேட்டான் மாயகிருஷ்ணன்.

"பின்னே பொய்யா சொல்லுதேன்? எனக்கும் இருப்பு இங்கதான! இந்தாங்க! ஆர்லிக்ஸைக் குடிங்க" என்றபடி ஹார்லிக்ஸ் நிரம்பிய குவளையை நீட்ட, அவனும் வாங்கிப் பருகலானான்.

"இப்ப இந்த நாலஞ்சு நாளாகத்தான் வாய் வழியாய் என்னமும் தர்றது. இதுக்கு முன்னாடி ஊசிங்க, மாத்திரைங்க ட்யூப்பு வச்சு குளுகோஸுன்னு டாக்டரும், நர்சுகளுமில்லா பாத்துக்கிட்டாக. எந்துரை நீங்க பொழச்சதே மறுபொழைப்புல்லா!"

பார்வதி கூறுவதை நம்ப முடியாதவன் போன்று கேட்டுக் கொண்டிருந்தான்.

ஆடு மேய்க்கப் போனவன் காணாமல் தவித்ததையும் கள்ளியின் மீது மயங்கிக் கிடந்தவனை ஊர் ஜனங்கள் கூடி இரவோடு இரவாகத் தூக்கிக் கொண்டு வந்து ஆஸ்பத்திரியில் சேர்த்ததையும் விபரமாகச் சொன்னாள்.

"ஆமாம் பார்வதி, நீயும் என்கூடவே ஆஸ்பத்திரியிலேயே இருந்தம்னு சொல்லுதியே, அப்படின்னா நம்ப ஆடுக..? அதுகளையெல்லாம் ஆரு பாத்துக்கிடுதாக?" என்று கேட்டான்.

பார்வதி பேசாமல் இருந்தாள். பராக்குப் பார்க்கிறது போல் அவன் சொன்னது கேட்கவில்லை என்கிறது போல் இருந்தாள்.

அவன் மறுபடியும் அதையே கேட்டான்.

"ஏன் பார்வதி, நம்ம ஆடுகளையெல்லாம் ஆரு மேய்க்காக?"

இதற்கும் அவளிடமிருந்து பதில் வராமல் போகவே மாயகிருஷ்ணனிடம் கோபம் பொங்கியது.

"கேக்கமில்ல, காதவிஞ்சு போச்சா? பதில் சொன்னா என்ன?" என்று கத்தினான்.

அவள் மெதுவே திரும்பி, அவனை நிதானமுடன் ஏறிட்டாள். பொறுமை இழந்து நிற்கும் அவனிடம் எப்படியாவது கூறித்தான் ஆக வேண்டும். தாங்கிக் கொள்கிற மனோபலம் இப்போது அவனிடம் இருக்காது. எனினும் கூறாமல் முடியாது. விடமாட்டான்.

மிகவும் தயக்கமாக அவனை ஏறிட்டவள், "உங்க ஆஸ்பத்ரி செலவையெல்லாம் ஈடுகட்ட..." என்றவள், மேலே கூறாது நிறுத்தவே, எரிச்சலான அவன்,

"ஈடு..கட்ட...? என்ன செய்தே?" என்று கேட்டான்.

"அதா... ஆடுகள் பூராத்தியும் வித்துப் போட்டேன்."

# 100/100 சிரிப்பு வரும்





























கருத்து: ஜூலி
படம்: செல்லம்

# மூழ்காத ஷிப் — சாவி

"ஒருவரோடு எனக்கு முப்பது வருஷப் பழக்கம்" என்றால் அது நட்பாக இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. இரண்டு நாட்களில் கூட ஒருவர் நமக்கு நண்பராக முடியும். காலில் அடி என்றால் "வாங்க மருத்துவமனைக்குப் போகலாம்" என்று பதறுபவர்கள் நண்பரே தவிர, நாமாக கேட்டபிறகு "சரி வா" என்று அழைத்துச் சென்றால் அது தேர்ந்த நட்பாகாது.

ஓவியர் கோபுலு கூட என் நண்பர் தான். பல வருடங்களாக அன்போடு பழகியிருக்கிறோம். என்றாலும் ஆழமான நட்பு என்று பார்க்கும் போது எனக்குப் பளிச்சென்று தோன்றுவது கலைஞர் கருணாநிதிதான்.

சுமார் முப்பது வருடங்கள் இருக்கும். நட்பு என்று கூற முடியாது. முதல்வர் - பத்திரிகையாளர் என்கிற அளவில் நாங்கள் அறிமுகமாகியிருந்தோம். அப்போது மேலைநாடுகளுக்கு கலைஞர் விசிட் செய்துவிட்டு வந்திருந்தார். தினமணிகதிர் தலையங்கத்தில் "மூன்று நாட்களில் இந்த நாடுகளைப் பற்றி என்ன புரிந்து கொண்டு வரப் போகிறார்?" என்று எழுதினேன். இதைப் படித்த கலைஞருக்கு என் மீது கடும் கோபம். (இப்போதைய பக்குவம் அப்போது இல்லை என்றுதான் சொல்வேன்).

சோ வேறு அவர் ஆட்சியை மிகவும் கிண்டலாக விமர்சித்துக் கொண்டிருந்தார்.

என் தலையங்கத்தின் சில வரிகளுக்கு பதில் கூறும் விதமாக 'முரசொலி'யில் பக்கம் முழுக்க பதிலுக்குச் சாடியிருந்தார். "கூவுகிற கோட்டான்கள் கூவுகின்றன. இந்தக் குயிலுக்கு என்ன கேடு?" என்பது போல சில வாசகங்கள்.

இரண்டு நாட்கள் கழித்து அவர் வீட்டுக்குப் போனேன். ஒரு முக்கிய அரசியல் வாதியை தேவைப்படும் நேரங்களில் தூக்கியும், தாக்கியும் எழுதினால்தான் பத்திரிகை 'பேலன்ஸ்ட்' ஆக இருக்கும் என்று கூறிவிட்டு "உங்கள் தமிழும், நகைச்சுவையும் எனக்கு ரொம்பப் பிடிக்கும். மோதிரக் கையால் குட்டுப்பட்டதாக நினைத்து விட்டுப் போகிறேன்" என்றேன். நெகிழ்ந்து போனார்.

குமுதம் பத்திரிகையோடு ஏற்பட்ட பிரச்னை காரணமாக, அதில் எழுதி வந்த 'நெஞ்சுக்கு நீதி' தொடரைப் பாதியில் நிறுத்தி விட்டார். இதைத் தொடர்ந்த ஒருநாளில் "நெஞ்சுக்கு நீதியை உங்க பத்திரிகையில் போடுங்களேன்" என்றார். சங்கடமாக இருந்தது. யோசித்தபோது குமுதத்துடன் எனக்குள்ள உறவை விட, என் பத்திரிகையின் சர்குலேஷன் அதிக முக்கியமாகப்பட்டது. அவர் தொடரை எழுதத் தொடங்க, கதிரின் விற்பனை கூடியது.

## "எழுத்தை விட முதல்வரின் நட்பு முக்கியம்!"

ஒருமுறை தி.மு.க. மாநாடு கன்யாகுமரியில் நடந்தது. பத்திரிகையாளர் என்ற முறையில் நானும் போயிருந்தேன். மாநாடு முடிந்த



அன்று சென்னைக்குக் கிளம்பிய என்னைத் தடுத்தார். "மூன்று நாட்கள் ஓய்வெடுத்த பிறகு போகலாம்" என்றார். கோவளம் கடற்கரை அருகே நான், அன்னாள் அமைச்சர் மாதவன், கலைஞர் ஆகியோர் அரசியல் பேச்சுக்களிலிருந்து விலகி, முழுக்க இலக்கியத்தின் பல்வேறு வடிவங்கள் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். எங்கள் நட்பு இறுகியது.

தொடர்ந்து வந்த 'எமர்ஜன்ஸி' காலகட்டத்தில், மெரீனா கடற்கரையில் நாங்கள் கூடும் இடத்தைச் சுற்றியும் ஒரே சி.ஐ.டிக்கள். இதையறிந்து நாங்கள், கடற்கரையில் இலக்கியம் பேசுவதைக் குறைத்துக் கொண்டோம். அவரை எல்லோருமே கைவிட்டிருந்த அந்தக் காலகட்டத்தில், நான் அவருடன் நட்பைத் தொடர்ந்தது. அவர் மனத்தில் நெகிழ்வை ஏற்படுத்தியிருக்கக்கூடும்.





இதுவரை கலைஞரின் பதவியைப் பயன்படுத்தி, நான் எனக்கு எந்தவித ஆதாயமும் தேடிக் கொண்டதில்லை. இந்த விதத்தில், எங்கள் நட்பில் கலைஞரை விட நான் ஒரு படி மேலே என்று கூறினால் (அது தம்பட்டமாகப் பட்டாலும்) தவறில்லை - என்னிடமிருந்து எதையுமே

பெற அவருக்கு என்ன அவசியம்?

கலைஞரின் கனவான வள்ளுவர் கோட்டம் பாதி கட்டப்பட்டிருந்த நிலையில், தி.மு.க. அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்டது. கவர்னர் ஆட்சியில் வள்ளுவர் கோட்டம் திறக்கப்பட்டது. கலைஞருக்கு திறப்பு விழாவுக்கு அழைப்பிதழ் கூட அனுப்பப்படவில்லை. வரவேற்புரை வாசித்த சௌந்தரா கைலாசத்தின் நீண்ட பட்டியலில் கலைஞரின் பெயர் இடம் பெறவில்லை. அவர் பெயர் பொறித்த கல் கூட அகற்றப்பட்டிருந்தது. கொதித்துப் போன நான், திறப்பு விழாவைப் பற்றி விரிவாக எழுதிவிட்டு இறுதியில் 'இவ்வளவுக்கும் காரணமான மூல புருஷரை என் மனது அப்போது நினைத்துக் கொண்டே இருந்தது. நீங்கள் யாரை நினைக்கிறீர்களோ தெரியாது, நான் நினைத்தது வள்ளுவரை' என்று முடித்திருந்தேன். மற்ற பலரைப் போலவே கலைஞரும் இதை மிகவும் ரசித்தார்.

இன்னொரு சமயம் தேர்தல் முடிவுகளை எதிர்பார்த்திருந்த நேரம். அவர் வீட்டுக்கு அப்போது சென்றிருந்தேன். தான்தான் அடுத்த முதல்வர் என்ற அதீத நம்பிக்கையோடுதான் அன்று அவரது செயற்பாடு இருந்தது. "உங்களுக்கு ஒரு நிமிஷம் ஒதுக்கியிருக்கேன்" என்றார் கறாராக. எனக்கு வந்ததே கோபம்! (அம்முறை அவர் கட்சி மெஜாரிடி பெறவில்லை). தொடர்ந்து நாலு வருடங்களுக்கு நான் அவரைத் தொடர்பு கொள்ளவில்லை. பிறகு பொது நண்பரான திருச்சி நாக சுந்தரம், சமாதானத்துக்காகச் செயல்பட, என் வருத்தத்தின் காரணத்தை அறிந்ததும், "அப்படி நான் சொல்லவே இல்லையே" என்று அவர் கூறிவிட்டார். எங்கள் நட்பு நீர்பூத்த நெருப்பாகவே இருக்க, நானே இந்தச் சங்கடத்தை உடைத்தேன். கலைஞரைச் சென்று பார்த்தேன். 'பிரிந்தவர் கூடினால்' என்பது போல் நிறைய நெகிழ்ந்தோம். நிறைய பேசினோம்.

கதிரிலிருந்து நான் விலக, 'குங்குமம்' இதழின் ஆசிரியராக என்னை ஆக்கினார் கலைஞர். அடிக்கடி தொலைபேசியில் தொடர்பு கொள்வார். ஒருமுறை என் இடது கால் குடைச்சல் பற்றி அவரிடம் கூறப்போக, அவரது டைட்டான நிகழ்ச்சி நிரலின் நடுவிலும், இதற்கான தைலத்தை பாண்டிச்சேரியிலிருந்து வாங்கி அனுப்பினார்.

ஜெயலலிதா ஆட்சியில் என்னைக் கைது செய்தபோது, கலைஞருக்கு இந்தச் செய்தி எட்ட வேண்டாம் என்றே எனக்குத் தெரிந்தவர்களிடம் கூறினேன். ஆனாலும் விஷயத்தைக் கேள்விப்பட்டு உடனடியாக ஆற்காடு வீராசாமி, மாறன், வழக்கறிஞர் சண்முக சுந்தரம், துரைமுருகன், சோமு, ஆலடி அருணா ஆகியோர் அடங்கிய ஒரு குழுவையே முதலில் அனுப்பினார். பிறகு அவரும் சிறைக்கு வந்து ஆறுதல் கூறினார். அன்றிரவே என்னை ஜாமீனில் வெளியே எடுக்கவும் வழி செய்தார். இதற்கு நடுவே என் வீட்டையும் தொலைபேசியில் தொடர்பு கொண்டு, அழுதுகொண்டிருந்த என் மனைவிக்கு ஆறுதல் கூறினார். ''உடுக்கை இழந்தவன் கைபோல'' என்ற திருக்குறள்தான் எனக்கு நினைவுக்கு வந்தது.

தம் ஆட்சியில் இயல் இசை நாடக மன்றத்தின் தலைவராக என்னை நியமித்தார். அவர் முதல்வர் பதவியிலிருந்து இறங்கிய அடுத்த நாளே, அந்தத் தலைவர் பதவியை நான் ராஜினாமா செய்தேன்.

அரசியல் பேசினால் நட்பை இழந்துவிடுவோமோ என்று எண்ணி, அவருடன் நான் அரசியல் பேசியதில்லை. ஒருமுறை "சாயிபாபாவை கடவுளாக நீங்கள் நினைக்கிறீர்களா?" என்று கிண்டலாகப் பேசத் தொடங்கினார். நானோ பாபா பக்தன். "அவர் God man" என்று கூறிவிட்டு "நான் வரேன்" என்று சொல்லியபடி வேகமாக நகர்ந்தேன்.

என் பிறந்தநாள் அன்று என்னைச் சந்திக்க அவர் தவறியதே இல்லை. சில சமயம் குடும்பத்தினரோடும் வந்திருக்கிறார்.

கலைஞர் மட்டும் ஒருபோதும் முதல்வராக இருந்திராவிட்டால் அவரிடம் இதே அளவு நட்பு பாராட்டி இருப்பேனா என்று சிலர் கேட்கிறார்கள். எங்கள் நட்பின் காரணமாக அவர் ஆட்சியின் சிறப்புக்களை மட்டுமே நான் வெளிச்சம் போட்டுக் காட்டியதாகச் சாடுகிறார்கள். என் பதில் இதுதான் : ஒரு முதல்வரின் நட்பை இழக்க யாருக்குத்தான் மனம் வரும்? தவிர, என் எழுத்தை விட எங்கள் நட்பைப் பெரிதாகக் கருதியதால் கலைஞர் ஆட்சியில் இருந்த சில குறைகளை நான் கண்டு கொள்ளாமல் விட்டதும் உண்மைதான்."

சந்திப்பு : **அருண் சரண்யா**



''நான்தான் அந்த முன்னாள் அமைச்சரின் பினாமின்னு ஒருத்தர் சொல்லிக்கறாரே?''

''எனக்கு எத்தனையோ பினாமிகள்! ஆளைப்பார்க்காமல் நான் எப்படி சொல்ல முடியும்?''

– சீர்காழி வி. ரேவதி



உ







# ஸ்ரீ மதுரகாளியம்மன் அறக்கட்டளை

**நெ. 95, காந்தி அடிகள் சாலை, கும்பகோணம்.**

அன்புடையீர்,

தெய்வ பக்தியும், தொண்டுள்ளம் கொண்டவர்களும், சிறுவாச்சூர் ஸ்ரீ மதுரகாளியம்மனை குல தெய்வமாக கொண்டுள்ளவர்களுமான அறங்காவலர்களைக் கொண்டு யாத்திரிகர்கள் தங்கும் விடுதி, கல்வித் தொண்டு, முதியோர் இல்லம் அமைப்பு ஆகிய சமூக சேவைகள் செய்வதற்காக, "ஸ்ரீ மதுரகாளியம்மன் அறக்கட்டளை" என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. அதன் சேவைப் பணிகளின் துவக்கமாக, சோழவள நாட்டின் சிறப்புமிக்க பொன்னி நதியின் வடபால் திருச்சி சென்னை நெடுஞ் சாலையில் திருச்சியிலிருந்து 48 கிலோ மீட்டர் தொலைவில் பெரம்பலூருக்கு முன்பாக, கலியுகத்தின் கண்கண்ட தெய்வமாக இருந்து ஸ்ரீ மதுரகாளியம்மன் அருள்பாலித்து வரும் சிறுவாச்சூர் கிராமத்தில் உலகின் பல பாகங்களிலிருந்தும் வரும் யாத்திரிகர்களுக்கு சுகாதார வசதிகளுடன் கூடிய தங்கும் விடுதி அமைக்க தீர்மானிக்கப்பட்டுள்ளது. அதற்கான செலவு தொகை ரூ. 18 லட்சம் ஆகும் என மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. இந்த சேவைப்பணி சிறக்க ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் ஸ்ரீ முகமும் பெறப்பட்டுள்ளது.

இந்த யாத்திரிகர்கள் தங்கும் விடுதியின் கட்டுமானச் செலவுகளை செய்வதற்கு தொண்டு உள்ளம் கொண்டவர்களும், ஸ்ரீ மதுரகாளியம்மனை குல தெய்வமாக கொண்டவர்களும், ஸ்ரீ அம்பாளுக்கு கடந்த 25 வருடங்களாக தை மாதத்தில் பெரும் செலவில் மஹாபிஷேகம் செய்து வரும் ஸ்ரீ மதுரகாளியம்மன் மஹாபிஷேக அசோசியேஷன் (பதிவு) சென்னை என்ற அமைப்பின் அங்கத்தினர்களும் சேவை பணி சிறக்கவும் ஸ்ரீ அம்மாள் அருள் பரிபூர்ணமாக கிடைக்கவும் மிகுந்த பொருள் உதவி செய்திட கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இந்த அறக்கட்டளைக்கு அளிக்கும் நன்கொடை தொகைகளுக்கு வருமான வரிவிலக்கு (80-G Exemption) பெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இந்த நற்பணிக்கு நன்கொடை அளிக்கும் தொகை அல்லது பொருள் உதவி ரூ. 5000 ம் அதற்கு மேற்பட்டும் இருந் தால், பொற்குவை அளிக்கும் நபரின் பெயரினை கல்வெட்டில் பொரித்திட தீர்மானிக்கப்பட்டுள்ளது.

நன்கொடை தொகைகளை **Sri Mathura Kalaiamman Charitable Trust** என்ற பெயரில் காசோலை அல்லது டிராப்ட் மூலம் அறக்கட்டளையின் நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பிவைக்கவும். **City Union Bank** மூலம் செலுத்தும் தொகைகளுக்கு காசோலை அல்லது டிராப்ட் கமிஷன் கிடையாது.

இங்ஙனம்,
ஸ்ரீ மதுரகாளியம்மன் அறக்கட்டளை

"அண்ணாநகர் பூங்காவில் வாரம்தோறும் இரண்டு நாட்கள் இலவசமாக யோகாசனப் பயிற்சி அளிக்கப்படும்" —

சென்னை மேயர் மு.க. ஸ்டாலின் இந்த அற்புதமான யோசனையை வெளியிட்டு அமுல் படுத்தவும் முன்வந்திருக்கிறார்.

பன்னிரண்டாவது வயதிலிருந்து யோகாசனம் பயின்று வரும் நான் சில அபூர்வமான யோகாசன நிலைகளை ஆராய்ந்து பார்த்திருக் கிறேன். குறிப்பாக அரசியல்வாதிகளுக்கு மிகவும் பயன்தரத்தக்க ஆசனங்கள். மு.க. ஸ்டாலின் இவ்வளவு உற்சாகமாக செயல்படும் போது, என் ஆய்வுகளை இனியும் ரகசியமாகப் பாதுகாக்காமல், வெளியிட்டு, அவருக்கு உதவுவது என்று தீர்மானித்து விட்டேன்.

# ஸ்டாலின் பயில சில யோகாசனங்கள்!

### பத்ம அறிக்கையாசனம் :

தரையில் மிருதுவான ஜமக் காளம் விரிக்கவும். அதன் மீது மண்டியிட்டு அமர்ந்து உள்ளங் கையை முழங்கால்கள் மீது பதியச் செய்யவும். நிமிர்ந்த நிலையில் கண்களை மூடி சிந்தித்தால் எந்த அறிக்கைக்கும் எதிர் அறிக்கை பிரமாத மாக சிந்திக்கும். பின்னர் இடது தொடை மீது வலது கால் போட்டு அமர்ந்து முன்கூட்டியே தயாராக எடுத்து வைத்துள்ள பேனா, கிளிப்-பேட் துணைகொண்டு எழுத ஆரம்பித்தால் அட்டகாச அறிக்கைகள் உருவாகும். 'ஆஸ் பத்திரியில் படுத்தபடியே அறிக்கை விடுவது என்ன பிரமாதம்? யோகாசனம் பண்ணிய படியே எங்கள் தலைவரால் எதிர் அறிக்கை விட முடியும்!' என்று தொண்டர்கள் அதைக் கொண்டாடலாம்.

### லஞ்ச ஒதுக்காசனம்

கிழக்கு பார்த்து சூரியோதய நேரத்தில் நிமிர்ந்து நிற்கவும். வலது காலை இடது காலுக்கு முன்னதாகக் கொண்டு போய் குதி கால் உயர்த்தி முன் பாதத்தைத் தரையில் ஊன்றவும். வலக்கரத்தை வலது கண்ணுக்கு மேலாகச் செல்லுமாறு உயர்த்திப் பிடிக்கவும். இடது கரத்தை விரைப்பாகக் கீழ்நோக்கி பின் புறம் நீட்டவும். இந்த ஆசன நிலை, கிட்டத் தட்ட மேனகையை வெறுத்து ஒதுக்கும் விசு வாமித்ரர் காட்டுகிற அபிநய பாவத்தில் இருக் கும். இந்த நிலையில் ஆடாமல் அசையாமல் இருந்து கொண்டு, "மகனே ஆனாலும் தண் டனை உண்டு" என்ற நான்கு சொற்களை மந்திரம் ஜபிப்பது போல் திரும்பத் திரும்பக் கூறி, தியானத்தில் ஆழ்ந்து போகவும். இந்த ஆசனத்துக்கு ஆச்சர்யமான பலன் உண்டு. குறிப்பாக யாராவது பெட்டியுடன் வந்தால் அமைச்சர்கள், எம்.எல்.ஏக்கள் பரபரப்பு அடைய மாட்டார்கள். உடலுடன் சேர்ந்து உள்ளமும் உறுதி பெற்று, மறுக்கும் துணிவு ஏற்படும். உங்கள் மறுப்பையும் மீறி யாராவது பெட்டியைத் திறந்து கொட்டி விட்டுப் போனால்தான் உண்டு.

### மாநாடு தூங்காசனம் :

ஒரு நாற்காலியில் நிமிர்ந்து உட்காரவும். அதன் கரத்தில் முழங்கை ஊன்றவும். கரத்தை மேல்நோக்கி உயர்த்தி, விரல்களால் கன்னத் தைத் தொடவும். கண்களை மூடி இந்நாட்டு ஏழைகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்து வது பற்றி எண்ணவும். உடனே மனம் ஒருமுகப் பட, பட்டிக்காட்டுப் பாமரன் ஒருவன், ஸியல்லோ காரில் ஏறி, அதை ஜம்மென்று செலுத்திக் கொண்டு போகும் காட்சி தோன்றும். கார், 'புர் புர்' என்று மிருதுவாக சத்தமெழுப்பிச் செல்ல, அதை உங்கள் குறட்டை ஒலி என்று யாராவது நினைத்துக் கொண்டால் அது அவர்களு டைய முட்டாள்தனமே தவிர, மாநாடுகளில் பங்கேற்கும் பிரதமர்களுக்கு ஒரு வரப்பிர சாதமாக விளங்குகிற இந்த ஆசனத்தின் தவறல்ல. அரசுக் காரியாலயங்களில் சலிப்புடன் நாற்காலி தேய்ப்பவர்களும் இந்த ஆசனத்தைப் பயின்று பயன்பெறலாம்.

செம்பியன்



## தலைமைக்குத் தண்டனாசனம்:

தலைவியைப் பார்த்தவுடன் 'நடால்' என்று இந்த ஆசனத்தைப் பண்ணக் கூடாது. பொதுவாகவே எந்த ஆசனத்தையும் நிறுத்தி நிதானமாகத்தான் செய்ய வேண்டும். தலைவியைத் தரிசித்து பரவசமுற்று கைகூப்பவும். பக்தியை உள்ளத்தில் குவிக்கவும். பிறகு அவர் பாதங்களை நோக்கி, கூப்பிய கரங்களைத் தாழ்த்தவும். குனிந்து தரையில் உள்ளங்கைகள் ஊன்றி அப்படியே கால்களைப் பின்னுக்குத் தள்ளி, நெஞ்சு பூமியில் படாமல் நெற்றி மட்டும் தொடச் செய்யவும். இந்த ஆசனம் சில காலம் முன்பு வரை தலைவி முன்னிலையில் மட்டுமே செய்யலாம், பயன்தரும் என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் சமீப ஆராய்ச்சிகள், தலைமைதான் முக்கியமே தவிர, அதில் ஆண்பால், பெண்பால் பாகுபாடெல்லாம் கிடையாது என்று நிரூபித்திருக்கின்றன. எத்தனை அதிக எண்ணிக்கையில் இந்த தண்டனாசனம் செய்யப்படுகிறதோ, அத்தனைக்குப் பலன் உண்டு.

## தலைமேல் முழமாசனம்:

வடக்கு திசைநோக்கி நிமிர்ந்து நிற்கவும். கால்கள் ஒன்றியிருக்க, இடதுகரத்தைத் தலைக்கு மேல் உயர்த்தி கட்டை விரலை உச்சந்தலையில் ஊன்றவும். சுண்டு விரலை மேல் நோக்கி நீட்டி காற்றிலே ஒரு சாண் அளக்கவும். அடுத்து வலக்கரத்தையும் தலைக்கு மேல் உயர்த்தி, அதன் முழங்கை சுண்டு விரலின் சிகரத்தைத் தொடுமாறு வைத்து முழம் போடவும். இது சுலபத்தில் சித்தியாகாது. கொஞ்சம் கஷ்டமான ஆசன நிலை தான். ஆனால் விடாமுயற்சியுடன் ஈடுபட்டால் நாளடைவில் வெற்றி பெறலாம். இந்த ஆசனம் பயிலும்போது, "சாண் போனாலென்ன, முழம் போனாலென்ன" என்று மனதுக்குள் ஜபித்துக் கொண்டேயிருந்தால் சிரமம் தெரியாது. பாஸ்வான் மேனியா, சிதம்பரம் ஃபோபியா போன்ற வியாதிகளை கட்டுப்படுத்த இந்த ஆசனம் ஒரு சஞ்சீவி மூலிகை போன்றது. விலைவாசி உயர்வு என்ற பீதியை அடியோடு நீக்கவல்லது. அதற்குப் பதில் யாரிடம், என்ன பொய் சொல்லி, எப்படி கடன் வாங்கலாம் என்ற ஆரோக்கிய சிந்தனை உருவாகும். இந்த ஆசனத்தை ஆண், பெண், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பேதமின்றி மக்கள் அனைவரும் செய்வது அவசியம் என்று சொன்னால் போதாது; தேசபக்தி என்பதே இதுதான் என்று கூடக் கூறலாம்!

## முடிவுரை:

சனி, ஞாயிறு கிழமைகளில் அண்ணா நகர் பூங்காவுக்குச் சென்று இந்த ஆசனங்களை ஸ்டாலினோ அல்லது அவரது உத்தரவு பெற்றவரோ மக்களுக்குச் சொல்லித் தருகிறாரா என்று கவனிக்கவும். இல்லையெனில் இவற்றைத் தெரிந்து வைத்துக் கொண்டால் ஸ்டாலினுக்கு நீங்கள் இலவசமாக சொல்லித் தரலாம் பாருங்கள்!




## படித்ததில் பிடித்தது :

# இது அடுத்தவர் டைரி!

**ப**யணக் கட்டுரை எழுதுபவர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். கட்டுரை எழுதுவதற்காகப் பயணம் மேற்கொள்பவர்கள்; ஊர் சுற்றிய அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டே ஆக வேண்டும் என்கிற உந்துதலால் எழுதுபவர்கள்.

ஃபோட்டோகிராஃபர் யோகா, இந்த இரண்டு பிரிவிலும் இல்லை. தொழில்ரீதியிலும் தனிப்பட்ட முறையிலும் உலகமெல்லாம் சுற்றிவிட்டு (ஆர்ட்டிக், அண்டார்ட்டிக் கண்டங்கள்தான் பாக்கி.) படங்கள் எடுத்தவர், தம் அனுபவங்களை டைரியில் எழுதுவது மாதிரி அவ்வப்போது குறித்து வைத்திருக்கிறார். தற்செயலாக அது புத்தகமாகியிருக்கிறது. ஆக, இது அடுத்தவர் டைரி. படிக்க சுவாரஸ்யம்தானே?

இந்த நூற்றுப் பதினொரு பக்கப் புஸ்தகத்தைப் படிக்கப் படிக்க, ஒரே ஒரு ஆச்சர்யம்தான் கடைசி வரை முந்திரிக்கொட்டை மாதிரி துருத்திக் கொண்டு மனத்தில் நிற்கிறது. கேமராவில் 'க்ளிக்கர்' அட்ஜெஸ்ட்மெண்ட்டுக்கும் செக் புத்தகங்களில் உபயோகிக்கவும் மட்டுமே பேனா தேவைப்படும் இவரால், எப்படி இப்படி சுவாரஸ்யமான விஷயங்களை ஒப்பனை செய்யாமல் தர முடிந்திருக்கிறது?

'காசியில் இறந்து போகிறவர்களை மட்டுமில்லை; வெளியூர்களிலிருந்தெல்லாம் கூட விமானத்திலும் ரயிலிலும் பிணங்களைக் கொண்டுவந்து இங்கே எரிக்கிறார்கள். ஆனால் பிண நாற்றமே தெரியவில்லை. ஒருவேளை அந்தச் சூழலில் பழகிப் போய் விடுமோ என்னவோ என்று நினைத்துக் கொண்டேன்.'

– இது காசிக்குப் போன அனுபவம்.

'என்னமோ நாகரிக வளர்ச்சியடையாத ஆதிவாசிகள், மலைவாழ் மக்களைச் சந்திக்கப் போகிறோம் என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் ஒரு மகிழ்ச்சியான அதிர்ச்சி. பெண்கள் மிக மார்டனாக இருந்தார்கள்...'

– இது நாகாலாந்து ரிப்போர்ட்டில் வருகிறது.

மலேசியா, சிங்கப்பூர், லட்சத்தீவு, தென்னாப்பிரிக்காவிலிருந்து, பக்கத்து ஊட்டி, சபரிமலை, திருப்பதி வரை சுற்றிச் சுற்றி சுற்றி வந்து, எத்தனைவித மனிதர்களை இவர் பார்த்திருக்கிறார் என்று வியக்கிறபோது, 'நீங்களும் பாருங்கள்' என்று ஆங்காங்கே எடுத்த சில போட்டோக்களையும் நூலில் தந்திருக்கிறார்.

**வி**த்தியாசமான கதைகளுக்காக சிண்டைப் பிய்த்துக் கொள்ளும் சினிமாக்காரர்களுக்கு இந்தப் புத்தகத்தில் இரண்டு, மூன்று 'ப்ளாட்'கள் இருக்கின்றன.

காஷ்மீர் படகு வீட்டுப் பணியாளனை – அவன் திருமணம் ஆனவன் என்று தெரிந்த பின்னும் காதலிக்கிற முஸ்லிம் பெண்ணைப் பற்றிய நிஜக்கதைக்கு – சில்வர்ஜூப்ளி கேரண்டி.

யோகா குறிப்பிட்டிருக்கும் கடல் பயண அனுபவங்களில் சில சிறுகதைகள் ஒளிந்திருக்கின்றன. கட்டுமரத்தில் கேமராவை வைத்துக் கொண்டு படாத பாடுபட்டிருக்கும் அனுபவம் தமாஷாக இருக்கிறது.

நேபாளப் பயணத்தில் கடிகார நேரம் மாற்றாததால் விமானம் பிடிப்பதில் பட்ட சிரமத்தில் ஒரு (சீதாப்பாட்டி) அப்புசாமிக் கதை இருக்கிறது.

பத்திரிகைகளும் சரி; பப்ளிஷர்களும் சரி. பயணக் கட்டுரைகளுக்கு அவ்வளவாக முக்கியத்துவம் தந்த காலங்கள் கடந்து போய்விட்ட சூழ்நிலையில் இந்தப் புத்தகம் ஓர் இனிய வரவு.

யோகாவைப் போல் உலகம் முழுக்க இல்லாவிட்டாலும், உள்ளூர் முழுக்கவாவது சுற்றிப் பார்க்கிற ஆசையை உண்டாக்கும்.

**- நிவேதனா**

*(பூலோகம் ஆனந்தத்தின் எல்லை/யோகா/காமதேனு பப்ளிகேஷன்ஸ் வெ., 2, ஜெய்சங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33/ ரூ. 45.00)*

பாதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

# அன்புடன் நினைத்திடுங்கள். பரிசினை வென்றிடுங்கள்.




உங்கள் வாழ்க்கையில் எதிர்பாராத திருப்புமுனையோ அல்லது தவிர்க்க முடியாத நெருக்கடியோ ஏற்பட்டிருக்கிறதா? அத்தகைய சமயத்தில் சமய சஞ்சீவியாக யாரேனும் உங்களுக்கு தெரிந்தோ தெரியாமலோ உதவியிருக்கிறார்களா? அப்படி உதவியவர் உறவினராகவோ அல்லது நண்பராகவோ இருக்கலாம். அந்த நிகழ்ச்சியை ஒரு சுவையான கட்டுரையாக எழுதி எங்களுக்கு அனுப்புங்கள். அவ்வாறு சமய சஞ்சீவியாக உதவியவரை அன்புடன் நினைவு கூர்ந்து பாராட்டுவதற்கு இது ஒரு அரிய தருணம். அது மட்டுமின்றி உங்கள் கட்டுரைகள் பரிசுபெறும் வாய்ப்பையும் ராம் காஷ்யப் உங்களுக்கு அளிக்கிறது. ஆமாம், சிறந்த கட்டுரைகளைப் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுப்பதோடு, அவற்றுள் மிகச் சிறந்தவற்றுக்குப் பரிசுகளும் வழங்குகிறோம்.

**நிபந்தனைகள் :**

- கட்டுரைகள் முழுத்தாளில் ஒரு பக்கத்துக்குள் இருக்க வேண்டும்.
- உறையின் மீது சமய சஞ்சீவி கட்டுரைப் போட்டி எனக் குறிப்பிட வேண்டும்.
- கட்டுரைகளைச் சுருக்கியும் திருத்தியும் வெளியிடும் உரிமை ராம் காஷ்யப் நிறுவனத்துக்கு உண்டு.
- கட்டுரைப் போட்டி தொடர்பாகக் கடிதப் போக்குவரத்து எதுவும் வைத்துக் கொள்ளப்பட மாட்டாது.
- பரிசு பெற்றவர்கள் விவரம் ஏப்ரல் மாத இறுதியில் பத்திரிகைகளில் பிரசுரமாகும்.
- பரிசு பெறும் கட்டுரைகளை நடுவர் குழுவினர் தேர்ந்தெடுப்பார்கள். அவர்களுடைய முடிவே இறுதியானது.

**முந்துங்கள்!**
கட்டுரைகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் மார்ச் 15, 1997.

**ரூ.25,000** மதிப்புள்ள தங்க நகைகள்
**1-ம் பரிசு** (ஒரு நபருக்கு)

**ரூ.5,000** மதிப்புள்ள தங்க நகைகள்
**2-ம் பரிசு** (இரண்டு நபருக்கு)



**ரூ.2,500** மதிப்புள்ள தங்க நகைகள்
**3-ம் பரிசு** (மூன்று நபருக்கு)

**100 ஆறுதல் பரிசுகள்**
**4 கிராம்** மதிப்புள்ள வெள்ளி நாணயங்கள்

கட்டுரைகளை அனுப்ப வேண்டிய முகவரி :



**Ram Kaashyap**
Chits Private Limited
14/3, தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017.
போன் : 4341513, 4330034

**சீட்டில்லா சேமிப்பு; இணையற்ற தீர்வு**

Insight-47 A

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

# 'நான் எடுத்த நல்ல முடிவு'



''ஹலோ ! ஒரு முக்கியமான விஷயம் சொல்றேன் கேளுங்க . . . நான் வந்து என் வீட்டுல ஒரு மாசத்துக்கு நாலு கிலோ கடலெண்ணெய் வாங்கிட்டு இருந்தேன். இப்ப கே.கே.ஆர். பாமாயில் வந்தப்புறம் அதையும் நாலு கிலோ வாங்கினேன். ஆனால் அதிலே ஒரு கிலோ மீந்திடுச்சி. ஏன்னா இந்த எண்ணெய் ஆண்டுவருது ... அதனால எனக்குப் பணமும் நிறைய மிச்சமாகுது. சமையலும் ரொம்ப நல்ல டேஸ்ட்டா இருக்கு... இனி மேல என் வீட்டிலே எப்பவுமே கே.கே.ஆர். பாமாயில் தான் . . . ஹலோ . . . உங்க வீட்டுல எப்படி ?''

M. சௌந்திரி

**M. சௌந்திரவள்ளி**

டெலிபோன் ஆப்பரேட்டர்







ADEPT/KKR/P/97



**KKR**

பாம் ஆயில் (இந்தியா) லிட்.,
126, Dr. ராதாகிருஷ்ணன் சாலை,
மைலாப்பூர், சென்னை - 600 004.
Ph: 8548393, 8548394, 8548395.

*கே.கே.ஆர். பாமாயில் -*
*தாய்மை மற்றும் முழு குடும்பத்தின் ஆரோக்கியம்.*